

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி–16] [ஒளி–9

# ஸ்ரீக்ருஷ்ணஸூரிக்ரந்த ஸம்ரக்ஷணம்

[மாமுனிகளால் ரஹஸ்ய வ்யாக்யானங்களில் எடுக்கப்பட்ட கத்ய வ்யாக்யானம், ஜிதந்தே வ்யாக்யானம், பரந்தரஹஸ்யம், மாணிக்க மாலை முதலான கிரந்தங்கள் பரமகாருணிகராண பெரியவாச்சான் பிள்ளை யருளியவையே என்று நிரூபிக்கும் நூல்.]

## முகவுரை

1. த்ரௌபதீப்ரபத்தி விவாதத்திலே வெற்றிகாண முடியாமை யாலே, கடுங்கோபங்கொண்டு, "ஸத்யம் சபே, இஹ ஜந்மநி தேவரீருடைய ப்ரஸ்தாவம் அடியேன் கொள்ளேன்" என்று 26–6–63 ல் எழுதிய ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமி, சில நாட்களுக்குள்ளேயே பழைய பரந்தரஹஸ்ய விவாதத்தை பக்தன் பத்திரிகையில் கிளப்பி யிருப்பதைச் சென்ற இதழில் தெரிவித்தோம். (174) ஸ்ரீராமா நுஜனிலும் இதைக்கிளப்பி "நல்வார்த்தை நானூறு" என்னும் கட்டுரையில் அது பற்றி இருபது வார்த்தைகள் எழுதி அதை அடியேனுக்கும் அனுப்பியிருக்கிறுர். (ஸ்ரீராமாநுஜன் 173 அடியே னுக்கு அனுப்பப்படவில்லை.) ஸுதர்சனம் இரண்டாவது ஸம்புடம் நடைபெறும்போது (இன்றைக்குப் பதினைு வருடங்களுக்கு முன்) பரந்தரஹஸ்யம், கத்ய வ்யாக்யானம் முதலான கிரந்தங்களின் கர்த்தா பெரியவாச்சான்பிள்ளையா, (நாயனுர்) ஆச்சான்பிள்ளையா என்பது குறித்து எந்தையாருக்கும், காஞ்சீஸ்வாமிக்கும் பெரிய தோர் விவாதம் நடந்தது. முற்குறித்த கிரந்தங்கள் நாயனுராச்சான் பிள்ளையுடையவையே யொழியப் பெரியவாச்சான்பிள்ளையுடையவை யன்று என்று ஸாதிக்க நினைத்துக் காஞ்சீஸ்வாமி ஸ்ரீராமாநுஜனில் எழுதிய "ஆச்சான்பிள்ளையஷ்டாத்யாயீ" முதலான நூல்களில் உள்ள ஒவ்வொரு வாதத்தையும் கண்டித்து எந்தையார் "ஷோட சாத்யாயீ" முதலான நூல்களை எழுதினுர். ஸுதர்சனம் இரண்டா வது ஸம்புடத்தின் முடிவோடு அவ்விவாதமும் ஒருவாறு முடிந்தது.

2. அவ்விவாதம் முடியும் சமயத்தில் அடியேன் சென்னையில் சட்டக்கல்லூரியில் பயின்று வந்தேன். மாமுனிகளால *தத்வத்ரய வ்யாக்யானத்தில் பலவிடங்களில் எடுக்கப்பட்டிருக்கும் தத்வத்ரய விவரணம் கிடைக்குமா என்று அடையாறு ஓலைச்சுவடி நிலயத்திலும், (ஓரியண்டல மானுஸ்கிரிப்ட்ஸ லைப்ரரி எனப்படும்) சென்னை ஓலைச்சுவடி நிலயத்திலும் தேடினேன். அப்போது ஆச்சான் பிள்ளையருளிய **தத்வத்ரயஸங்க்ரஹம்** எனனும் ஓலைச் சுவடி சென்னை ஓலைச்சுவடி நிலயத்தில் நிதி கிடைத்தாற்போலே கிடைத்தது. [இபபோதும் அஙகு உள்ளது.] எவ்வளவு முயன்றும் தத்வத்ரய விவரணம் கிடைக்கவில்லை. அந்தத்தத்வத்ரய ஸங்க்ரஹத்தை ஆராய்ந்தபோது, அதிலுள்ள பல ஸூத்ரங்கள் மாமுனிகளால் எடுக்கப்பட்டிருப்பதும், அநநூலை ஓரிடத்தில் பெரிய வாச்சான்பிள்ளை அருளியதாகவும், முன்னும் பின்னும் மூன்றிடங்களில் ஆச்சான்பிளளையருளியதாகவும் மாமுனிகள் குறிப்பிட்டிருப்பதும், இதற்கு விவரணமாயமைந்த தத்வத்ரய விவரணமும் ஆச்சான்பிள்ளையால் அருளிச் செய்யப்பட்டதென்பதும் வெளியாயின. இவற்றிலிருந்து மாமுனிகள் பெரியவாச்சான்பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்று பலவிடங்களில் நிர்த்தேசித்துள்ளார் என்பது மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளிலிருந்தே அசைக்கமுடியாதபடி தேறுகிறது. இவற்றை ஸமய விசேஷத்தில் ஸ்ரீவைஷ்ணவவுலகிற்கு வெளிப்படுத்தும்படி எந்தையாருடைய நியமனத்தைப் பெற்றிருந்த அடியேன், விளம்பி ஸ்ரீஜயந்தியில் முமுக்ஷுப்படி வ்யாக்யானத்தை ஸ்ரீஸூக்திமாலா 19-வது மலராக வெளியிடும் போது, தத்வத்ரயஸங்க்ரஹத்தையும் வெளியிட்டு, முகவுரையில் மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளைக்கொண்டே மாமுனிகள் பெரிய வாச்சான்பிள்ளையையே ஆச்சான்பிள்ளையெனக் குறிப்பிட்டிருக்கிறார் என்பதையும், அதனாலேயே பரந்தரஹஸ்யாதி கர்த்தா பெரிய வாச்சான்பிள்ளையாகவேயிருக்கமுடியும் என்பதையும் நிலைநிறுத்தியெழுதி, ஸுதர்சனம்-130 லும் முகவுரையையும், தத்வத்ரயஸங்கரஹத்தையும் வெளியிட்டு, ஸ்ரீகாஞ்சீஸ்வாமிக்கும் மலர்-19 ஐயும், ஸுதர்சனத்தையும் அனுப்பினேன், அதைக்கண்டபின்பு 30-9-58ல் எழுதிய ஸ்ரீமுகத்தில, "**மாமுனிகளே நேரில் ஸேவை ஸாதித்துப் பெரியவாச்சான்பிள்ளையைத்தான் ஆச்சான்பிள்ளையென்று எழுதினேனப்பா என்று ஸாதித்தாலுங்கூட என்மனம் கொள்ளாது**" என்று எழுதினர் காஞ்சீஸ்வாமி. த்ரௌபதீப்ரபத்தி விஷயத்தில் ஸுதர்சனத்தை வெற்றிகொள்ள முடியவில்லையே என்னும் மனக்குறையைப் போக்கிககொள்ள, சென்ற மாதம பக்தன

* வானமாமலை மடத்தாரால் வெளியிடப்பட்டுள்ள தத்வத்ரய வ்யாக்யானம் நம்மிடம் கிடைக்கும். விலை தபாற் கூலியுள்பட ரூ 3-50.

பத்திரிகையிலும், இம்மாதம் ஸ்ரீராமானுஜனிலும் இப்பரந்தரஹஸ்ய விவாதத்தைக் கிளப்பி, அடியேன், தத்வத்ரயஸங்க்ரஹத்தைக் கொண்டு நிலைநிறுத்தியிருக்கும் நிரூபணங்களுக்கும், ஷோடசாத்யாயீ முதலானவற்றில் எந்தையார் அருளிய நிரூபணங்களுக்கும யாதொரு பதிலையும கூறுமல், எந்தையாராலும் அடியேனாலும் தள்ளப்பட்ட வாதங்களையே திருப்பியெழுதி ஆறுதலடைய நினைக்கிறார் காஞ்சீஸ்வாமி. இத்துடன் நில்லாமல் "இந்த ப்ராமணிகத்வத்தைப் பரந்தரஹஸ்ய விஷயததில் ஏற்றுக்கொள்ளமுடியாமற் போனது......உலகம் பரிஹஸிக்கநேருமேயென்கிற கூச்சத்தினால் என்று முடிவடைந்திட்டது. பெரியோர்கட்கு இது தகுதியாமோ?" என்று பரமபதமடைந்த எந்தையாரை அஸ்தானே தூஷிக்கிறார். எந்தையாரும், அடியேனும் பற்பல ப்ரமாணங்களைக் காட்டி விவாதாஸ்பதமான க்ரந்தங்கள் பெரியவாச்சான்பிள்ளையுடையவையே என்று நிரூபித்திருக்கிறோம். அவற்றுக்கு யாதொரு பதிலையும் கூறுமல் தள்ளப்பட்ட வாதங்களையே திருப்பியெழுதுவது இவர்க்கே அப்ராமாணிகத்வத்தை நிலைநிறுத்தும். "மாமுனிகள் நேரேவந்து ஸாதித்தாலும் நான் ஒப்புக்கொள்ளமாட்டேன்" என்று இவரெழுதியதும், அடியேனுடைய ப்ரஸ்தாவம் செய்வதில்லை என்று ஸத்யம் செய்துவிட்டு, உடனே பழைய விவாதத்தைக் கிளப்பி அடியேனை இவர் வம்புக்கு இழுப்பதுமே பெரியார்கட்குத் தகாத செயலாகும். நிற்க; பக்தன் பத்திரிகையிலும், ஸ்ரீராமானுஜனிலும் எழுதியிருப்பவை மிகவும் பொருந்தாதவை என்றும், விவாதாஸ்பதமான க்ரந்தங்களை அருளியவர் பெரியவாச்சான் பிள்ளையே என்றும் இந்நூலில் நடுநிலைநின்று ஆராய்ந்து நிலைநிறுத்துவதன் மூலம் ஸ்ரீக்ருஷ்ணஸூரியென்னும் பெரியவாச்சான் பிள்ளையின் பல கிரந்தங்களை ஸம்ரக்ஷிப்போம். தூஷணபரிஹாஸங்களில் இழியாமலும், பிறர்பெயரில் நூல்களை வெளியிடாமலும், வேண்டியவர்களிடமிருந்து அபிப்ராய பத்திரிகைகளை வெளியிடாமலும் நம்முடைய நிரூபணங்களுக்கு பதிலெழுத வல்லமையுண்டாகில், அதை வரவேற்கிறோம்.

முகவுரை முற்றிற்று.

## இனி முதலத்தியாயம்

### மாமுனிகளும், ஆச்சான்பிள்ளையும்

3. இவ்விவாதத்தில் ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியின் உயிரான வாதம் பின்வருமாறு:- தத்வத்ரயம் அசித்ப்ரகரணம் 27-வது சூர்ணையின் வ்யாக்யானத்தில் "தத்வத்ரயவிவரணத்தில் ஆச்சான்பிள்ளை ஒரு விதமாக ஆவரணக்ரமத்தை அருளிச்செய்தார்: தத்வநிரூபணத்

திலே (வாதிகேஸரி) ஜீயர் மற்றொருவிதமாக ஆவரணக்ரமத்தை அருளினர். பிள்ளைலோகாசார்யர் சுருக்கமாகச் சொல்லுகிறவரா கையாலே, ஆவரணக்ரமத்தை அருளிச்செய்யாமலே விட்டுவிட்டார். பெரியவாச்சான் பிள்ளையும் இப்படியன்றோ அருளிச்செய்தது.'' என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை அருளியிருக்கிறார். இதி லிருந்து விவரணகாத்தாவான ஆச்சான்பிள்ளை பெரியவாச்சான பிள்ளையிலும் வேறுபட்டவர் எனறு தெரிகிறது. இதிலிருநதும், ஈச்வரப்ரகரணம் 9-வது சூர்ணையின் வ்யாக்யானத்திலிருநதும பெரியவாச்சான்பிள்ளை ஸாதித்த சுருக்கமானதொரு தத்வத்ரய க்ரந்தத்திற்கு அவருடைய குமாரரான (நாயனர்) ஆச்சான்பிள்ளை விரிவான வியாக்கியானமாகத் தத்வத்ரய விவரணத்தை வெளி யிட்டிருக்கிறார் என்று விளங்குறது. ஆகையால் மணவாள மாமுனிகள் ரஹஸ்ய வ்யாக்யானங்களிலே, பரந்தரஹஸ்யம், மாணிக்கமாலை, கத்ய வ்யாக்யானம், ஜிதந்தே வ்யாக்யானம், தத்வத்ரயவிவரணம் ஆகிய கிரந்தங்களின் கர்த்தாவாக எடுக்கும் ஆச்சான்பிள்ளை நாயனராச்சான்பிள்ளையேயொழியப் பெரியவாச் சான் பிள்ளையல்லர் எனறு தேறுகிறது.

4. முன் பாராவில் சொல்லப்பட்ட காஞ்சீ ஸ்வாமியின் வாதத் தைத் தத்வத்ரய ஸங்க்ரஹம் என்னும் நூல் அடியறுக்கிறது. அதையும் அநுபந்தமாக இந்நூலுடன அச்சிட்டிருக்கிறோம். தத்வ த்ரயம் அசித்ப்ரகரணம 27-வது சூர்ணையின வ்யாக்யானத்தில், "பெரியவாச்சான்பிள்ளையும் இப்படியிறே அருளிச்செய்தது.'' என்று மாமுனிகள் அருளிச்செய்தது தத்வத்ரய விவரணத்திற்கு மூலமான (இப்போது அச்சிடப்பட்டிருககும்) தத்வத்ரயஸங்க்ரஹம் என்னும் கிரந்தத்தில 13 முதல் 22 வரையுளள சூர்ணைகளில் (பிள்ளைலோகாசார்யரைபபோல்) ஆவரணக்ரமத்தை அருளிச் செய்யாமல் அருளியிருககும ஸூகதிகளையே விஷயமாகக்கொண் டது என்பது தத்வத்ரய ஸங்க்ரஹத்தை ஸேவிப்பவர்களுக்குப் புலப்படும. ஆகையால், இத்தத்வத்ரய ஸங்க்ரஹத்தை அருளிய வர் பெரியவாச்சான்பிள்ளையே என்று ஸித்தித்தது. தத்வதரய ஸங்கரஹகர்த்தாவான இப்பெரியவாச்சான பிள்ளையை இதற்கு முன்னும பின்னும ஆச்சான்பிள்ளையென்றும மாமுனிகள் குறிப் பிட்டிருப்பதைக காட்டுவோம் இனி. தத்வத்ரயம் ஈச்வரப்ரகரணம் 48-வது சூர்ணையின் [க்ரந்த முத்ராபக ஸபைப்பதிப்புப்படி 47-வது சூர்ணையின்] வியாக்கியானத்தில், "'இவ்வண்டத்திலே ப$_3$த்$_3$த$_4$ாத்ம ஸமஷ்டிபூ$_4$தனை ப்$_3$ரஹ்மா பிறக்கும்; இதுக்குக் கீழ் ஸ்வஸங்கல்பத்தாலே எம்பெருமான் தானே ஸ்ருஷ்டித்தருளும்; இதுக்கு மேல் ப்ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய் நின்று ஸ்ருஷ் டித்தருளும்' என்று ஆச்சான்பிள்ளை அருளிச்செய்கையாலும்''

என்று மாமுனிகள் அருளியுள்ளார். இதில் ஆச்சான்பிள்ளை யுடையவையாக எடுக்கப்பட்ட ஸ்ரீஸூக்திகள் தத்வத்ரய ஸங்க்ர ஹத்தில் 25, 26-வது சூர்ணைகளாக அமைந்திருப்பதைக் காணலாம். ஆகையால் பெரியவாச்சான் பிள்ளையையே மாமுனிகள் ஆச்சான் பிள்ளையென்று குறிப்பிட்டார் என்று ஸித்தித்தது.

5. தத்வத்ரயம் ஈச்வரப்ரகரணம் ஒன்பதாவது சூர்ணை வ்யாக் யானத்தில், "எம்பெருமானுடைய திவ்யாத்மகுணங்களாவன— ஜ்ஞான சக்த்யாதி₂ஷட்₃கு₃ணங்களும், அதிலே பிறந்த ஸௌசீல் யாதி₃களும்" என்ற தத்வத்ரய ஸங்க்ரஹ (சூர்ணை-45) ஸ்ரீஸூக்தியை எடுத்து, "அதிலே பிறக்கையாவது வஸ்தூத்கர்ஷாபாத₃க ஷாட்₃ கு₃ண்யாயத்தகு₃ணபூ₄ர்வமாகை" என்று அதற்கு விவரணத்திலே ஆச்சான்பிள்ளை அர்த்தமருளினார் என்று மாமுனிகள் அருளியிருக் கிறார். இதிலிருந்து தத்வத்ரய ஸங்கரஹத்துக்கு வ்யாக்யான மாகவே தத்வத்ரயவிவரணம் அமைந்ததென்று தெளிவாகிறது.

6. தத்வத்ரவ்யாக்யான அவதாரிகையில் "நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர், ஆச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களுடைய ப்ரபந்த நிர்மாணத்துக்கும் கருத்து இதுவிறே." என்று அருளி யுள்ளார் மாமுனிகள். இங்கு குறிக்கப்பட்ட ஆச்சான் பிள்ளையும் மூலமான தத்வத்ரய ஸங்க்ரஹகர்த்தாவான பெரியவாச்சான் பிள்ளை யாகவே இருக்கமுடியும். 'ப்ரபந்த நிர்மாணம்' என்னும் பதம் மூலக்ரந்தத்தைக் குறிப்பதேயன்றோ யுக்தம். மேலும் பிள்ளை லோகாசார்யருக்கும் பூர்வாசார்யராகக் குறிக்கப்படும் ஆச்சான் பிள்ளை பெரியவாச்சான்பிள்ளையாயிருக்கமுடியுமேயொழிய, உல காசிரியரிலும் சிறியவரான நாயனாராச்சான்பிள்ளையாக முடியாது.

7. தத்வத்ரயம் சித்ப்ரகரணம் மூன்றுவது சூர்ணை வ்யாக் யானத்தில், "நடுவிற்றிருவீதிப்பிள்ளை பட்டரும், ஆச்சான்பிள்ளை யும் முதலான ஆசார்யர்கள் தத்வத்ரயம் அருளிச்செய்கிறவிடத்தில் அசிதுபக்ரமமாக அருளிச்செய்தார்கள்." என்று அருளினார் மாமுனிகள். தத்வத்ரய ஸங்க்ரஹம் அசிது₃பக்ரமமாகவே அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. இதிலிருந்து மூலமான அந்த கிரந்தத்தை அருளிய பெரியவாச்சான் பிள்ளையையே ஆச்சான்பிள்ளையென்று மாமுனிகள் இவ்விடத்திலும் குறிப்பிடுகிறார் என்பது தெளிவு. ஆக, பெரியவாச்சான் பிள்ளையென்று நடுவில் குறிப்பிடப்பெற்ற வரையே தொடக்கத்தில் இரண்டிடங்களிலும், கடைசியில் ஓரிடத் திலும் மாமுனிகள் ஆச்சான் பிள்ளையென்றும் குறிப்பிட்டிருக்கிறார் என்பது மறுக்கவொண்ணாதது.

8. இதனால் தத்வத்ரய ஸங்க்ரஹத்தையருளியவர் பெரிய வாச்சான்பிள்ளையே என்பதும் அவரை மாமுனிகள் ஆச்சான்

பிள்ளையென்று குறிப்பிட்டுள்ளார் என்பதும உறுதியாகிறது. தத்வத்ரய விவரணமருளியவரையும ஆச்சான்பிள்ளையென்றே குறிப்பிடுவதால் அவரும் பெரியவாச்சான பிள்ளையென்று கொள்வதே தகும்.

9. இவற்றிலிருந்து மாமுனிகளால் ரஹஸ்ய வ்யாகயானங்களில் பரந்தரஹஸயம், மாணிக்கமாலை, கத்யவ்யாக்யானம், ஜிதந்தேவ்யாக்யானம் முதலான க்ரந்தங்களை அருளியவராகக் குறிப்பிடப்பட்ட ஆச்சான் பிள்ளை பெரியவாச்சானபிள்ளையே என்பது தெளிவாகிறது.

10. இனி, மத்யஸ்தர்கள் ஒரு கேளவி கேட்கக்கூடும:— "மாமுனிகள் பெரியாழ்வார் திருமொழி வ்யாகயானத்தில் பலவிடங்களில் தம்முடைய ஆசார்யருக்கு ஆசார்யரான நாலூராச்சான் பிள்ளையையும் ஆச்சான்பிள்ளையென்றே குறிப்பிடுகிருரே; பெரியவாச்சான்பிள்ளையுடையதாகத் தெளிவாக அவரால் அருளப்பட்ட தத்வத்ரயஸங்க்ரஹம ஒன்று தவிர, மற்ற ரஹஸ்ய கிரந்தங்களான பரந்தரஹஸ்யம். மாணிக்கமாலை, கத்யவ்யாக்யானம், ஜிதந்தேவ்யாக்யானம, தத்வத்ரயவிவரணம் ஆகிய எலலா கிரந்தங்களும், அல்லது அவற்றில் சிலவோ, பலவோ அந்த நாலூராச்சானபிள்ளையுடையதாகவும் இருக்கலாமே" என்று. இது நியாயமான கேள்வி. மாமுனிகளின் கிரந்தஙகளை மாத்திரம வைத்துக்கொண்டு பேசினல, இக்கேள்விக்கு எவராலும நேர்மையோடு பதில சொல்லமுடியாது. ஒவ்வொரு கிரந்தத்தையும், மாமுனிகளுக்கு முற்பட்டவர்களும, பிற்பட்டவர்களில் அவருககு ஸமீபகாலததில இருந்தவர்களும் யாருடையதாக வழஙகியிருக்கிருர்களா என்பதைக் கொண்டே இக்கேள்விக்கு விடைகாணமுடியும். ஆகையால், அடுத்த அத்தியாயாயத்தில் இதரக்ரந்தங்களைக கொண்டு பரநதரஹஸ்யாதிகளின் கர்த்தா யார் என்று நிர்ணயிப்போம.

11. மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளில் ஒரு விஷயத்தை நடுநிலையாளர்கள் குறிக்கொளளவேணடும். மாமுனிகள இருவரை ஆச்சான்பின்ளையெனறு குறிபபிட்டிருக்கிருர் என்பது தெளிவு. (1) பெரியாழ்வார் திருமொழியில் நாலூராச்சான்பிள்ளையை ஆச்சான்பிளளையென்று குறிப்பிட்டிருக்கிருர். (2) தத்வத்ரய வ்யாக்யானத்தில தத்வத்ரயஸங்க்ரஹகர்த்தாவான பெரியவாச்சான் பிள்ளையை ஆச்சானபிள்ளையெனறு குறிப்பிட்டிருக்கிருர். நாயனுராச்சான்பிள்ளையை அவர் ஆச்சான்பிள்ளையென்று குறிப்பிட்டார் என்பதற்கு எவ்விதப் பிரமாணமுமிலலை. பொதுவாக நம்முடைய பூர்வாசார்யர்களுடைய கிரந்தங்களையும், ப்ராசீனர்களான மஹான்களுடைய கிரந்தங்களையும நோககினல நாயனுராச்சான்பிள்ளையை

நிர்த்தேசிக்கும்போது நாயனார் என்னும் பகுதியை விடாமலே நிர்த்தேசிக்கிறார்களேயொழிய, அதைவிட்டு, 'ஆச்சான்பிள்ளை' என்று நிர்த்தேசிப்பதாகத் தெரியவில்லை, அப்படி எங்கேயாவது எவராவது நிர்த்தேசித்திருப்பதாகக் காட்டினாலும், மாமுனிகள் தத்வத்ரயஸங்க்ரஹ கர்த்தாவான பெரியவாச்சான்பிள்ளையை ஆச்சானபிள்ளையென்று குறித்திருப்பதை இல்லை செய்யமுடியாது. அப்போதும் பரந்தரஹஸ்யம், கத்யவ்யாக்யானம், மாணிக்கமாலை, ஜிதந்தேவ்யாக்யானம், தத்வத்ரயவிவரணம் ஆகிய கிரந்தங்களை அருளியவர்கள் மூவரில் எந்த ஆச்சான்பிள்ளை என்பதை இதர கரந்தங்களைக் கொண்டுதான் நிர்ணயிக்கமுடியும்.

12. துரதிருஷ்டவசமாக தத்வத்ரய விவரணம் இப்போது இல்லை; நாயனாராச்சான்பிள்ளையுடையதென்று ஸர்வஸம்ப்ரதிபன்னமானவையும், தெளிவான அகச்சான்றுகளை உடையனவுமான சது:ச்லோகீ வ்யாக்யானம், தத்வஸங்க்ரஹம், சரமோபாய நிர்ணயம், சரமரஹஸ்யத்ரயம், முக்தபே₄ாக₃ாவளி ஆகிய கிரந்தங்களை மாமுனிகள் எடுக்கவேயில்லை; பெரியவாச்சான்பிள்ளையுடையதென ஸர்வஸம்ப்ரதிபந்தமான திவ்யப்ரபந்தவ்யாக்யானங்கள் ஸ்தோத்ரவ்யாக்யானம் ஆகியவற்றை எடுக்கும்போது கர்த்ருநாம நிர்த்தேசம் செய்யவில்லை; தனிச்லோகத்தை எடுக்கவேயில்லை. விவாதாஸ்பதமான கிரந்தங்களில் ஒன்றில் கூட நாயனாராச்சான் பிள்ளையுடையதென்றோ, நாலூராச்சான்பிள்ளையுடையதென்றோ. நிரூபிக்கததக்க அகச்சான்று ஒன்று கூட இல்லை. [பெரியவாச்சான் பிளளையருளியவை இந்நூல்களில் சில என்று நிரூபிக்க ஐந்தாமத்தியாயத்தில சில அகச்சான்றுகளைக் காட்டப்போகிறோம்.] இந்நிலையில் விவாதாஸ்பதமான கிரந்தங்கள் எந்த ஆச்சான்பிள்ளையுடையவை என்று உறுதியாக நிர்ணயிக்க மாமுனிகளுக்கு முன்னும், பின்னும் அதி ஸமீப காலத்தில் இருந்த மஹனீயர்களின் கிரந்தங்களை ஆராய்வதைத் தவிர வேறு வழியில்லை. அடுத்த இரண்டு அத்தியாயங்களில் அதைச் செய்வோம்.

# இரண்டாமத்தியாயம்

## மாமுனிகளுக்கு முற்பட்ட கிரந்தங்களின் நிலை

13. மாமுனிகளுக்கு முற்பட்ட கிரந்தங்களில் விவாதாஸபதமான கிரந்தங்களில் ஒன்றைப்பற்றியும் க்ரந்தத்தினுடைய நாம நிர்த்தேச பூர்வகமான ப்ரஸ்தாவம் இல்லை. வார்த்தாமாலை, திருவாய்மொழிப் பிள்ளையின் பெரியாழ்வார திருமொழிவ்யாக்யானம் முதலானவற்றில் பெரியவாச்சான்பிள்ளை ஆச்சான்பிள்ளையென்றே பலவிடங்களில் குறிக்கப்பட்டிருக்கிறார். திருவாய்

மொழிப்பிள்ளை பெரியாழ்வார் திருமொழிக்கு வ்யாக்யானம் அருளி யிருக்கிறார் என்பது பெரியாழ்வார் திருமொழி (3-9-4) க்கு மாமுனி கள் அருளிய வ்யாக்யானத்திலிருந்தும், (4-6-3) வ்யாக்யானத் திலிருந்தும் விளங்குகிறது. இப்போது காணப்படும் ஸ்வாபதேச வ்யாக்யானத்தில் அநந்விதமாகவும், பொருளற்றவையாகவும் பற் பல பங்க்திகள் காணப்படுவதால் இது ஒன்றான திருவாய்மொழிப் பிள்ளையின் வியாக்கியானமாக முடியாது என்கிறார் காஞ்சீஸ்வாமி. இதை ஒப்புக்கொண்டாலும், வார்த்தாமாலை பரகாலநல்லான ரஹஸ்யம் முதலான பூர்வகரந்தங்களில் பெரியவாச்சான்பிள்ளையே 'ஆச்சான்பிள்ளையென்று குறிப்பிடப் பெற்றிருப்பதை எவரும் மறுக்க முடியாது. நாயனாராச்சான்பிள்ளையை மாமுனிகளுக்கு முற்பட்டவர் எவருமே ஆச்சான்பிள்ளையென்று குறிப்பிட்டிருப்பதாகத் தெரிய வில்லை. நாலூராச்சான்பிள்ளை தம்முடைய சரமோபாயதாத்பர்யம் என்னும் நூலில் பெரியவாச்சான்பிள்ளையின் குமாரரை (பக்கம் 28, 29, 38, 39ல்) இரண்டிடங்களில் நாயனாராச்சான்பிள்ளை யென்றே எடுத்துள்ளார்.

14. பெரியவாச்சான் பிள்ளைக்கும் நாயனாராச்சான் பிள்ளைக் கும் சிஷ்யரான பரகாலதாஸர் தம்முடைய பரகால்நல்லான ரஹஸ யத்தில் [54, 97, 116, 190, 196, 255, 265, 270, 283 ஆகிய பக்கங்களில்] பெரியவாச்சான் பிள்ளையை ஆச்சான் பிள்ளையென்றே வழங்கியுள்ளார். 238-வது பக்கத்தில் "அப₄யப்ரத₃கு₃ரு ஸுநு வான ஸுந்த₃ரவரராஜாசார்யர்" என்று நாயனாராச்சான் பிள்ளையை வழங்குகிறார். 'ஸுந்தரவரராஜாசார்யர்' என்பது 'அழகிய மணவாளப் பெருமாள நாயனார்' என்பதின் வடமொழி மொழி பெயர்ப்பாகும். இதிலிருந்து நாயனாராச்சான் பிள்ளையின் திருநாமம் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் என்பதே என்றும், அதேபெயரையுடைய ஆசார்ய ஹ்ருதயகாரரைக் காட்டி லும் வேறுபாடு விளங்குவதற்காகப் பின்புள்ளார் அவரை நாயனா ராச்சான் பிள்ளையென்று வழங்கினார்கள் என்றும் விளங்குகிறது. 'நாயனாராச்சான் பிள்ளை என்னும் திருநாமத்தில் 'நாயனார் என் னும பதமே உயிரான பதம் என்றும் விளங்குகிறது. பரந்தரஹ யத்தில் (எந்தையாரின் பதிப்பு பக்கம் 56ல்) உள்ளதொரு வாக் யத்தை அனுவதித்து பரகாலநல்லானில் (265-வது பக்கத்தில்) "நம்பிள்ளை அருளிச்செய்வரென்று ஆச்சான்பிள்ளை அருளிச் செய்வர்" என்று அருளியிருப்பதும நம்பிள்ளையின் சிஷ்யரான பெரியவாச்சான் பிள்ளையே பரந்த ரஹஸ்யத்தை அருளியவர் என்பதை வலியுறுத்துகிறது. மாமுனிகளுக்கு முற்பட்ட நூல்களின் நிலை இதுவரையில் விளக்கப்பட்டது.

# மூன்றுமத்தியாயம்

## பிற்பட்ட நூல்களும் பரந்த ரஹஸ்யாதிகளும்

15. மாமுனிகளுக்கு முற்பட்ட நூல்களில் விவாதாஸ்பதமான க்ரந்தங்களின் நாமநிர்த்தேசம் இல்லையென்பது பெரிய குறை. தத்வத்ரயஸங்க்ரஹம் ஒன்று தவிர மற்ற ரஹஸ்யக்ரந்தங்களை மூவரில் எந்த ஆச்சான்பிள்ளை அருளினார் என்பது மாமுனிகளின் நூல்களிலிருந்தும் தெளிவாக விளங்கவில்லை. ஆகையால், ஸம்ப்ரதாயவிச்சேதம் ஏற்பட இடமில்லாதபடி (மாமுனிகளுக்கு) அதிஸமீபகாலத்தில் இருந்த மஹனீயர்களின் க்ரந்தங்களைக் கொண்டு தான் விவாதாஸ்பதமான நூல்களின் கர்த்தாவை நிர்ணயிக்க முடியும். பிற்பட்டவர்கள் எல்லாம் மருளுடையவர்கள் என்று காஞ்சீஸ்வாமி எழுவது ப்ராமாணிகர்களால் ஏற்கத்தகாதது. மாமுனிகளுக்கு எவ்வளவுக்கெவ்வளவு ஸமீபகாலத்திலிருக்கிறார்களோ, அவ்வளவுக்கவ்வளவு அவர்களுடைய உக்திகளுக்கு ப்ரமாண்யம் அதிகம் என்று ஒப்புக்கொண்டே தீரவேண்டும். பிற்பட்ட நூல்களையே பார்க்கக்கூடாது என்று நிர்ப்பந்தித்தால் 'விவாதாஸ்பதமான க்ரந்தங்கள் ஏன் நாலூராச்சான்பிள்ளையுடையதாயிருக்கக்கூடாது?' என்னும் கேள்விக்குக் காஞ்சிஸ்வாமியாலும் பதிலிறுக்க முடியாது.

16. மாமுனிகளின் சிஷ்யராய், அஷ்டதிக்கஜங்களில் ஒருவரான பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர்ஸ்வாமி தாம் அருளிய அந்திமோபாய நிஷ்டையின் கடைசியில் மாணிக்கமாலையைப் பெரியவாச்சான்பிள்ளையுடையதாகக் குறிப்பிட்டுள்ளார். காஞ்சீஸ்வாமி ப்ராமாணிகராகில் மாணிக்கமாலையொன்றின் விஷயத்திலாவது விவாதத்தை விட்டொழிக்கவேணும். அந்திமோபாய நிஷ்டையில் சிலவிடங்களில் மாணிக்கமாலையை ஆச்சான்பிள்ளையுடையதாகவும் எடுக்கையால் பெரியவாச்சான்பிள்ளையை ஆச்சானபிள்ளையென்று குறிப்பதுண்டு என்றும் ஸித்திக்கிறது.

17. மாமுனிகளின் சிஷ்யரும், அஷ்டதிக்கஜங்களில் ஒருவருமான எறும்பியப்பாவின் திருப்பேரரான தேவராஜகுருவரருடைய திருக்குமாரரான வரவரகுருவரர் [அழகிய மணவாள நாயனார்] என்பவர் தாம் அருளிய ரஹஸ்யவிவேகம் என்னும் நூலில் [பக்கம் 103, 104-ல்] கத்யவ்யாக்யானம் பெரியவாச்சான் பிள்ளையுடையதென்று அருளினார். 12, 13, 14, 15 பக்கங்களில் பரந்த ரஹஸ்ய ஸ்ரீஸூக்திகளையும், கத்யவ்யாக்யான ஸ்ரீஸூக்திகளையுமெடுத்து அவற்றை ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தார் என்றார். அடுத்த வரியில் சரமரஹஸ்யத்ரயத்திலே என்று ஆரம்பித்துச்

சில பங்க்திகளையெடுத்து நயினராச்சான பிள்ளை அருளிச்செய்தார் என்றார். 22, 23, 24 பக்கங்களில், பரந்த ரஹஸ்யம், கத்யவ்யாக்யானம், பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யானம் ஆகியவற்றிலிருந்து ஸ்ரீஸூக்திகளையெடுத்து ஆச்சான்பிள்ளையருளிச்செய்ததாகக் கூறி உடனே தத்வஸங்க்ரஹம், சது:ச்லோகீ வ்யாக்யானம் ஆகியவற்றிலிருந்து ஸ்ரீஸூக்திகளை எடுத்து நயினராச்சான்பிள்ளை அருளிச்செய்தார் என அருளினர். பரந்தரஹஸ்ய கத்யவ்யாக்யான திவ்யப்பரந்த வ்யாக்யானகர்த்தாவை நியமேந ஆச்சானபிள்ளை அல்லது பெரியவாச்சானபிள்ளையென்றும், தத்வஸங்க்ரஹ சது:ச்லோகீவ்யாக்யாநாதிகர்த்தாவை நியமேந நயினராச்சான்பிள்ளையென்றுமே இவர் வழங்குகிறார். இதிலிருந்து பரந்த ரஹஸ்யம், கத்யவ்யாக்யானம் என்னும் இருநூல்களும் பெரியவாச்சான் பிள்ளை அருளியவையே என்று ஸித்தித்தது.

18. அஷ்டச்லோகீ வ்யாக்யானம் (பெரியபடி) என்னும நூல் மாமுனிகளுக்குச் சுமார் நூறு வருஷங்களுக்குள் ஏற்பட்ட அத்யத்புதமான கரந்தம. இந்நூலில் (பக்கம் 312-ல்) "ஆச்சானபிள்ளை அருளிச்செய்த வார்த்தையையும், நாயனராச்சான்பிள்ளை அருளிச் செய்தவார்த்தையையும் நினைப்பது" என்று அருளியிருப்பதிலிருந்து நாயனராச்சானபிள்ளையின் தந்தையான பெரியவாச்சான்பிள்ளையையே இவர் ஆச்சானபிளளையென்று குறிப்பிடுகிறார் என்று ஸித்திககிறது. 13, 14 பக்கஙகளில் இவர் மாணிககமாலையில் பங்க்திகளை ஆச்சான்பிள்ளை அருளியதாக எடுத்தார். 66-வது பக்கத்தின் தொடக்கத்தில "ஆச்சான்பிள்ளையும் வடக்குத்திருவீதிப்பிள்ளையும்" என்று ஆரம்பித்து மிகநீண்டதான ஒருவாக்யராசியை எடுத்து "நிர்ஹேதுக ப₄க₃வத்ப்ரஸாத₃ப்படியிலும் அஷ்டாக்ஷரதீபிகையிலும் அருளிச்செய்தார்கள்" என்று அருளியிருக்கிறார். பரந்தரஹஸ்யம் 8, 9 பக்கஙகளில் இவ்வாக்யராசி காணப்படுகிறது. "முமுக்ஷுவுக்கு" "யாத்₃ருச்சி₂க" "ச்ரிய:பதி" என்று தொடங்கும ரஹஸ்யஙகள் முமுக்ஷுப்படி, யாத்₃ருச்சி₂கப்படி, ச்ரிய:பதிப்படி என்று வழங்கப்படுவதுபோலே 'நிர்ஹேதுக ப₃க₃வத்ப்ரஸாத₃ம" எனறு தொடங்கும் பரந்தரஹஸ்யம் நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதப்படி எனறும அழைககபபட்டுவந்தது என விளங்குகிறது. மற்றும் பலவிடஙகளில் பரந்தரஹஸ்ய ஸ்ரீஸூக்திகளையெடுத்து நியமேன ஆச்சான்பிள்ளையருளிச் செய்ததாகவே எடுத்தார் அஷ்டசலோகீவ்யாக்யாதா. நாயனராச்சான்பிள்ளையின் கிரந்தங்களென்று ஸர்வஸம்ப்ரதிபன்னமான நூலகளை எடுக்குமபோது நியமேந நாயனராச்சான்பிள்ளை அருளிச்செய்தார் என்றே எழுதினர். இவற்றிலிருந்து இவாகாலத்தில மாணிக்கமாலையும்

பரந்தரஹஸ்யமும் பெரியவாச்சான்பிள்ளையுடையவையாகவே வழங்கிவந்தன என்று விளங்குகிறது.

19. இவர் பரந்தரஹஸ்யாதிகர்த்தாவை ஆச்சான்பிள்ளை யென்றே வழங்குவதாலே, இவ்வாச்சான்பிள்ளை நாலூராச்சான் பிள்ளையாகவும் இருக்கலாமே? எனில்: முடியாது. ஏனெனில்: பக்கம் 338ல பரந்தரஹஸ்ய ஸ்ரீஸூக்தியொன்றையெடுத்து 'நம் பிள்ளையருளிச் செய்வரென்று ஆச்சான்பிள்ளை அருளிச்செய்வர்' என்கையாலும், 191, 275, 316 பக்கங்களில் நாலூராச்சான் பிள்ளைக்கு முற்பட்டதான பரகாலநல்லான் ரஹஸ்யத்தில் எடுக்கப் பட்ட ஆச்சான்பிள்ளை வார்த்தைகளை அப்படியே எடுக்கையாலும், 13, 14 பக்கங்களில் பல ஆச்சார்யர்களின் ஸூக்திகளை க்ரமமாக எடுத்துவரும்போது திருக்குருகைப்பிரான்பிள்ளான, ஆச்சான பிள்ளை, வடக்குத்திருவீதிப்பிள்ளை, பிள்ளைலோகாசார்யர், அழகிய மணவாளப்பெருமாள்நாயனர் ஆகியவர்களுடைய ஸ்ரீஸூக்திகளை எடுக்கையாலும் இவரால் எடுக்கப்படும் ஆச்சான்பிள்ளை பெரிய வாச்சான்பிள்ளையேயாகமுடியும்.

20. பக்கம் 66-ல் மிகநீண்டதான ஒரு வாக்யராசியை எடுத்து அது அப்படியே ஆச்சான்பிள்ளையின் பரந்தரஹஸ்யத்திலும், வடக்குத்திருவீதிப்பிள்ளையின அஷ்டாக்ஷர தீபிகையிலும் உள்ள தாக எழுதுகிறுர் இவர், இதிலிருந்து நம்பிள்ளையிடமிருநது கேட்ட அஷ்டாக்ஷரமந்த்ரார்த்தத்தைப் பெரியவாச்சான்பிள்ளையும், வடக்குத்திருவீதிப்பிள்ளையும முறையே பரந்தரஹஸ்யத்திலும் அஷ்டாக்ஷரதீபிகையிலும் வாக்யஸந்நிவேசத்திற்கூட அதிக வேறு பாடில்லாதபடி ஏடுபடுத்திவைத்தார்கள் என்று தெளிவாகத் தெரி கிறது. ஈட்டிலும், இருபத்துநாலாயிரப்படியிலும் இதே ரீதியை நாம் பலவிடங்களில் காண்கிறோம். இதனுலும் பரந்தரஹஸ்ய கர்த்தா வடக்குத்திருவீதிப்பிள்ளையின் ஸப்ரஹ்மசாரியான பெரிய வாச்சான்பிள்ளையாகமுடியுமேயொழிய, பிற்பட்டவர்களான நாயனு ராச்சான்பிள்ளையோ, நாலூராச்சான்பிள்ளையோ ஆகமுடியாதென விளங்குகிறது. அஷ்டச்லோகீவ்யாக்யானத்திலேயே எடுக்கப்பட் டிருக்கும் அஷ்டாக்ஷரதீபிகையை வடக்குத்திருவீதிப்பிள்ளையுடைய தாக 'பக்தன்' கட்டுரையில் எழுதும் காஞ்சீஸ்வாமி அவ்வஷ்ட ச்லோகீ வ்யாக்யானத்திலேயே பெரியவாச்சான்பிள்ளையுடையதாக உணர்த்தப்பட்ட பரந்தரஹஸயத்தை அவருடையதாக இசைய மறுப்பதற்கு அபி$_4$நிவேசம் தவிர வேறு காரணமில்லை.

21. பழைய பரந்தரஹஸ்ய விவாதத்தை அறியாதவர்களுக்கு அப்போது பரமபுருஷன் செய்த லீலையொன்றை ப்ரஸங்காத் குறிப் பிட விரும்புகிறோம். பரகாலநல்லான் ரஹஸ்யம் அடியோங்களிட

மிருந்தும் அதை எந்தையாரும் அடியோங்களும் ஸேவித்ததில்லை. ரஹஸ்யவிவேகமும், அஷ்டச்லோகீ வ்யாகயானமும் அடியோங்களிடமில்லை. அதைப்பற்றிக் கேள்விப்பட்டதுமில்லை. இந்நிலையில ஆச்சான்பிள்ளையஷ்டாத்யாயியில் 38-வது பாராவில் இந்நூல்களை (குறிப்பாக ரஹஸ்யவிவேகத்தை) வானளாவப் புகழச்செய்து அவற்றில் தமககு ஸாதகமாகச் சில விஷயஙகள் இருப்பதாகக் காஞ்சீஸ்வாமியை எழுதவைத்தான் பரமபுருஷன. உடனே தெலுங் குலிபியிலுள்ள ரஹஸயவிவேகத்தையும், அஷ்டச்லோகீவ்யாக்யானத்தையும ஸம்பாதித்து, தெலுங்கு லிபியை அறியாதிருநத அடியேனும் தம்பியும் தெலுங்கு லிபியை மிகவிரைவில் கற்று இம்மூன்று நூல்களையும ஸேவித்ததில் காஞ்சீஸ்வாமிக்கு நேரே விருத்தமான விஷயங்களே அவற்றில நிறைந்திருப்பதைக் கண்டு எந்தையாரிடம் தெரிவிக்க, அவரும் ஷோடசாத்யாயியில் அவற்றைச் சேர்த்தருளி வெற்றிகொடி நாட்டினூர். நாயனூராச்சான்பிளளையின முழுத்திருநாமம் அழகியமணவாளபபெருமாள நாயனூரேயென்னும் உண்மை, ஸீமவண்ணநறுங்குஞ்சிவ்யாக்யானத்தை அருளியவர் பரகாலதாஸரே எனனும் உண்மை முதலான பல உண்மைகளை நிலைநிறுத்தினூர். ஸ்ரீவைஷ்ணவவுலகம் நீண்டநாளாக அறிந்திராத உண்மைகள் இவை. நிற்க; ஸுதர்சனத்தோடு எப்போது விவாதம் செய்யநேர்நதாலும் அவருக்கு விருத்தமான விஷயங்களைக் காஞ்சீஸ்வாமியை அவாகையைக் கொண்டே எழுதவைத்துவிடுகிறுன் ஸர்வேச்வரன் எனறு விளங்குகிறது. மாமுனிகளின வ்யாக்யான சைலீவிவரணம முதலான அவாக்கே விருத்தமான விஷயங்களை அவர்கையைக கொண்டே எழுதவைத்ததை த்ரௌபதீப்ரபத்தி விவாதத்திலும் கண்டோம். ஸுதர்சனத₄ாரியான அவனுக்கு ஸுதர்சனததிடம் பக்ஷபாதமிருந்தபடியிது! இதை சைவாத்வைதிகளோடு நாம் செய்துவரும் விவாதங்களிலும கண்டுவருகிறோம். நிற்க.

22 மாமுனிகளுக்கு அதிஸமீப காலத்தில் ஏற்பட்டவையும், அவத்யலேசமுமற்றவையுமான அந்திமோபாயநிஷ்டை, ரஹஸய விவேகம, அஷ்டச்லோகீவ்யாக்யானம் ஆகிய கிரநதங்கள் மாணிக்க மாலை, பரந்தரஹஸ்யம், கத்யவ்யாக்யானம் ஆகிய கிரந்தரத்னங்களைப் பெரியவாச்சான்பிள்ளையுடையதாகவே உணாத்துவதைக் கண்டோம். மாமுனிகளுடைய ப்ரசிஷ்யர் அருளிய பெரியதிருமுடியடைவு, ஸ்ரீவைஷ்ணவ ஸமயாசார நிஷ்கர்ஷம், சது:சாஸ்த்ர விதவானும, ஸம்பிரதாயக்ரநதங்களில ஆழ்ந்த பரிசயமுள்ளவருமான அணணுவப்பங்கார் ஸ்வாமியின் பழநடைவிளக்கம் முதலான நூல்களாலும் இவ்விஷயம் வலியுறுத்தப்படுகிறது. **நூறு வருஷத்திற்கு முற்பட்ட எந்த நூலிலும் விவாதாஸ்பதமான கிரந்தங்கள்**

நாயனாராச்சான்பிள்ளையுடையதாகவோ நாலூராச்சான்பிள்ளையுடையதாகவோ எடுக்கப்படவில்லை. எல்லாகிரந்தங்களும் முற்கூறிய கிரந்தங்களைப் பெரியவாச்சான்பிள்ளையுடையதாகவே கோஷிக்கின்றன. நூறுவருஷத்துக்கு முற்பட்ட எந்த நூலிலும் நாயனாராச்சான்பிள்ளை ஆச்சான்பிள்ளையென்று வழங்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. பெரியவாச்சான்பிள்ளையே பற்பல நூல்களில் நூற்றுக்கணக்கானவிடங்களில் ஆச்சான்பிள்ளையென்று எடுக்கப்பட்டுள்ளார். இவற்றையெல்லாம் காணும் நடுநிலையாளர்க்கு, விவாதாஸ்பதமான கிரந்தங்களின் கர்த்தாவான ஆச்சான்பிள்ளை பெரியவாச்சான் பிள்ளையே என்பது எளிதில் விளங்கும்.

23. மாமுனிகளின் ஸாக்ஷாத் சிஷ்யரான பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர்ஸ்வாமியிலிருந்து தொடங்கி, அண்ணாவப்பங்கார் ஸ்வாமி வரையில் உள்ள பூர்வாசார்யதுல்யர்களான எல்லாஸ்வாமிகளுக்கும் முட்டாள் பட்டம் கட்டுகிறார் காஞ்சீஸ்வாமி. தத்வத்ரய ஸங்க்ரஹகர்த்தாவான பெரியவாச்சான்பிள்ளையை மாமுனிகளே முன்னும் பின்னும் ஆச்சான்பிள்ளையென்று எடுத்திருக்கிறாரென்று அசைக்கமுடியாதபடி நாம் நிரூபித்ததைக் கண்டவுடன் "மாமுனிகளே நேரே வந்து ஸாதித்தாலும் என் மனம் கொள்ளாது" என்று எழுதுகிறார். இதுவோ ப்ராமாணிகத்வம்? இதுவோ பெரியார்கட்குத் தகுதி? இனி, இத்தனை மஹான்களுடைய ஸ்ரீஸூக்திகளை அழிப்பதற்கு இவர் என்ன ப்ரமாணம் காட்டுகிறார் என்பதையும் மத்யஸ்தர்கள் நோக்கவேண்டும். அதிஸமீபகாலத்தில் (50 வருஷங்களுக்குள்) எழுந்தருளியிருந்த ஸ்ரீமத்பரமஹம்ஸ அயோத்தி ராமாநுஜஜீயர் ஸ்வாமி தம்முடைய மந்த்ரார்த்ததீபிகை என்னும் கிரந்தத்தில் பரந்தரஹஸ்யத்தை அப₄யப்ரத₃ராஜபுத்ரரான நாயனாராச்சான்பிள்ளையுடையதாக (ஒரு காரணமும் காட்டாமல்) எழுதியிருப்பதே ப்ரமாணம் என்கிறார். இது ஒன்றைக் கொண்டு மாமுனிகளே பெரியவாச்சான்பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்று அருளியிருப்பதையும், மாமுனிகளின் சிஷ்யரான பட்டர்பிரான் ஜீயர்ஸ்வாமி முதலான மஹனீயர்களின ஸ்ரீஸூக்திகளையும் அழிக்க்முடியுமா என்பதை நல்லோர்கள் நோக்கவேண்டும்.

24. அயோத்தி ஜீயர்ஸ்வாமி இந்த மந்த்ரார்த்ததீபிகையிலேயே இரண்டு அபார்த்தங்களை எழுதியிருப்பதைக் காட்டுவோம். [க்ருஷ்ணஸூரிக்ரந்த ஸம்ரக்ஷணத்திற்காகவே இதை எடுத்துக் காட்டுகிறோமாகையால், பரமபதத்திலுள்ள அயோத்தி ஜீயர்ஸ்வாமி நம்மை க்ஷமித்தருளுவார் என்னும் உறுதி நமக்குண்டு.] முதலாவதாக, நாயனாராச்சான்பிள்ளையை 'க்ருஷ்ணார்' என்னும் பெயரால்

இவர் வழங்குகிருர். 'அழகிய மணவாளப்பெருமாள் நாயனுர்' என்பதே நாயனுராச்சானபிள்ளையின் திருநாமம எனபதை அவரு டைய சிஷ்யரான பரகாலதாஸரின ஸ்ரீஸூக்தியைக்கொண்டே அடியோங்கள் ஸ்தாபித்திருக்கிருேம. நாயனுராச்சான்பிளளையை க்ருஷ்ண நாமததாலே ப்ராசீனர் எவருமே வழஙகியதிலலை. இந்த மருளைத் தெருளாக்குவதற்காக, ஆச்சான்பிளளையெனறு பெயருடை யவர்களுககெல்லாம ஸ்ரீகருஷ்ணசர்மந்தான எனகிருா காஞ்சீ ஸ்வாமி. ஆச்சான்பிளளையெனறு வழஙகபபட்ட நாலூராச்சான் பிள்ளைக்கும, "வநதே₃ மாத₄வபத்₃மநாப₄ ஸூமந:கோலேச தே₃வாதி₄பாந்" முதலான ப்ரமாணஙகளின்படி 'தேவராஜர்' என்றே பெயராகையாலும், நாயனுராச்சானபிள்ளையையும், நாலூராச் சான்பிள்ளையையும் ப்ராசீனர்கள் எவருமே க்ருஷ்ணநாமத்தால் வழங்கியதிலலையாகையாலும நாயனுராச்சான்பிள்ளையை க்ருஷ்ண னெனறு எழுதியது மருளகளில் தலையான மருள்எனறு முடிந்திட்டது. தந்தைக்கும் குமாரருககும ஒரேசர்மந் இருக்கமுடியாது என்பதும அறியத்தக்கது. இதைஎந்தையார் எடுத்துகாட்டிய பினபும், இதற்கு யாதொரு பதிலையும் கூருமல் மருளையே பரப்பிவருவது தான் **பெரியார்கட்குத் தகுதியா?**

25. இனி, அயோத்தி ஜீயர்ஸ்வாமியின மற்றொரு தவறை எடுத்துக்காட்டுவோம. மந்த்ரார்தததீபிகையில் (57. 58 பக்கங் களில) "த்ரெளபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாம மிறே" என்னும் ஸூத்ரவ்யாக்யானத்தில் த்ரெளபதி ப்ரயோஜ நாந்தரபரை என்று சிலர் கூறுவதாகவும், அது தவறென்று ஸ்ரீவசநபூஷண அருமபதவுரையில தம பரமாசார்யரான எம்பார் ஜீயர்ஸ்வாமியால் ஸாதிக்கபபட்டதாகவும எழுதுகிருர் அயோத்தி ஜீயர்ஸ்வாமி. தீபிகையில் 'ப்ரயோஜநாந்தர' என்னும் பதத்தை 57-வது பக்கம் கடைசி வரியிலும், 58-வது பக்கம் முதல் வரி யிலுமாக இரண்டிடஙகளில பிரயோகித்துவிட்டார். 'உபாயாந்தர' என்று எழுதுவதற்குப் பதிலாக 'ப்ரயோஜநாந்தர' என்று எழுதி விட்டார் என்று தெளிவாகிறது. ப₄ரமப்ரமாதங்களுக்கு இருப் பிடமாயிருக்கும் இவருடைய வாகயத்தைக்கொண்டா முன்னோர் களின் ஸ்ரீஸூக்திகளை அழிக்கமுடியும்? தரெளபதீப்ரபத்தி விஷ யத்தில் எம்பார் ஜீயர்ஸவாமியின் பக்ஷத்தையே அயோத்தி ஜீயர் ஸ்வாமி ஆதரிபபதால் இவ்விஷயத்திலும் அவர் மருண்டவரே என்றே காஞ்சீஸ்வாமி சொல்லியாகவேண்டும. இதையெல்லாம் கருதியே 'அயோத்யாஜீயருடைய வாக்யம் அப்ரமாணமாகவும் கூடும்' என்று [வார்த்தை 93ல்] எழுதுகிருா காஞ்சீஸ்வாமி. ஆக (தம் கருததின்படி) ப்₄ரமமற்ற எவருமே பரந்தரஹஸ் யாதிகளை நாயனுராச்சானபிளளையுடையதென எழுதவில்லை

யென்றும், நாயனாராச்சான்பிள்ளையை ஆச்சான் பிள்ளையெனக் குறிக்கவில்லையென்றும் காஞ்சீஸ்வாமியே இசைந்ததாக் முடிந்தது. அடியோங்களோவெனில், மாமுனிகள், பரவஸ்து பட்டர்பிரான் ஜீயர், ரஹஸ்யவிவேககாரர், அஷ்டச்லோகீவ்யாக்யாதா முதலான ப்₁ரமப்ரமாத₃ாதி₃ ஸம்ப₄ாவநா க₃ந்த₄ரஹிதரான மஹான்கள் பெரிய வாச்சான்பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்று குறித்திருக்கிறார்களென்றும், பரந்தரஹஸ்யாதிகளைப் பெரியவாச்சான்பிள்ளையுடையதாகவே எடுத்திருக்கிறார்கள் என்றும் நிரூபிக்கிறோம். இவற்றுக்கு யாதொரு பதிலையும் எழுதாமல், தளளப்பட்ட வாதங்களையே திருப்பியெழுதுவதோடு நில்லாமல், உண்மையை எடுத்துகாட்டியவர்களை அப்ராமாணிகர்களென்று தூஷிப்பதா ப்ராமாணிகத்வம்? இதுவா பெரியார்களுக்குத் தகுதி?

26. ப்ராமாணிகர்கள் மற்றொரு விசித்திரத்தையும் நோக்க வேண்டும்: அயோத்தி ஜீயர்ஸ்வாமியும் பரந்தரஹஸ்யத்தையே நாயனாராச்சான்பிள்ளையுடையதாக எழுதினரேயொழிய கத்ய ஜிதந்தே வ்யாக்யானத்தையும், மாணிக்கமாலையையும் நாயனாராச்சான்பிள்ளையுடையதாக எழுதவில்லை. காஞ்சீஸ்வாமியோவெனில், மாமுனிகளால் ரஹஸ்யவ்யாக்யானங்களில் ஆச்சான்பிள்ளையுடையதாக எடுக்கப்பட்ட எல்லா நூல்களையும் நாயனாராச்சான்பிள்ளையுடையதென்கிறார். இன்றளவுமுள்ள மற்ற ஸகல வித்வான்களும் கத்ய ஜிதந்தேவ்யாக்யானங்களையும், மாணிக்கமாலையையும் பெரியவாச்சான்பிள்ளையுடையதென்றே காலக்ஷேப கோஷ்டிகளில் கொண்டாடி வருகிறார்கள். அச்சிட்டுமிருக்கிறார்கள். காஞ்சீஸ்வாமியின் ஸாக்ஷாந்மாதாமஹரும், ஸாக்ஷாத₃ாசார்யருமான ஸ்ரீமத்பரமஹம்ஸ அழகியமணவாள ஜீயர்ஸ்வாமியே பரந்தரஹஸ்யத்தைப் பெரியவாச்சான்பிள்ளையுடையதென்னும் முகப்புடன் அச்சிட்டிருக்கிறார். அதுவே உண்மையென்று பலப்ரமாணங்களைக்கொண்டு நிரூபித்தபின்பும், பிடித்தபிடிவிடாமல் ஆசார்யத்ரோஹம் செய்வதா ப்ராமாணிகத்வம்? இதுவோ பெரியார்கட்கு அழகு?

27. ஸாரமான ஒரு வார்த்தை. தத்வத்ரய விவரணத்தைப் பெரியவாச்சான்பிள்ளையுடையதென்று பின்புள்ள பெரியார்கள் எவரும் குறித்திருப்பதாகத் தெரியவில்லை. நாயனாராச்சான்பிள்ளையையும் ப்ராசீந மஹான்கள் ஆச்சான்பிள்ளையென்று குறித்திருக்கிறார்கள் என்றே, தத்வத்ரய விவரணத்தை நாயனாராச்சான்பிள்ளை அல்லது நாலூராச்சான்பிள்ளையுடையதாக எடுத்திருக்கிறார்கள் என்றே எவராவது எடுத்துக் காட்டினால் விவாதாஸ்பதமான க்ரந்தங்களில் தத்வத்ரயவிவரணம் ஒன்றுமாத்திரம் அவருடையதாக ஸித்திக்கலாம். தத்வத்ரய விவரண ஸ்ரீகோசம் கிடைத்தாலும் இது விஷயத்தில் தெளிவுபிறந்து விடும். பிற்காலத்தில் இவ்விஷயங்

களில் ஏதேனும் வெளிப்பட்டால, நாமே உலகுக்கு உண்மையைக் காட்டுவோம். ஆனுல், ஸகல மஹனீயர்களாலும் பெரியவாச்சான் பிள்ளையுடையதென இடைவிடாமல் கொண்டாடப்பட்டுவரும கத்ய வ்யாக்யானம், பரந்தரஹஸ்யம், மாணிக்கமாலே ஆகியவறறையும் மாமுனிகளாலேயே பெரியவாச்சான்பிள்ளையுடையதாகக குறிக்கப் பட்ட தத்வத்ரயஸங்க்ரஹத்தையும் வேருெரு ஆச்சானபிள்ளையுடைய தாக நிரூபிக்க எக்காலத்திலும எவராலும் முடியாது.

மூனருமு அததியாயம முற்றிற்று.

## நாலாம் அத்தியாயம்

### சுஷ்கவாதநிரஸனம்

28. இதுவரையில் மூனறு அத்தியாயங்களாலே மாமுனிக ளுடைய ஸ்ரீஸூக்திகளைககொணடும, முனனும பின்னும் உள்ள மஹான்களின் ஸ்ரீஸூக்திகளைக்கொண்டும் பெரியவாச்சான்பிள்ளை யையே அனைவரும ஆச்சானபிள்ளையென்று வழங்கியிருக்கிருர்க ளென்றும, விவாதாஸ்பதமான க்ரந்தஙகள் அவருடையவையே என்றும் நிரூபித்தோம, இப்படிப் பல ப்ரமாணங்களைத் தம்மால் காட்டமுடியாமையாலே, சில சுஷ்கவாதங்களைச் செய்கிருர காஞ்சீ ஸ்வாமி. இவ்வததியாயததில் அவற்றை ஒனறுவிடாமல் நிரஸிப் போம்.

### 1. கௌரவபுத்திவாத நிராகரணம.

29. பெரியவாச்சானபிள்ளையிடம மாமுனிகளுக்கு உள்ள கௌரவ புத்தி அளவிடமுடியாதாகையாலே அவரைப் பெரும் பாலும் பெயரையிட்டுக் கூறுவதில்லை என்று கூறி, அருளிச்செயல் வியாக்கியானங்களிலிருந்து பெரியவாச்சானபிளளையின ஸ்ரீஸூகதி களை எடுக்குமபோது “பூர்வர்கள்” என்றே மாமுனிகள் அவரைக் குறித்திருப்பதைக் காட்டுகிருர். இவ்வாதம் விவேகிகளிடம் விலை செல்லாது. நஞ்சீயர், வடக்குத்திருவீதிப்பிள்ளை முதலானுருடைய அருளிச்செயல் வ்யாக்யான ஸ்ரீஸூக்திகளை எடுக்கும்போதும் மாமுனிகள் நாமநிர்த்தேசமில்லாமல் பொதுவாகப் “பூர்வர்கள்” முதலான பதங்களாலேயே குறிப்பதைப் பலவிடங்களில் காண லாம். நம்முடைய ஆசார்யர்களுக்குள் ஆளவந்தார், எம்பெருமா னுர், ஆழ்வான், எமபார், பட்டர், நஞ்சீயர், நம்பிளளை முதலான பூர்வாசார்யர்களைவிடப் பெரியவாச்சானபிள்ளையிடம் மாத்திரம் மாமுனிகள் அதிகப்படியான கௌரவபுத்தியை வைத்திருந்தார் என்றும் அதற்காக அவரைமாத்திரம் ‘‘பூர்வர்கள்’’ என்று குறித்தார் என்றும் கூற இடமில்லை. நமமுடைய ஆச்சார்யர்களில் எவருமே பரமாசார்யர்களிடையே பெயரையிட்டுக் குறிக்கும் விஷயத்தில் தாரதம்யம் பாராட்டினது கிடையாது. அப்படிப் பாராட்டுவது

அபசாரமுமாகும். ஆகையால், ஆளவந்தார், எம்பெருமானார், ஆழ்வான, எமபார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை முதலானுரை மாமுனிகள் பெயரையிட்டுக் குறித்திருப்பதுபோலே ஆச்சான் பிளளையையும் பெயரையிட்டுக் குறிக்கக்குறையில்லை. உபதேச ரத்தினமாலையில் அருளிச்செயல் வியாக்கியானமருளிய பூர்வாசார் யர்களைப் பெரும்பாலும் பெயரையிட்டுக் குறித்துவிட்டதாலும், திருக் குறுந்தாண்டகம், பெருமாள்திருமொழி முதலானவற்றுக்கும் பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யானம் தவிர வேறு வ்யாக்யானஙகள் மாமுனிகள் காலத்திலிருந்து இப்போது லோபமடைந்திருக்கலா மாகையாலும் கௌரவபுத்தியாலே பெரியவாச்சான்பிள்ளையை மாத்திரம் பெயரையிட்டுக்குறிப்பதில்லை என்னும் வாதத்தில் பாமரர் களும் மயஙகமாட்டார்கள். உபதேசரத்தினமாலையிலும், தத்வதரய வ்யாக்யானத்தில் ஓரிடத்திலும் பெயரையிட்டே குறித்திருக்கிருர் மாமுனிகள் என்று இவரே இசையவேண்டியிருக்கையாலே கௌரவ புத்திவாதம் இவராலேயே தள்ளப்பட்டதாயிற்று. 'அவ்விடங்களில் கர்த்தா யாரென்று தெரிவதற்காகப் பெயரையிட்டுக் குறித்தார்' எனில், பரந்தரஹஸ்யாதிகள் விஷயத்திலும் இதே நியாயம பொருந்தும் என்பதைக காண்க.

30. 'பெயரையிட்டுக் குறிக்குமபோது **பெரிய**வாச்சான்பிள்ளை எனறு **பெரிய** எனனும் விசேஷணத்தை விடாமலன்றோ குறிக்கிருர்' எனில்: தத்வத்ரய வ்யாக்யானத்தில் தத்வத்ரயஸங்க்ரஹ கர்த்தா வான பெரியவாச்சான்பிள்ளையை மூன்றிடங்களில் ஆச்சானபிள்ளை யென்றும் நிர்த்தேசித்திருப்பதைக் காட்டிஞேமாகையாலே பெரிய வாச்சான்பிள்ளை என்றே குறிக்கிருர் என்னும் நியமமில்லை. ஸ்ரீவசநபூஷணம் 5-வது சூர்ணையின் வ்யாகயானத்தில் **பெரிய பட்டர்** என்று ஒரே இடத்தில் குறிக்கப்பட்ட ஸ்ரீபராசரபட்டரைப் பற்பலவிடங்களில் பட்டர் என்றே குறித்தாற்போலே தத்வத்ரய வ்யாக்யானத்தில் ஓரேயிடத்தில் **பெரியவாச்சான்பிள்ளை** என்று குறிக்கப்பெற்றவரையும பற்பலவிடங்களில் ஆச்சான்பிள்ளை என்று குறிக்கக்குறையில்லை.

31. 'உபதேசரத்தினமாலையில் **பெரிய**வாச்சான்பிள்ளை என்றே மூன்று பாசுரங்களிலும் யாரைக்குறிப்பிட்டாரோ அவரைப் பற்பல விடங்களில் ஆச்சான்பிள்ளையென்றே குறிப்பிடுவாரோ மாமுனி கள்?' எனில்: உபதேசரத்தினமாலையிலேயே "அழகியமணவாளச் சீயர்" [45] என்றும், "மன்னுமணவாளமுனி" [47] என்றும் இரண்டிடங்களில் முழுப்பெயரையுமிட்டுக் குறிப்பிடப்பெற்ற (வாதிகேஸரி) அழகியமணவாளச்சீயரை வ்யாக்யானங்களிலே

எல்லாவிடங்களிலும் 'ஜீயர்' என்றே குறிப்பிட்டதுபோலே பெரிய வாச்சான்பிள்ளையையும் ரஹஸ்யவ்யாக்யானங்களிலே பெரும்பாலானவிடங்களில் ஆச்சானபிள்ளையென்றே குறிக்கக்குறையில்லை. மேலும், ஸ்ரீக்ருஷ்ணர் என்பதே பெரியவாச்சானபிள்ளையின திருநாமம். ஆச்சான்பிள்ளை என்பது அவருடைய சிறப்புப்பெயர். பரமாசார்யரைத் திருநாமத்தையிட்டுக்குறிப்பது கௌரவபுத்திக்குக் குறைவாகலாம். ஆளவந்தார், எம்பெருமானர், நஞ்சீயர், நம்பிள்ளை என்பது போன்ற சிறப்புபெயரையிட்டுக்குறிப்பது விசேஷ கௌரவ புத்தியைக் காட்டுமேயொழிய விபரீதத்தைக் காட்டாது. ஆகையால் ஆச்சான்பிள்ளை எனனும சிறப்புப்பெயரையிட்டுக் குறித்ததால் மாமுனிகளுக்குப் பெரியவாச்சான்பிள்ளையிடம உள்ள கௌரவபுத்திக்கு எககுறையும் ஏற்படாது. ஆக, இவ்வளவால் கௌரவபுத்திவாதம நிராகரிக்கப்பட்டது.

## 2. சைலிவாத₃சிதி₂லீகரணம்

32. பரந்தரஹஸ்யத்தின சைலி ஸமஸ்க்ருதவாக்யபஹுளமாய் நீண்ட வாக்யங்கள்கொணடதாயிருப்பதாகவும ஸூத்ரமபோனற, தமிழ்ப்பதஙகளை மிகுதியாகக்கொண்ட பெரியவாச்சான்பிள்ளையின் நடைக்கு இது மாறுபட்டதென்றும அஷ்டாதயாயி முதலானவற்றில எழுதியிருக்கிறா காஞ்சீஸ்வாமி. இதுகொண்டு விவாதாஸ்பதமான க்ரந்தங்களைப பெரியவாச்சான்பிளளையுடையதனறென்று ஸாதிக்கமுடியாதென்று நிரூபிப்போமினி.

33. மாணிக்கமாலை, தத்வத்ரயஸங்க்ரஹம, ஜிதந்தேவ்யாக்யானம, கத்யவ்யாக்யானம ஆகிய விவாதாஸபதமான மற்ற கிரந்தங்கள் தமிழப்பதங்களை மிகுதியாகக்கொண்ட ஸூத்ரம் போன்ற சிறு சிறு வாக்யங்களோடு விளங்குவதை எவரும் மறுக்க முடியாது. ஆகையால் சைலிவாதத்தைச் செய்பவர்கள் இந்நூல்கள் பெரியவாச்சான்பிள்ளையுடையவையே என்று இசைந்து தீர வேணடும். இனி, நாயனாராச்சான்பிள்ளைக்கு இரண்டுவிதமான சைலி ஒட்டுமெனில், பெரியவாச்சானபிள்ளைக்கும் அது ஒட்டக் குறையில்லை.

34. முமுக்ஷுப்படி வ்யாக்யான அவதாரிகையில், "முன்பே (பிளளைலோகாசார்யர்) ரஹஸ்யத்ரய விஷயமாக மூன்று ப்ரபநதம இட்டருளியிருக்கச் செய்தேயும, அதில் 'யாத₃ருச்சிகப்படி' அதி ஸங்கரஹமாகையாலும், 'பரந்தபடி' அதிவிஸ்த்ருதமாகையாலும், 'ச்ரிய: பதிப்படி' உப₄யதே₃ாஷமினறிக்கே இருந்ததேயாகிலும் ஸம்ஸ்க்ருத வாக்ய ப₃ஹுளமாகையாலே பெண்ணுக்கும பேதைக்கும் அதி₄கரிகப் போகாமையாலும், த்ரிவித₄தோஷமு



ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம்

ஜகத்குரு.

அனந்தாசார்ய ஸ்வாமி.

(வைதண்டவாஸி.)

மில்லாதபடி இன்னமும் ஒரு ப்ரபந்தமிடவேணும் என்று திருவுள்ளம் பற்றி எல்லாவற்றுக்கும் பின்பிறே முமுக்ஷுப்படியாகிற இப்ரபந்தம் இட்டருளிற்று'' என்று மாமுனிகளே பிள்ளைலோகாசார்யர் நாலு விதமான சைலியோடு நாலு பிரபந்தங்கள் இட்டருளியதாக அருளிச் செய்தார். பெரியவாச்சானபிள்ளையும் இப்படிப் பலவிதமான சைலி களோடு கிரந்தங்கள் அருளிச்செய்திருக்கக்குறையில்லை.

35. பெரியவாச்சான் பிள்ளையுடையவையென்று ஸர்வஸம் ப்ரதிபந்நமான இருபத்து நாலாயிரப்படி, ஸ்தோத்ரரத்ந பாஷ்யம முதலானவற்றின் அவதாரிகைகளை ஸேவித்தால், அவை பரந்த ரஹஸ்யத்திற்போலவே மிகநீண்ட ஸம்ஸ்க்ருதபஹுள வாக்யங களைக் கொண்டிருப்பதைக் காணுநின்றோம். எவர்க்குமே வயஸ்ஸு முதிரமுதிர சைலியிலும சில வேறுபாடுகள் ஏற்படுவதைக் காணு நின்றோம. மிக முதிர்ந்த வயஸ்ஸிலே அருளிச செய்யப்பட்டதாகச் சொல்லப்படும திருவந்தாதி வ்யாக்யானங்களின் நடையிலே மிகுந்த தளர்ச்சிதோற்றுவதை உணராநின்றோம. இவற்றைக்காணும்போது பெரியவாச்சானபிள்ளையால் பரந்தரஹஸ்யமும், திருவாய்மொழி வ்யாக்யானமும் யௌவனப் பருவத்தின் தொடக்கத்திலே அருளிச் செய்யப்பட்டவையென்பதும், திருவந்தாதி வ்யாக்யானங்கள் மிக முதிர்ந்த திருநக்ஷத்திரத்திலே அருளிச்செய்யப்பட்டவையென்பதும, மற்ற பிரபந்தங்கள் இடையிலே அருளிச் செய்யப்பட்டவையென் பதும் உறுதியாகிறது.

36. உண்மையில் நாயனாராச்சான்பிள்ளையின் நடைக்கும், பரந்தரஹஸ்யாதிகளின் நடைக்கும் பல வேறுபாடுகள் உள்ளன. சிலவற்றைக கூறுவோம். (1) நாயனாராச்சான்பிள்ளையுடையதென்று ஸமப்ரதிபந்நமான சது:ச்லோகீவ்யாகயானம், முக்தபோ₄க₃ாவளி, சரமோபாயநிர்ணயம, தத்வஸங்க்ரஹம் ஆகியவற்றின் தொடக்கத் திலோ முடிவிலோ நியமேந ச்லோகங்கள் இடப்படுவதைக காண்கிறோம். பெரியவாச்சானபிள்ளையின் நூல்கள் எதிலுமே சலோகங்கள் இல்லை. விவாதாஸ்பதமான நூல்களிலும் ச்லோகங்கள் இல்லை. (2) பூர்வபக்ஷங்களை எடுத்துக்கழிக்குமபோது சது:ச்லோகீ வ்யாக்யானத்தில் நாயனாராச்சான்பிள்ளை (நவீன சாஸ்த்ரகாரர்களைப் போலே) 'நநு' 'மைவம்' முதலான பதங்களைப் பலவிடங்களில் பிரயோகிக்கிறார். (எந்தையாருடைய பதிப்பு) பக்கம் 48 முதல் 53 வரையிலும, 72 முதல் 79 வரையிலும் பலவிடங்களில் இதைக் காணலாம். பெரியவாச்சான்பிள்ளை தனிச்லோகம் முதலான கிரந்தங் களில் பூர்வபக்ஷங்களை எடுத்துக் கழிக்குமபோது, (ப்ராசீநசாஸ்த்ர காரர்களைப்போலே) இத்தகைய பதங்களை இடுவதில்லை. பரந்த ரஹஸ்யத்திலும் 26, 27, 28 பக்கங்களிலும், சரமச்லோகப்ரகரண

அவதாரிகை முதலானவிடங்களிலும் 'நநு, மைவம்' முதலானபதங்களை இடாமலே பூர்வபக்ஷநிரஸனங்களைச் செய்வதைக் காணுநின்றோம். விவாதாஸ்பதமான மற்ற கிரந்தங்களிலும் இந்த நியமப4ங்க3மில்லை. இவையெல்லாம விவாதாஸ்பதமான கிரந்தங்களை அருளியவர் நாயனாராச்சான்பிள்ளையிலும வேறுபட்டவர் என்பதை வலியுறுத்துகின்றன. ஆகையால காஞ்சீஸ்வாமியின் சைலிவாதம் சிதைககப்பட்டதாயிற்று.

## 3. தே3சிகஸூக்திப்ரத்யுக்திவாத3த்4வமஸநம

37. பரந்தரஹஸ்யத்தில், பிராட்டிக்கு உபாயத்வமுண்டு என்னும தேசிகஸ்ரீஸூக்திக்கு மறுப்பு உரைக்கப்பட்டிருப்பதாகவும, ஆகையால் பரந்தரஹஸ்யம் தேசிகஸமகாலஸ்த2ரான நாயனாராச்சான்பிள்ளையுடையதாகவேயிருக்கவேண்டுமெனறும், தேசிகருக்கு முற்பட்ட பெரியவாச்சானபிள்ளையுடையதாயிருக்க ப்ரஸக்தியிலலை யென்றும் எழுதுகிறார் காஞ்சீஸ்வாமி. இதைத் தள்ளுவோம இனி.

38. அப்4யுபக3மவாத3ரீதியிலே பரந்தரஹஸ்யத்தில தேசிகஸூக்திக்கு மறுப்பு உரைக்கப்பட்டிருப்பதாகவே கொண்டு பேசினாலும், நாயனாராச்சான்பிள்ளையைப்போலே அவருடைய தந்தையும் தேசிகரின் சில வாதங்களை மறுத்துப்பேசுவதில் ஸர்வாத்மநா அநுபபத்தியொன்றுமில்லை. பிரபவ அல்லது விபவ வருஷத்தில் அவதரித்த தேசிகரைவிட ஸர்வஜித்தில் அவதரித்த பெரிய்வாச்சான் பிள்ளை சுமார் நாற்பது வயது மூத்தவர் என்று விளங்குகிறது. பெரியவாச்சானபிள்ளை தொண்ணூற்றைந்து திருநக்ஷத்திரம இந்நிலவுலகில எழுந்தருளியிருந்தார என்றும் பெரியதிருமுடியடைவிலிருநது தெரியவருகிறது. பஹுக்ரந்தங்களை அருளிய அவா நீண்டகாலம் வாழ்ந்திருக்கவேண்டும் எனபதும தெளிவு. இவற்றிலிருந்து பெரியவாச்சான்பிள்ளை தேசிகருடைய ஐமபதாவது வயஸ்ஸுக்கு மேலும் இந்நிலவுலகில் எழுநதருளியிருநதார் எனறு தெளிவாகிறது. இந்நிலையில் அவர் தேசிகருடைய ஒரு வாதத்தை ஒருநூலில் தளளினர் எனருலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. இனி, தேசிகர் பெரியவாச்சான்பிள்ளைக்கு நூறு வருஷம் பிந்தி அவதரித்தவர் என்னும வாதம் எழும்பும். இதில் பல அனுபபத்திகளுண்டு; இது அப்4யுபக3மவாத3மேயாகையால் நமக்கு இதில் அநாஸ்தை2.

39 'பிராட்டிககு உபாயத்வமுண்டு' முதலான வாதங்கள் தேசிகராலேயே முதன்முதலில எழுபபபபட்டன எனறும் சொல்வதறகில்லை; தேசிகன தம சது:ச்லோகீபா4ஷ்யத்திலேயே பிராட்டி விஷயமான ஐந்து பக்ஷங்கள பூர்வாசாரியர்கள் காலத்திலிருந்தன என்பதைக் காட்டுகிறார். எமபெருமானாருடைய சிஷ்யர்களில

ஒருவரான சோமாசியாண்டான் பிராட்டிக்கு விபு₄த்வம் முதலான சில பெருமைகளைத் திருவுள்ளம் பற்றியதாகவும் தம் நூல்களில் எடுக்கிறார். ஆகையால், தேசிகருக்கு முற்பட்டவர்களால் எழுப்பப் பட்ட லக்ஷ்ம்யுபாயத்வவாதத்தையே பெரியவாச்சான்பிள்ளை கண்டிக்கக் குறையில்லை. தேசிகருடைய வாதங்களுக்கு பதிலாக திவ்யப்ரபந்த வ்யாக்யான ஸ்ரீஸூக்திகளை ரஹஸ்யவிவேககாரர் காட்டுகிறார். இவ்விடங்களிலும் இந்த ரீதியிலேயே பதில் சொல்லி யாகவேண்டும்.

40. மேலும், பரந்தரஹஸ்யத்தில் கண்டிக்கப்பட்டது தேசிக ருடைய வாதமேயன்று என்பதை மூதலிப்போம் இனி. பரந்த ரஹஸ்யத்தில் (பக்கம் 26 ல்) "ப்ரதேசாந்தரங்களில் இவளைப் புருஷ காரமாக நினைத்துச் சொல்லுகிறார்கள் என்கிற அவையும் உபாய ப₄ாவத்திலே அந்வயிப்பிக்க யோக்யமுமாய், அதுக்குமேலே...... ப்ரபத்திதானே புருஷகாரக்ருத்யத்தைச் செய்யவற்றாகையாலும், மாட்டாதாகில்......இவனுடைய ப்ரபத்யநுஷ்டானம் நிஷ்ப₂லமாம் படியுமாயிருக்க..." என்று **பிராட்டிக்குப் புருஷகாரத்வமேயில்லை யென்றும், உபாயத்வமே உண்டென்றும், ப்ரபத்திக்கே புருஷ காரத்வம் உள்ளதென்றும்** கூறும் பக்ஷமே கண்டிக்கப்பட்டிருக்கிற தென விளங்குகிறது. தேசிகர் எந்த நூலிலும் இப்படிவாதம் செய்ததில்லை. பிராட்டிக்குப் புருஷகாரத்வத்தோடு கூட ஒருவித மான உபாயத்வமும் உண்டு என்பதே அவருடைய வாதம் என்பது அவருடைய நூல்களிலிருந்து விளங்குகிறது. புருஷகாரக்ருத் யத்தை ப்ரபத்தியே செய்யும் என்று அவர் எந்தநூலிலும வாதாடிய தில்லை. ஆகையால் இது வேறொருவருடைய பூர்வபக்ஷமே என்று விளங்குகிறது. ஆக, இவ்வளவால் தேசிக ஸூக்திப்ரத்யுக்திவாதம் அழிக்கப்பட்டது.

## 4. காலக்ஷேபக்₃ரந்த₂த்வாப₄ாவவாத₃ வித்₄வம்ஸநம்

41. "பெரியவாச்சான்பிள்ளையே பரந்தரஹஸ்யாதிகளை அருளிச்செய்திருந்தால், அவருடைய கிரந்தங்களை விட்டுப் பிள்ளை லோகாசார்யருடைய முமுக்ஷுப்படி முதலான கிரந்தங்களையே எங்கும் யாவரும் காலக்ஷேபக்ரந்தமாகக் கொள்ள ப்ரஸக்தியே யிராது" என்று (பக்தன் பத்திரிகையில்) எழுதுகிறார். இவரை நாம் ஒரு கேள்வி கேட்கிறோம். "பிள்ளைலோகாசார்யருடைய பரந்த படி முதலான விஸ்தாரமான ரஹஸ்யங்கள் இருக்கும்போது ஏன் அனைவரும் முமுக்ஷுப்படி முதலானவற்றையே காலக்ஷேபக்ரந்த மாகக் கொண்டிருக்கிறார்கள்" என்று. நேர்மையுடன் பதில் கூறுவதாகில், "ஆகையிறே—(முற்கூறிய கிரந்தங்களிற்போலே அதிஸங்க்ரஹத்வம், அதிவிஸ்த்ருதத்வம், ஸம்ஸ்க்ருதவாக்ய

ப3ாஹுாள்யம் என்னும் மூன்று தோஷமும் இல்லாமையாலன்றோ)—அல்லாத ப்ரபந்தங்கள் கிடக்க இத்தை—(முமுக்ஷுப்படியை)—எல்லாரும் அதி4கரித்துப் போருகிறது. இன்னமும பூர்வபரப3ந்த4ங்களில் அநுக்தமான அர்த்தவிசேஷங்களும இப்ரபந்தத்திலே உண்டாகையாலும் இதுவே எல்லார்க்கும் ஆதரணீயமாயிருக்கும' என்று மாமுனிகள் முமுக்ஷுப்படி வ்யாக்யான அவதாரிகையில அருளியிருப்பவற்றையே பதிலாகக கூற முடியும். இந்த பதில் பரந்தரஹஸ்யாதிகள விஷயத்திலும பொருந்தும என்பதைக் கண்டுகொளக.

42. மேலும், ஒரு கிரந்தம காலக்ஷேபக்ரந்தமாயில்லை என்பது கொண்டே அதைப் பூர்வாசார்யக்ரந்தமன்றென்று கூறமுடியாது. உதாஹரணமாக ஸித்தித்ரயம் காலக்ஷேபக்ரந்தமாயில்லாமலிருப்பதாலும், ஸ்ரீ பாஷ்யாதிகள் காலக்ஷேபக்ரந்தமாயிருப்பதாலும முந்தியதை ஆளவந்தார் அருளிச்செய்ததல்ல என்று கூறமுடியாது. இப்படி எத்தனையோ உதாஹரணங்கள காணலாம். ஆகையால இந்த சுஷ்கவாதமும நனகு அழிக்கப்பட்டதாயிற்று.

## 5. உபதே3சரத்நமாலாயாம் அநுக்திவாத3தூ4நநம்

43. "பரந்தரஹஸ்யம முதலிய ரஹஸ்யக்ரந்தங்களையும பெரியவாச்சான்பிள்ளையே விரிவாக அருளிசசெயதிருந்தால், உபதேசரத்தினமாலையில் திவ்யப்ரபந்தவ்யாக்யான விஷயத்தில பெரியவாச்சான்பிள்ளைக்கு மஹத்தான கௌரவத்தைக் காட்டிவிட்டு ரஹஸ்யார்த்த2ப்ரகாசந விஷயத்தில பிள்ளைலோகாசாரயர்க்கு மஹத்தான பெருமையை விளக்கியிருப்பது விரஸமாகும். ரஹஸ்யார்த்தங்களையும் பெரியவாச்சானபிள்ளையே ப்ரபஞ்சனம் செய்தருளினார் என்று ஒரு பாசுரமாவது அவசியம அருளிச்செய்திருக்கவேண்டும். மாமுனிகள் இதை உபேக்ஷிகக ப்ரஸக்தியே கிடையாது" என்று (பக்தன் பத்திரிகையில) எழுதுகிறார். இது அஸாரம் என்று காட்டுகிறோமினி.

44. உபதேசரத்தினமாலையில மாமுனிகள பூர்வாசார்யர்களுடைய ப்ரத4ானமான கிரந்தங்களைக் காட்டிச் செல்கின்றாரேயொழிய, எல்லா கிரந்தங்களையும கணக்கெடுக்கவில்லை பிள்ளான், நஞ்சீயர், பெரியவாச்சானபிள்ளை, வடக்குததிருவீதிப்பிள்ளை, வாதிகேஸரி அழகியமணவாளச்சீயர், வையகுருவின் தம்பியான அழகிய மணவாளப்பெருமாள்நாயனார் ஆகியவர்கள் திவ்யபரபந்தங்களுக்கு வியாக்கியானம் செய்ததே ப்ரத4ானமான கைங்கர்யமாகையாலே அவற்றை உணர்த்தினார். பிள்ளைலோகாசார்யர் செய்த கைங்கர்யங்களுள் ரஹஸ்யக்ரந்தங்களே ப்ரத4ானமாகையாலும், அவற்றிலும் ஸ்ரீவசநபூ4ஷணம் ஒப்புயர்வற்றதாகையாலும் அதன பெருமையையே பல பாசுரங்களில பேசினார். இவர்களில் பலரும்

அப்ரதா₄னமான கிரந்தங்களுமே செய்தமையுண்டு. நஞ்சீயர் கத்ய வ்யாகயானம் அருளினர். ஆசார்யஹ்ருதயகாரர் ஆசார்யஹ்ருதயம் எனனும் அத்புதமான ரஹஸ்யகரந்தத்தையும், அருளிச்செயல் ரஹஸ்யத்தையும் அருளினர். வாதிகேஸரிஜீயரும தீபப்ரகாசஸஹித தத்வதீபம், தீபஸங்க்ரஹம், தத்வநிரூபணம் முதலான ரஹஸ்ய க்ரந்தங்களை அருளினர். உலகாசிரியரும் தனிச்லோகமும், கத்ய வ்யாக்யானமும் அருளியிருக்கிருர். இவையெல்லாம் மாமுனிகளின் வியாக்கியானங்களிலிருந்தே விளங்குகிறது. இவற்றைப்பற்றி யெல்லாம் உபதேசரத்தினமாலையில் பேச்சேயில்லை. இதிலிருந்து, பூர்வாசார்யர்களில் பலர் செய்த ப்ரதா₄ன கைங்கர்யங்களையே உபதேசரத்தினமாலையில் காட்டியருளினர் மாமுனிகள் என்று விளங்குகிறது. அந்த ரீதியில் பெரியவாச்சான்பிள்ளையின் ப்ரதா₄ன கைங்கர்யமான திவ்யப்ரபந்தவ்யாக்யானத்தைப் பல பாசுரங்களில் பேசிவிட்டாராகையாலே அவருடைய அப்ரதா₄நோபகாரங்களான தனிச்லோகம், ஸ்தோத்₃ரகத்யவ்யாக்யானங்கள், ரஹஸ்ய க்ரந்தங்கள் ஆகியவற்றைப் பற்றிப் பேசவில்லை என்றே கொள்ள வேண்டும். இல்லாவிடில், அவருடைய ரஹஸ்யக்ரந்தங்கள் எல்லா வற்றையும் விடப் பெரியதாய், சிறந்ததான தனிச்லோகத்தையும் உபதேசரத்தினமாலையிலும் வேறு எந்த கிரந்தத்திலும் மாமுனிகள் எடுக்காமையாலே தனிச்லோகம் பெரியவாச்சான்பிள்ளையருளிய தன்று என்று கூறவேண்டிவரும்.

45. உபதேசரத்தினமாலையில் எடுக்காமையாலே ஒருவருடைய கிரந்தங்களை இல்லைசெய்வதாகில், அதில் நாயனராச்சான்பிள்ளையின் பிரஸ்தாவத்தையே செய்யவில்லையாகையாலே, அவர் ஒரு கிரந்த மும் அருளவில்லை என்றே ஸித்திக்கும். ஆகையால், உபதேச ரத்தினமாலையில் எல்லா ஆசார்யர்களையும், அவர்கள் அருளிய எல்லா க்ரந்தங்களையும் காட்டவேணும் என்னும் நிர்ப்பந்தத்தை மாமுனிகள் வைத்துக்கொள்ளவில்லை என முடிந்தது. ஆகையால் காஞ்சீஸ்வாமியின் இவ்வாதமும் தள்ளப்பட்டது.

## 6. க்ரமவாத₃விதூ₄நநம்.

46. முமுக்ஷுப்படி 97-வது சூர்ணையின் வ்யாக்யானத்தில் "இது தான் நடுவில் திருவீதிப்பிள்ளைபட்டர் ஆச்சான்பிள்ளை இவர்கள் அருளிச்செய்த ப்ரபந்தங்களிலே ஸுஸ்பஷ்டம்" என்றும, த்வயப்ரகரண அவதாரிகையில் "ஆச்சான்பிள்ளை ஜீயர் முதலானரும் இந்த ப்ரகாரமிறே அருளிச்செய்தது" என்றும் ஆச்சான்பிள்ளையை நடுவில் திருவீதிப்பிள்ளைபட்டருக்குப் பின்னும் வாதிகேஸரிஜீயர்க்கு முன்னும் நிவேசிக்கிருர் மாமுனிகள்; நடுவில் திருவீதிப்பிள்ளைபட்டரிலும் சிறப்புப்பெற்ற பெரியவாச்சான்பிள்ளை

யையே ஆச்சான்பிள்ளையென்று குறித்தாராகில் நடுவில்திருவீதிப் பிள்ளைபட்டருக்கு முன்னே அவருடைய நாம நிர்தேசத்தைச் செய்திருக்கவேண்டுமேயொழியப் பின்னே இட்டிருக்கலாகாது; ஸ்ரீவசநபூ₄ஷணம் 11-வது சூர்ணை வ்யாக்யானத்தில "இவாதாம் அருளிச்செய்த பரந்தபடியிலும், ஆச்சான்பிள்ளை அருளிச்செய்த பரந்தரஹஸ்யத்திலும" என்று பிள்ளைலோகாசார்யருக்குப் பின் ஆச்சான்பிள்ளையை எடுத்திருப்பதும் இவர் சிறிய ஆச்சானபிள்ளை யென்பதை வலியுறுத்துகிறது—என்பது காஞ்சீஸ்வாமியின் க்ரம வாதம். மாமுனிகள் க்ரமவிவக்ஷையில்லாமலே பலவிடங்களில் பல க்ரந்தகர்த்தாக்களை எடுத்திருப்பதைக் காட்டி இவ்வாதத்தை நிரஸிப்போம்.

47. முமுக்ஷுப்படி 13-வது சூர்ணையின் வ்யாக்யானத்தில் ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளை எடுத்துக்காட்டிவரும்போது, நமமாழ்வார், பெரியாழவார், குலசேகரப்பெருமாள், திருமழிசைப் பிரான், திருமங்கையாழ்வார், முதலாழ்வார்கள என்று க்ரமவிவக்ஷை யில்லாமல் எடுத்திருக்கிருர். இதில் ஏதாவதொரு க்ரமவிவக்ஷையைக் கற்பிக்கப்பார்த்தாலும, ஒரு க்ரமமும் சொல்லவொண்ணுதபடி பலருடைய ஸ்ரீஸூக்திகளைப் பலவிடங்களில் எடுததிருப்பதைக் காட்டுவோம இனி.

48. (1) (தத்வத்ரய-சித்-4) "இவருக்கு இங்கு விவக்ஷிதம் ஜ்ஞாநமாகவேணும்; தநவசேகரத்தில் தேஹாதி வைலக்ஷண்யம் அருளிச்செய்கிறவிடத்தில அப்படி அருளிச்செய்கையாலே; 'தே₃ஹேந்த்₃ரியமந: ப்ராணதீ₄ப்₄யோந்ய:' என்றிறே ஆள வந்தாரும் அருளிச்செய்தது." இங்கு பிள்ளைலோகாசார்யருடைய ஸூக்திஸம்வாதத்தை முதலில் காட்டிவிட்டுப் பிறகு பரமாசார்ய ரான ஆளவந்தாருடைய ஸூக்திஸம்வாதத்தைக் காட்டியிருப்ப தைக் காணவேணும. "இவர் தாமருளிச்செய்த பரந்தபடியிலும் ஆச்சான்பிள்ளை அருளிசசெய்த பரந்தரஹஸ்யத்திலும" என்ற ஸூக்தியும் இதைப்போனறதே. (2) (அசித்-27) "......" என்று தத்வத்ரயவிவரணத்திலே ஆச்சான்பிள்ளை அருளிச்செய்கையா லும், "......" என்று ஸ்ரீபராசரபகவானுலே உக்தமாகையாலும், "......" என்று இவா தாம் மேலே அருளிச்செய்கையாலும் ஆவரணக்ரமம் கொள்ளவேணும்." இங்கு பராசரபகவானுக்கும், பிள்ளைலோகாசார்யருக்கும் முன்னுல் ஆச்சான்பிள்ளையை எடுத்திருப்பதைப் பார்ககவேண்டும். (3) (அசித்-27) "'......' என்று ஜீயர் அருளிச்செய்கையாலும், ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் '......' என்கிற இதுக்கு '......' என்று பிள்ளை எங்களாழ்வான் வ்யாக்யானம் பண்ணுகையாலும், ......" இஙகு, பெரியவாச்சான்

பிள்ளைக்கும் அவருடைய குமாரருக்கும் சிஷ்யராயிருந்த வாதிகேஸரி ஜீயரின் ஸ்ரீஸூக்திகளை பாஷ்யகாரருடைய அந்தரங்கசிஷ்யர் களில் ஒருவரான எங்களாழ்வானுடைய ஸ்ரீஸூக்திக்கு முன் காட்டியிருப்பதை நோக்கவேண்டும். (4) (ஈச்வர-8) "'உபர்யு பர்யப்₃ஜ...' என்னக்கடவதிறே; 'உயர்நலம்' என்றிறே ஆழ்வாரும் அருளிச்செய்தது." இங்கு ஆழ்வாருடைய ஸூக்திக்கு முன் அவருக்கு வெகுகாலத்திற்குப் பின்னிருந்த ஆளவந்தாருடைய ஸூக்தி எடுக்கப்பட்டிருக்கிறது. (5) (ஈச்வர-22) "'நளிர் மா மலருந்தி வீட்டைப் பண்ணி விளையாடும் விமலன்' 'இன்புறுமிவ் விளையாட்டுடையான்' என்று அபியுக்தரும்...சொன்னார்களிறே." இங்கு ஆண்டாளுடைய ஸூக்திக்குப்பின் நம்மாழ்வாருடைய ஸூக்தி எடுக்கப்பட்டிருக்கிறது. விரிவிற்கஞ்சி இத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறோம். இவைகளிலிருந்து மற்ற வாதங்களைப்போல் க்ரம வாதமும் நிஷ்ப்ரயோஜனமானது என்று நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயிக்கப்பட்டது.

## 7. அதிஶுஷ்கவாத₃தூ₃ரீகரணம்

49. ப்ரப₃லவாதம் ஒன்றும் இல்லாமையாலே, [வார்த்தை 100 ல்] அதிசுஷ்கவாதம் ஒன்றைச் செய்கிறார். ஸுதர்சனம் ஸம் புடம் 2 ஸஞ்சிகை 1 ல் பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்தோத்ரரத்ன வ்யாக்யானம் சது:ச்லோகீவ்யாக்யானம் முதலானவை ஸ்ரீஸூக்தி மாலா மலர் இரண்டாக வெளியிடப்படும் என்னும் விளம்பரம் ஒன்றை வெளியிட்டோம். ஸ்ரீவைஷ்ணவஸமயாசாரநிஷ்கர்ஷத்தில் பெரியவாச்சான்பிள்ளை சது:ச்லோகீ வ்யாக்யானமருளியதாகக் காணப்பட்டபடியாலும், சதுச்லோகீவ்யாக்யானமொன்று தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டிருப்பதாகக் கேள்விப்பட்டிருந்தபடியாலும் அதை ஸம்பாதித்து வெளியிடலாம் என்னும் உத்தேசத்தில் இவ் விளம்பரம் வெளியிடப்பட்டது. ஸ்தோத்ரரத்ன வ்யாக்யானத்தை அச்சிடத்தொடங்கியிருந்த ஸமயம் அது. பின்னர் தெலுங்குலிபியில் அச்சிடப்பட்டிருந்த சது:ச்லோகீவ்யாக்யானத்தை ஸம்பாதித்துப் பார்த்ததில், அது அகச்சான்றுகளிலிருந்தே நாயனாராச்சான்பிள்ளை யுடையதென விளங்கிற்று. ஸம்புடம் 2 ஸஞ்சிகை 3 ராப்பரில் நம்மால் வெளியிடப்படவிருக்கும் சது:ச்லோகீவ்யாக்யானம் பெரிய வாச்சான் பிள்ளையுடையதன்றென்றும், நாயனாராச்சான் பிள்ளை யுடையதேயென்றும் அதையும் (தனியாகத்) தமிழில் வெளியிடுவோம் என்றும் அச்சிட்டோம். பிறகு, அதிருஷ்டவசத்தாலே சென்னை ஓரியண்டல் மானுஸ்க்ரிப்டஸ்லைப்ரரியில் ஓலைச்சுவடியிலிருந்தபெரிய வாச்சான்பிள்ளையின் சது:ச்லோகீவ்யாக்யானமும் கிடைத்தபடியால்

முதல் விளம்பரப்படியே பெரியவாச்சான்பிள்ளையின் சது:ச்லோகீ வ்யாக்யானத்தையும்சேர்த்தே இரண்டாவது மலரைவெளியிட்டோம்.

50. பரந்தரஹஸ்ய விவாதத்தோடு எந்தவிதமான சம்பந்தமும் இல்லாத இதை எடுத்துக்கொண்டு, சது:ச்லோகீவ்யாக்யானத்தை முதலில் பெரியவாச்சான்பிள்ளையுடையதென நாங்கள் மயங்கியிருந்ததாகவும், பிறகு அதை மாற்றிககொண்டு விட்டதாகவும், இந்த ப்ராமாணிகத்வத்தைப் பரந்தரஹஸ்யாதிகள் விஷயத்திலும் காட்டாமலிருப்பது பெரியார்கட்கு அழகல்லவென்றும் தூஷிக்கிறார். சது:ச்லோகீவ்யாக்யான விஷயத்தில் நாயனாராச்சான்பிள்ளையின் கிரந்தத்தை ஸேவித்துவிட்டுப் பெரியவாச்சான்பிள்ளையுடையதாக முதலில் மயங்கிப் பிறகுமாற்றிக்கொண்டோம் என்பது கிடையாது. தெலுங்குலிபி கிரந்தமே கையில் இல்லாமலிருந்தபோது அது பெரியவாச்சான்பிள்ளையுடையதாயிருக்கலாம் என்னும் நினைவாலே முதல் விளம்பரத்தை வெளியிட்டு, கிரந்தம் கிடைத்தவுடன் இரண்டாவது விளம்பரத்தில் அதை மாற்றிக்கொண்டது உண்மை. இதில் இவர்க்கென்ன ஸாத₄கம்? நமக்கென்ன ப₃ாத₄கம்? சிறுபிள்ளைகள்கூடக் காஞ்சீஸ்வாமி செய்யும் இவ்வதிசுஷ்கவாதத்தைச் செய்யமாட்டார்களே!

51. பரந்தரஹஸ்யாதிகளை நூற்றுக்கணக்கான முறை ஸேவித்தபினபும், ப்ராசீநமஹான்களின் நூற்றுக்கணக்கான கிரந்தங்களை ஆராய்ந்த பின்னும் பரந்தரஹஸ்யாதிகள் பெரியவாச்சான் பிள்ளையுடையவையே என்று உறுதிப்பட்டுவருவதை உலகறியப் பலநூல்களாலே எந்தையாரும் வெளிப்படுத்தியிருக்கிறார்; அடியேனும் வெளிப்படுத்திவருகிறேன். நாஙகள் எடுத்துக் காட்டும பிரமாணங்களுக்கு யாதொரு பதிலையும் கூறுமல் எங்களை அப்ராமாணிகர்களென்று தூஷிப்பது தான் பெரியார்கட்கு அழகோ? பரவஸ்து பட்டர்பிரான்ஜீயர், ரஹஸ்யவிவேககாரர், அஷ்டச்லோகீவ்யாக்யதா ஆகியவர்களைப்போன்ற பரமப்ராமாணிக மஹனீயர்கள் [மாமுனிகளுக்கு நூறு வருஷத்திற்குள்ளிருந்தவர்கள்] எவராவது விவாத₃ாஸ்பத₂மான கிரந்தங்களில் ஏதாவதொன்றை எடுத்து அதை நாயனாராச்சான்பிள்ளையுடையதாகவோ, நாலூராச்சான்பிள்ளையுடையதாவோ வழங்கியிருப்பதாகக்காட்டினால் எம்கொள்கையை மாற்றிக்கொள்ளவும் ஸித்தமாயிருக்கிரேம். இதைக்காட்டமுடியாமல், நாயனாராச்சான்பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்று வழங்குவதுண்டு என்பதற்கும் ஒரு ப்ரமாணத்தைக் காட்டமுடியாமல், ஏற்கனவே தள்ளப்பட்ட சுஷ்கவாதங்களான க்ரமவாதம் முதலான மயக்கு வாதங்களைத் திருப்பியெழுதி வருவதா மஹான்களுக்கு அழகு?

ஆக, இவ்வளவால் காஞ்சீஸ்வாமியின் அதிசுஷ்கவாதம் தூ₃ரதோ நிரஸ்தமாயிற்று; ஆக, இவ்வத்தியாயத்தில் எல்லா சுஷ்கவாதங் களும் தலையெடுக்கமுடியாதபடி தள்ளப்பட்டன.

நாலாமத்தியாயம் முற்றிற்று.

## ஐந்தாமத்தியாயம்

### அகப்புறச்சான்றுகளின் நிருபணம்.

52. இவ்வத்தியாயத்தில் விவாதாஸ்பதமான க்ரந்தங்கள் நாயனாராச்சான்பிள்ளையைக் காட்டிலும் முற்பட்டவாரன பெரிய வாச்சான்பிள்ளையுடையவையே என்பதை நிரூபிக்கச் சில அகப்புறச் சான்றுகளை நிரூபிப்போம். (முதலாவதாக) நாயனாராச்சான்பிள்ளை யின் நூல்களிற்போலே, விவாதாஸ்பதமான கிரந்தங்களில் பெரியவாச்சான்பிள்ளை, பிள்ளைலோகாசார்யர் ஆகிய ஆசார்யர் களின் நாமநிர்த்தேசம் காணப்படவில்லை. நம்பிள்ளைக்குப் பிற் பட்ட எந்த ஆசார்யருடைய ப்ரஸ்தாவமும இல்லை.

53. நாயனாராச்சான்பிள்ளை தம்முடைய சரமோபாய நிர்ண யத்தில் ஸவாசார்யரும் தந்தையுமான பெரியவாச்சான்பிள்ளையை எடுக்கும்போது நியமேந 'நமமுடைய பிள்ளை' என்றும் 'பிள்ளை' யென்றும் எடுககிறார். நம்பிள்ளையை எடுக்கும்போது 'நம்பிள்ளை' என்றே நியமேந எடுக்கிறார். பெரியவாச்சான்பிள்ளை பெரிய திருமொழி (5-8-7) "அந்தணன் ஒருவன்" என்றவிடத்து வியாக்கி யானத்தில், "முற்பட த்வயத்தைக் கேட்டு, இதிஹாஸ புராணங் களையும் அதி₄கரித்து, பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாய மீமாம்ஸைகளும் அதி₄கரித்து, போதுபோக்கும் அருளிச்செயலிலே யாம்படி பிள்ளையைப்போலே அதி₄கரிப்பிக்கவல்லவனை யிறே 'ஒருத்தன்' என்பது" என்று நம்பிள்ளையைப் பிள்ளை யென்றே எடுக்கிறார். இதிலிருந்து நாயனாராச்சான்பிள்ளை ஸ்வாசார்யரான பெரியவாச்சான்பிள்ளையைப் பிள்ளையென்றும், ப்ராசார்யரான நம்பிள்ளையை 'நம்பிள்ளை' என்றும், பெரியவாச்சான பிள்ளைஸ்வாசாரயரான நம்பிள்ளையை 'பிள்ளை' என்றும் குறிக்கிறார் கள் என்று விளங்குகிறது. மாணிக்கமாலையிலே [பக்கம் 4] "நஞ்சீ யரைப் பிள்ளை கேட்க" என்று காண்கிறது. நஞ்சீயரின் சிஷ்யரான நம்பிள்ளையைப் பிள்ளையென்று வழங்கக்கூடியவர் பெரியவாச்சான் பிள்ளையேயாகையால் மாணிக்கமாலை பெரியவாச்சான்பிள்ளை யுடையதென்று ஸித்தித்தது.

54. ஸ்ரீவைகுண்ட₂ க₃த்₃யவ்யாக்யானத்தில் மூன்றுவது சூர்ணையில், "ப்ரபு₃த்₃த₄முக்₃த₄ாம்பு₃ஜ" என்று தொடங்கும ஸ்தோத்ரரத்ந ஸ்ரீஸூக்திகளுக்கு வ்யாக்யானமருளிச்செய்கையில் "ப்ரபு₃த்₃த₄ தொடங்கி விராஜிதம் அறுதியாக உள்ளபதங்களுக்குப்

பொருள் ஸ்தோத்ர பாஷ்யத்தில் கண்டுகொள்வது" என்று அருளினர் ஆச்சான்பிள்ளை. இவர் நாயனாராச்சான்பிள்ளையா யிருந்தாராகில் "நம்முடைய பிள்ளை அருளிச்செய்த ஸ்தோத்ர பாஷ்யத்தில் கண்டு கொள்வது" என்றே அருளியிருப்பார்: அப்படி அருளாமையாலே ஸ்தோத்ரக₃த்₃யபா₄ஷ்ய கர்த்ரைக்யம் விளங்கு கிறது. ஸ்தோத்ரபா₄ஷ்யம பெரியவாச்சான்பிள்ளை அருளியதே என்பது ஸர்வஸம்ப்ரதிபந்நம. ஆகையால, கத்யபாஷ்யம் அவா அருளியதே எனத்தேறிற்று.

55. பரந்தரஹஸ்யத்திலுள்ள நீண்ட வாக்யராசியொன்றும, வடக்குத்திருவீதிப்பிள்ளையின் அஷ்டாக்ஷரதீபிகையின் வாக்யராசி யும் ஒருபடிப்பட்டதாயிருப்பதை அஷ்டச்லோகீ வ்யாக்யாதா காட்டி னர். ஸப்ரஹ்மசாரிகளான பெரியவாச்சான்பிள்ளை வடக்குத் திருவீதிப்பிள்ளைகளின் நூல்கள் இப்படி அமையுமேயொழிய வெவ்வேறு ஆசார்யர்களையுடையவர்களின் கிரந்தங்கள் இப்படி அமையாது. இதனுல் பரநதரஹஸ்யம் பெரியவாச்சான்பிள்ளை அருளியதே என்று ஸித்தித்தது.

56. பரந்தரஹஸ்ய விஷயத்தில் மற்றுமொரு அசைக்க முடி யாத புறச்சான்றைக் காட்டுவோம். நாயனாராச்சான்பிள்ளை தம் சது:ச்லோகீ வ்யாக்யானத்தில் மூன்றும் ச்லோகவ்யாக்யானத்தின் கடைசியில் [பக்கம் 49] "கிஞ்ச, கு₃ணாதி₃களுக்கு உபாயத்வம் உண்டாகிலும், இவனுக்குப் புருஷகாரபா₄வம் நியதமாயிருக்கும் என்றிறே ஆசார்யர்கள் நிர்வஹித்தது" என்று அருளியிருக்கிறார். பரந்தரஹஸ்யத்தில் [பக்கம் 26, 27, 28 ல்] "விசேஷணபூ₄தமான கு₃ணவிசேஷங்களோபதி உபாயோபயோகி₃த்வம் அவளுக்கு இல்லாமையாலும்......இவளுக்குப்புருஷகாரபா₄வத்திலே நோக் காகக்கடவது" எனறும், "சில குணவிசேஷங்கள் உபாயதயா அந்வயிக்கிறபடியென்னென்னில், அவை கார்யோபயோகி₃ யாகையாலும், கு₃ணத்வேந அப்ருத₂க்பு₃த்₃தி₄ப்ரவ்ருத்திக மாகையாலும், கு₃ணிகு₃ணத்₃வாரா கார்யம் செய்கை நைரபேக்ஷ யத்துக்குத் குறையில்லாமையாலும் அவற்றுக்குத் தட்டில்லை. இவள் கார்யாநுபயுக்தையாகையாலும், த்₃ரவ்யத்வேந ப்ருத₂க்₃பு₃த்₃தி₄ப்ரவ்ருத்தியோக்₃யதையுண்டாகையாலும், அத் தாலே உபாயநைரபேக்ஷயத்துக்குக் கொத்தையாயறுகை யாலும் உபாயபா₄வத்தில் அந்வயமில்லை. ஆகையாலே, சேஷித்வதசையிலும், ப்ராப்யத்வதசையிலும் ஒருமிதுநமேயாக வேண்டினவோபாதி, உபாயதசையிலே ஸ்வேதரஸகலஸஹா யாஸஹமாயிருக்கையாலே, இவளுக்கு உபாயபா₄வத்தில் அந்வயமின்றியிலே புருஷகார பா₄வத்திலேயாகக்கடவது,"

என்றும் அருளிச்செய்யப்பட்டிருக்கும் விஷயத்தின் அர்த்தத்தையே சதுஃச்லோகீவ்யாக்யானத்தில் [பக்கம் 49 கடைசியில்] நாயனாராச்சான்பிள்ளை ஆசார்யர்களின் நிர்வாஹமாகக் காட்டினார் என்பது தெளிவு. அடுத்த பக்கத்தில், இந்தப் பரந்தரஹஸ்ய ஸ்ரீஸூக்திகளின் சாயையிலே தாமே ஸ்ரீஸூக்திகளையிட்டு இவ்வாசார்ய நிர்வாஹத்தை விவரித்தும் காட்டினார். நாயனாராச்சான்பிள்ளையால் "ஆசார்யர்கள்" என்று வழங்கத்தக்கவர் பெரியவாச்சான்பிள்ளையும் அவருக்கு முற்பட்ட ஆசார்யர்களுமேயாவர். பெரியவாச்சான் பிள்ளையின் மற்ற நூல்களிலும், அவருக்கு முற்பட்ட மற்றவர்களின் நூல்களிலும் ச்ருதிகளுக்கு உபாயத்வம் உண்டாகிலும் பிராட்டிக்குப் புருஷகாரபாவம் நியதமாயிருக்கும் என்னும் நிருபணம் எங்குமேயில்லை. பரந்தரஹஸ்யம் ஒன்றிலேயே இந்நிருபணம் உள்ளது. இதனாலும் பரந்தரஹஸ்யம் நாயனாராச்சான் பிள்ளையின் ஆசார்யரான பெரியவாச்சான்பிள்ளையுடையதேயென்று உறுதியாகத் தேறிற்று. ஆக, இவ்வளவால் அகச்சான்றுகளைக் கொண்டும். புறச்சான்றுகளைக்கொண்டும் ஆராயும்போது குறிப்பாகப் பரந்தரஹஸ்யம், மாணிக்கமாலை, கத்யவ்யாக்யானம் என்னும் மூன்று• நூல்களும், பொதுவாக விவாதாஸ்பதமான நூல்களில் இப்போது காணப்படும் எல்லா நூல்களுமே நாயனாராச்சான்பிள்ளையின் ஆசார்யரும் தந்தையுமான பெரியவாச்சான்பிள்ளையுடையதாகவே இருக்கத்தகும் என்று நிரூபிக்கப்பட்டது.

ஐந்தாமத்தியாயம் முற்றிற்று.

## ஆறுமத்தியாயம்

### ஸாரமான ப்ரச்னங்கள்

57. தத்வத்ரயஸங்க்ரஹம் என்னும் அபூர்வ நூலையும் கண்டுபிடித்து வெளியிட்டு, மாமுனிகள் பெரியவாச்சான்பிள்ளையை ஆச்சான்பிள்ளையென்று குறித்திருக்கிறார் என்று நிலைநிறுத்தியிருக்கிறோம் நாம். மற்றும் பல ப்ரமாணங்களையும் காட்டியிருக்கிறோம். இவற்றுக்கு யாதொரு பதிலையும் கூறாமல், பதினாறு வருடத்திற்கு முன் எழுதியதையே திருப்பித்திருப்பி எழுதிவருகிறார் காஞ்சீஸ்வாமி. விவாதத்திற்கு ஓர் முடிவேற்படுத்துவதற்காக இது வரையில் நிரூபிக்கப்பட்ட விஷயங்களின் ஸாராம்சத்தைச் சில ப்ரச்னங்களாக்கி, காஞ்சீஸ்வாமியை முன்னிலைப்படுத்தி அவற்றைக் கேட்கின்றேன். அவற்றுக்கு அவர் பதிலுரைக்கும் ரீதியிலிருந்து மத்யஸ்தர்கள் உண்மைநிலையை உணர்ந்து கொள்ளலாம்.

(1) (ஆச்சான்பிள்ளையின் தத்வத்ரயம் என்று வழங்கப்பட்ட) தத்வத்ரய ஸங்க்ரஹத்தை ஓரிடத்தில் பெரியவாச்சான்பிள்ளையுடையதாக எடுத்துவிட்டு, முன்னும் பின்னும் மூன்றிடங்களில் அந்நூலை

ஆச்சான்பிள்ளையுடையதாகவும் தத்வத்ரயவ்யாக்யானத்தில் குறிப் பிடுகிறார் மாமுனிகள். இதிலிருந்து மாமுனிகள் ஆச்சான்பிள்ளை யென்று ரஹஸ்யவ்யாக்யானங்களில் பெரியவாச்சானபிள்ளையையே வழங்கினர் என்று விளங்கவில்லையா?

(2) "மூலமாகிற தத்வத்ரயஸங்க்ரஹத்தை ஓரிடத்தில பெரிய வாச்சான்பிள்ளையுடையதாக எடுத்து விட்டார்; ஆகையால மற்ற விடங்களில அவரை ஆச்சானபிள்ளையென்றும் குறிக்கலாம்; அந்த ஸங்க்ரஹத்துக்கு விவரணமான ததவத்ரயவிவரணத்தையும், பரந்த ரஹஸ்யாதிகளையும் அருளியவரை எல்லாவிடங்களிலும் மாமுனிகள ஆச்சான்பிள்ளையெனறே குறிககையால் இவர வேறு பட்டவர் என்று தோற்றுகிறதே" எனில்: ஸ்ரீவசநபூஷணம 5-வது சூர்ணை வ்யாக்யானத்தில ஸ்ரீபராசரபட்டர் அருளிய ஸஹஸ்ரநாமபாஷ்ய கர்த்தாவை பெரியபட்டர எனறு எடுத்தவர் அநதபாஷ்யகர்த்தா வையே 3-வது சூர்ணை வ்யாக்யானத்தில் பட்டர் எனறு எடுத்தார். அநதபட்டருடைய ஸ்ரீரங்கராஜஸ்தவம், ஸ்ரீகுணரத்நகோசம, அஷ்ட ச்லோகீ ஆகியவற்றை எடுக்குமபோது நியமேந பட்டர் அருளிய தாகவே எடுப்பதினால் கர்த்ருபே₄த₃ம ஸித்திககாததுபோல் இங்கும் கர்த்ருபே₄த₃ம் ஸித்திக்காது எனறு கொளளாக்குறையென்ன?

(3) 'ஸ்ரீவசநபூஷணம் 5-வது சூர்ணையின் வியாக்கியானத்தில் முன வாக்யத்தில் நடுவில் திருவீதிபபிள்ளைபட்டரையெடுத்துவிட்டு, அடுத்த வாக்யத்தில பராசரபட்டரையெடுககுமபோது 'பெரிய பட்டர்' என்று குறிப்பிட்டதால இருவரும் வேறுபட்டவர் என்று விளங்குவதுபோலே, சற்று முன தத்வத்ரய விவரண கர்த்தாவை ஆச்சானபிள்ளையென்று எடுத்துவிட்டு, ஸஙகரஹகர்த்தாவைப் பெரியவாச்சானபிளளையென்று எடுபபதால் இருவரும வேறென்று விளஙகவில்லையா?' எனில்: அங்கு போலே இஙகு ஆச்சான்பிளளை யென்றும், பெரியவாச்சான்பிளளையென்றும, அடுத்தடுத்த வாக்கியங்களில் குறிக்கப்படாமையாலும், இடையே, (சுமார் இரண்டு பக்கங்களை அடைத்துக்கொணடிருக்கும்) பற்பல வாக்யஙகள் காணப் படுகையாலும் வ்யக்திபே₄தம் ஸிததிக்காது எனறு கொளளக் குறையென்ன?

(4) அவ்விடத்தில் வ்யக்திபேதம ஸித்தித்தே தீரும் என்று நிர்ப்பந்தித்தால், ஸ்ரீவசநபூ₄ஷணம் ஐந்தாவது சூர்ணையின் வியாக்கியானத்திலேயே பெரியபட்டர் என்று ஸஹஸ்ரநாமபாஷ்ய கர்த்தாவை எடுத்ததற்கு மூன்று வாக்யத்திற்கு முன் ஸ்ரீகுணரத்ந கோசகர்த்தாவை 'பட்டர்' என்றே எடுத்திருப்பதிலிருந்து ஸ்ரீகுண ரத்நகோசகர்த்தா வேறு, ஸ்ரீஸஹஸ்ரநாம பாஷ்யகர்த்தா வேறு என்று சொல்லவேணடிவருமே; இதற்கென்செய்வீர்?

(5) பெரியவாச்சான்பிள்ளையைக் காட்டிலும், ஆச்சான்பிள்ளை யென்று எடுக்கப்படுபவர் வேறுபட்டவர் என்றே ஸித்தித்தாலும், பெரியாழ்வார் திருமொழியில் மாமுனிகளாலேயே ஆச்சான்பிள்ளை யென்றே எடுக்கப்பட்ட நாலூராச்சான்பிள்ளையே அவர் என்று ஒருவர் சொல்ல முற்பட்டால் என்ன செய்வீர்? அப்போதும் நாயனாராச்சான்பிள்ளையே விவாதாஸ்பதமான க்ரந்தங்களையருளியவர் என்னும் தேவரீருடைய அபீ$_4$ஷ்டம் ஸித்திக்காதே!

(6) மாமுனிகளுக்கு முற்பட்ட வார்த்தாமாலை, பரகாலநல்லான் ரஹஸ்யம் ஆகியவற்றிலும், பிற்பட்ட பல மஹனீயர்களின் நூல் களிலும் பெரியவாச்சான்பிள்ளை பலவிடங்களில் ஆச்சான்பிள்ளை என்றே குறிக்கப்படுவதை தேவரீரால் மறுக்கமுடியுமோ? மாமுனி களும அவரையே ஆச்சான்பிள்ளையென்று குறித்தார் என்று கொள்ளக்குறையென்ன?

(7) மாமுனிகளுக்கு முற்பட்ட நாலூராச்சான்பிள்ளை தம் சரமோபாயதாத்பர்யத்திலும், பிற்பட்ட பல மஹனீயர்கள் பல நூல் களிலும் பெரியவாச்சான்பிள்ளையின் குமாரரை நாயனாராச்சான் பிள்ளையென்றே குறித்திருப்பதையும், அவரை ப்ராசீனர் எவருமே ஆச்சான்பிள்ளையென்று குறிக்கவில்லையென்பதையும் தேவரீரால் மறுக்கமுடியுமா?

(8) பெரியவாச்சான்பிள்ளைக்கும், அவர் குமாரரான நாயனாராச்சான்பிள்ளைக்கும் சிஷ்யரான பரகாலதாஸர் தம் பரகாலநல்லான ரஹஸ்யத்தில் பெரியவாச்சான்பிள்ளையின் குமாரரை அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் என்னும் பொருளுள்ள ஸுந்தர வரராஜாசார்யர், ஸௌம்யவரேச்வரர் என்னும் பதங்களால் நிர்த்தேசிப்பதிலிருந்து நாயனாராச்சான்பிள்ளையின் திருநாமத்தில் 'நாயனார்' என்னும் பதமே உயிரானது என்பதை தேவரீரால் மறுக்க முடியுமோ?

(9) மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளிலிருந்து விவாதாஸ்பதமான கிரந்தங்கள் எந்த ஆச்சான்பிள்ளையுடையதென்று விளங்கவில்லை; மாமுனிகளுக்கு முற்பட்டவர்கள் இந்த கிரந்தங்களின் நாமநிர்த் தேசத்தையே செய்யவில்லை; இந்நிலையில், மாமுனிகளுக்குப் பின் அதிஸமீபகாலத்தில் இருந்தவர்களும், ப்$_4$ரமப்ரமாத$_3$ாதி$_3$களற்றவர் களுமான மஹனீயர்களின் கிரந்தங்களிலிருந்து விவாதாஸ்பதமான கிரந்தங்களின் கர்த்தா யார் என்று நிர்ணயிக்கக் குறையென்ன?

(10) மாமுனிகளின் சிஷ்யரான பரவஸ்து பட்டர்பிரான்ஜீயர் தம் அந்திமோபாயநிஷ்டையின் கடைசியில் மாணிக்கமாலையைப் பெரியவாச்சான்பிள்ளையருளியதாகக் காட்டியிருக்கிறரே; இவருக்கும் ப்$_4$ரமம் உண்டு என்கிறீரா? இதற்குச் சான்று காட்டமுடியுமா?

(11) மாமுனிகளுக்குப் பிற்பட்டவர்கள் என்னும் ஒரே காரணத்தினுல், அவருடைய சிஷ்யர்களுக்கும் ப்₄ரமத்தை இசைவதாகில், தேவரீருடைய கூடஸ்த₂ருமு, மாமுனிகளின் சிஷ்யருமான ப்ரதிவாதி பயங்கரம் அண்ணனுக்கும் அதை இசைகிறீரா?

(12) மாமுனிகளுக்கு நூறு வருஷத்துக்குள்ளிருந்தவர்களும், அவருடைய சிஷ்யபரமபரையில் வந்தவர்களுமான மஹனீயர்களால் அருளப்பட்ட ரஹஸ்யவிவேகத்திலும், அஷ்டச்லோகீ வ்யாக்யானத்திலும் ஏதாவது ப்₄ரமப்ரமாத₃ங்களை தேவரீரால் எடுத்துக் காட்டமுடியுமா? முடியாதாகில, விவாத₃ாஸபதமான கிரந்தஙகளுக்குள் பரந்தரஹஸ்யம், மாணிக்கமாலை, கத்யவ்யாக்யானம ஆகிய வற்றை அவர்கள் பெரியவாச்சான்பிள்ளையுடையதாக எடுத்திருப்பதை ப்ரமாணமாகக கொளளக்குறையெனன?

(13) ப்₄ரமப்ரமாத₃ஙகளுககு வசப்பட்டவரெனறு நிரூபிக்கப் பட்ட அதிநவீனரான அயோத்யாஜீயர் ஸ்வாமியின் வாக்யம முற் கூறிய மஹனீயர்களின் ஸ்ரீஸூக்திகளை அழிக்கவல்லமையுளளதா?

(14) ‘மாமுனிகள் பெரியவாச்சான்பிள்ளையிடம் உளள அபார கௌரவபுத்தியாலே, அவருடைய அருளிச்செயல் வ்யாக்யானங் களையெடுக்கும்போது நாமநிர்த்தேசமிலலாமலே ‘பூர்வர்கள்’ முதலான பதங்களையிட்டே எடுபபதால், பலவிடங்களில் அவருடைய நாமநிர்த்தேசததையிட்டு எடுததிருக்கும ஆச்சானபிள்ளை வேறு பட்டவர் என்று விளங்கவிலலையா’ எனில: நஞ்சீயர், வடக்குத் திருவீதிபபிள்ளை முதலானுரின் அருளிச்செயல வியாககியானஙகளை யெடுக்கும்போதும ‘பூர்வர்கள்’ என்றேயெடுத்திருக்கையாலும், அவர்களிடமும் மாமுனிகளின கௌரவபுத்திக்குக் குறையிலலை யாகையாலும, அவர்களையும் மாமுனிகள் பெயரையிட்டுக குறிபப தில்லை எனனவேண்டிவருமே; ஆனுல் அவர்களைப் பெயரையிட்டுக் குறித்திருக்கிருரே; இதற்கென்செயவீ?

(15) உமமுடைய பக்ஷத்தின்படியே உபதேசரத்தினமாலையில் மூனறிடஙகளிலும தத்வத்ரயவ்யாக்யானத்தில் ஓரிடததிலும பெரிய வாச்சான்பிள்ளையைப் பெயரையிட்டுக குறித்திருக்கிருரே; இது கௌரவபுத்திக்குக் குறையில்லையா?

(16) ‘அவ்விடங்களில் கிரந்தகர்த்தா இன்னுர் என்று விளங்கு வதற்காகப் பெயரையிட்டுக் குறித்தார்’ எனனில், பரநதரஹஸ் யாதிகளின் விஷயத்திலும் அப்படியே கொள்ளக்குறையென்ன?

(17) உண்மையில், பெரியவாச்சான்பிள்ளையின் திருநாம மான க்ருஷ்ணநாமத்தையிட்டுக் குறிப்பதே கௌரவபுத்திககுக் குறையென்றும், ஆளவந்தார், எம்பெருமானுர், ஆழ்வான், எம்பார்,

பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை முதலானவற்றைப் போலே சிறப்புப் பெயரான ஆச்சான்பிள்ளை என்னும் திருநாமத்தையிட்டு எத்தனை யிடத்தில் குறித்தாலும் கௌரவபுத்திக்குக் குறையில்லை என்றும் ஏன் கொள்ளக்கூடாது?

(18) 'பெயரையிட்டுக் குறிக்கும்போது பெரிய என்னும் விசேஷணத்தை விடாமலன்றோ குறிக்கிறார்' எனில்: தத்வத்ரய வ்யாக்யானத்தில் மூன்றிடங்களில் அவ்விசேஷணத்தை விட்டும் குறித்திருக்கிறார் என்றும் விளங்குகையாலே மற்றவிடங்களிலும் ஆச்சான்பிள்ளையென்று குறிக்கக்குறையில்லை என்று ஏன் கொள்ளலாகாது?

(19) 'உபதேசரத்தினமாலையில் பெரியவாச்சான் பிள்ளை என்றே மூன்று பாசுரங்களில் குறிப்பிடப்பெற்றவரை ஆச்சான் பிள்ளையென்றே பலவிடங்களில் குறிப்பிடுவரோ?' எனில்: உபதேச ரத்தினமாலையிலேயே முழுத்திருநாமத்தையிட்டு இரண்டு பாசுரங் களில் குறிப்பிடப்பெற்றவரையே மற்ற எல்லாவிடங்களிலும் 'ஜீயர்' என்றே குறிப்பிட்டது போலே இதுவும் கூடும் என்று கொள்ளக் குறையென்ன?

(20) 'பரந்தரஹஸ்யத்தின் சைலி (நடை) ஸம்ஸ்க்ருதவாக்ய பஹுளமாய், நீண்டவாக்யங்கள் கொண்டதாயிருக்கிறதே; இது பெரியவாச்சான்பிள்ளையின் நடைக்கு மாறுபட்டதாயிற்றே' எனில்: உம் கருத்தின்படி பெரியவாச்சான்பிள்ளையின் சைலியையே கொண்ட மற்ற (விவாதாஸ்பத) கிரந்தங்களை அவருடையதென்று இசைகிறீரா?

(21) முமுக்ஷுப்படி வ்யாக்யான அவதாரிகையில் மாமுனிகள் பிள்ளைலோகாசார்யருக்குப் பலவிதமான சைலிகள் உள்ளதாக அருளியிருப்பதுபோலே பெரியவாச்சான்பிள்ளைக்கும் கூடும் என்று கொள்ளக்குறையென்ன?

(22) பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படி ஸ்தோத்ரபாஷ்யங்களின் அவதாரிகைகளின் நடைக்கும் பரந்த ரஹஸ்யத்தின் நடைக்கும் ஒற்றுமையும், நாயனாராச்சான்பிள்ளையின் நடைக்கும் விவாதாஸ்பதக்ரந்தங்களின் நடைக்கும் வேற்றுமை களும் காணப்படுவதை எப்படி நிர்வஹிப்பீர்?

(23) 'பிராட்டிக்கு உபாயத்வமுண்டு — என்னும் தேசிகரின் வாதத்திற்குப் பரந்தரஹஸ்யத்தில் மறுப்பு உரைக்கப்பட்டிருக் கிறதே' எனில்: 'பிராட்டிக்குப் புருஷகாரத்வத்தோடு ஒருவிதமான உபாயத்வமும் உண்டு' என்பது தேசிகரின் வாதம்; பரந்தரஹஸ் யததில் தள்ளப்பட்டிருப்பதோவெனில், 'பிராட்டிக்குப் புருஷகாரத்

வமேயில்லை; உபாயத்வமேயுண்டு; ப்ரபத்திக்கே புருஷகாரத்வ முண்டு' என்னும் வாதம். ஆகையால் இவ்வாதம் விலைசெல்லாது என்பதை இனியாவது இசைவீரா?

(24) 'பிள்ளைலோகாசார்யருக்கும் முற்பட்ட பெரியவாச்சான் பிள்ளை விரிவான பரந்தரஹஸ்யத்தை அருளியிருந்தாராகில், அதை அனைவரும் காலக்ஷேபக்ரந்தமாகக் கொண்டிருப்பார்களே' எனில்: பிள்ளைலோகாசார்யரின் பரந்தபடி முதலானவை அனைவராலும் அதி$_4$கரிக்கப்படாமைக்கு மாமுனிகளால் (முமுக்ஷுப்படி வ்யாக்யான அவதாரிகையில்) கூறப்பட்ட அதிவிஸ்த்ருதத்வம், ஸம்ஸ்க்ருத வாக்ய ப$_3$ாஹுள்யம் முதலான காரணங்களே பரந்தரஹஸ்யம் அனைவராலும் காலக்ஷேபக்ரந்தமாகக் கொள்ளப்படாமைக்குக் காரணம் என்று கொள்ளக் குறையென்ன?

(25) 'பெரியவாச்சான்பிள்ளை ரஹஸ்யங்கள் செய்ததாக உபதேசரத்தினமாலையில் மாமுனிகள் எடுக்கவில்லையே' எனில், பெரியவாச்சான்பிள்ளையின் தனிச்லோகம் முதலானவற்றையும், ஆசார்ய ஹ்ருதயகாரர், வாதிகேஸரி ஜீயா முதலானோரின் ரஹஸ்யங்களையும் எடுக்காமையாலே, ஒவ்வோராசார்யர் செய்த ப்ரத$_4$ானகைங்கர்யங்களையே உபதேசரத்தினமாலையில் ஏடுபடுத்திவைத்தார் என்று கொள்ளக்குறையென்ன?

(26) 'ஆச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளை எடுக்கும்போது மாமுனிகள் நடுவில் திருவீதிப்பிள்ளைபட்டர், பிள்ளைலோகாசார்யர் ஆகியவர்களின ஸ்ரீஸூக்திகளுக்குப் பிறகே எடுக்கையாலே, இவ்வாச்சானபிள்ளை பிள்ளைலோகாசார்யரிலும் சிறியவரான நாயனாராச்சானபிள்ளையே என விளங்கவில்லையா' எனில், மாமுனிகள் ஒரு க்ரமமும் இல்லாமல் பற்பலவிடங்களில் பற்பல ஆசார்ய ஸ்ரீஸூக்திகளையும எடுக்கையாலே இவ்வாதமும விலைசெல்லாது எனபதை இனியாவது இசைவீரா?

(27) விவாதாஸ்பதமான நூல்களிலுள்ள அகச்சான்றுகளும், மற்ற நூல்களிலுள்ள புறச்சானறுகளும் விவாதாஸ்பதக்ரந்தங்கள் பெரியவாச்சானபிள்ளையுடையவையே என்று வலியுறுத்துவதை தேவரீரால மறுக்கமுடியுமா?

58. இக்கேள்விகளை அப்படியே அச்சிட்டு அவற்றுக்கு த்ருப்திகரமாக பதிலிறுத்துவிடடால் அடியேன் பரந்தரஹஸ்யாதி$_3$காத்ருவிஷயமான கருத்தை மாற்றிக்கொள்ள ஸித்தனுயிருக்கிறேன். ஒரு கருத்து தவறெனறு ப்ரமாணங்களால் ஏற்பட்டதால், அதை மாற்றிக்கொளள என்றுமே அடியேன் தயங்கியது கிடையாது. தத்வத்ரயஸங்க்ரஹம் கிடைத்தவுடன் சிலகருததுக்களை அடியேன மாற்றிக்கொண்டிருக்கிறேன். த்ரைளபதீப்ரபத்தி விவாதத்தில்

எழுதியது போலே, மேலேயுள்ள கேள்விகளுக்கு பதிலிறுக்காமல் "ஏரண்ட வித்வானின் கேள்விகள் போலேயுள்ளன" இத்யாதிகளை யெழுதிப் பரிஹஸித்தாராகில், இக்கேள்விகளுக்கு பதில் எழுத முடியவில்லை என்னும் முடிவை நடுநிலையாளர்கள் செய்து கொள்ளலாம்; இவ்விவாதமும் முடிவடையும்.

59. ஆனால், இவர் தூஷணபரிஹாஸங்களில் இழியாமலும், பிறர் பெயரில் நூல்களை வெளியிடாமலும், க்யாதிலாபபூஜா தாக்ஷிண்யாதிகளுக்கு வசப்பட்டவர்களின் பெயரில் அபிப்பிராய பத்திரிகைகளை வெளியிடாமலும் தம்மால் விவாதம் செய்ய இயலாது என்பதை இன்று (20-8-63) வந்த 'அஞ்சந பஞ்ஜந சதகோடி' என்னும் நூலில் நிரூபித்துக்கொண்டிருக்கிறார். இந்த சதகோடியில உள்ள துர்வாதங்களை 'சதகோடி பஞ்ஜநம்' என்னும் கட்டுரையில் அடுத்தபடியாகச் சுருக்கமாக நிரஸிப்போம். இதன் கடைசியில், பரந்தரஹஸ்ய விவாத விஷயமாகச் சிலர் பெயரில் பல வருஷங்களுக்கு முன் வெளியிடப்பட்ட அபிப்பிராயபத்திரிகைகளை வெளியிட்டுக் கொண்டிருக்கிறார்.

60. ப்ரதிபக்ஷியின் நிரூபணங்களுக்கு யாதொரு பதிலையும் வெளியிடாமல், அபிப்பிராய பத்திரிகைகளைக் கொண்டு ஜயிக்க நினைப்பது நேர்மையற்றவர்களே செய்யக்கூடியது. ஸித்தாஞ்ஜந ஸம்ரக்ஷணத்தின் தொடக்கத்தில் (பாரா 9ல்) (1) வ்யக்தி தூஷணத்தில் இழியலாகாது (2) விவாதத்திற்கு சமபந்தமில்லாத விஷயங்களை விவரிக்கலாகாது (3) பிறர் பெயரில் நூல்களை எழுதி வெளியிடலாகாது (4) அபிப்பிராயபத்திரிகைகளை வெளியிடலாகாது என்னும் நியமங்களை நாம் வெளியிட்டிருந்தும், அந்த நியமஙகளில் எதையும் தம்மால் அனுஷ்டிக்க முடியாது என்று காட்டிக்கொள்கின்றார். இத்தகையவரோடு விவாதம் செய்ய லஜ்ஜை கொள்கின்றோம்; விவாதம் செய்தும் பயனில்லை. ஸித்தாஞ்ஜந ஸம்ரக்ஷணத்தில் நாம் இவரைக்குறித்து 25 கேள்விகளைக் கேட்டு அவற்றை அப்படியே அச்சிட்டு பதிலுரைக்கும்படி பிரார்த்தித்திருந்தோம். சதகோடியில் இவற்றை அச்சிடத்துணிவில்லாமல், இலக்கங்களை மாத்திரம் குறிப்பிட்டு, "ஏற்கனவே பதில் கூறப்பட்டது" "பிஷ்டபேஷணமயம்" "பூர்வமே நிரூபிக்கப்பட்டு விட்டது" "15 to 24 இக்கேள்விகள் எல்லாவற்றுக்கும் பதிலை எழுதியாய்விட்டது" என்னும் ரீதியிலே பதில் எழுதியிருக்கிறார். பிறர் பெயரில் தூஷணபரிஹாஸமயமான நூல்களையும் கடிதங்களையும் இனியாவது வெளியிடாமல், தைரியத்தோடு பரந்தரஹஸ்ய விசார விஷயமான 27 கேள்விகளையும் அப்படியே அச்சிட்டு, அவற்றுக்கு பதிலுரைக்க முன் வருவரேல் அவற்றை ஆராய ஸித்த

மாயிருக்கிறோம். அப்படியல்லாமல் இளமைதொடங்கியுள்ள தம் வழக்கப்படி விதண்டா வாதங்களையும் தூஷணபரிஹாஸங்களையும் செய்வதற்கென்றே பிறர் பெயரில் நூல்களை வெளியிடுவரேல், அவற்றை நாம் த்ருணீகரித்து இருப்போம். பதிலுக்கு தூஷண பரிஹாஸங்களை எழுதமாட்டோம. பிறர் பெயரில நூலகளை வெளியிடுவது முதலான நேர்மையற்ற செயல்களில் இழியமாட்டோம. இச்செயல்களில் இவர்க்கே வெற்றிகிட்டுமேயொழிய நமக்குக் கிட்டாது.

61. வைஷ்ணவர்களோடு விவாதம் செய்வதில் அடியேனுக்கு என்றுமே ருசியில்லை. பாகவதாபசாரத்திலேயே ஆயுளைக்கழிப்பதில் நமக்கு விருப்பமில்லை. இதரமதஸ்தர்களால் பலவிதமாகத்தாக்கப் பட்டுவரும் ஸ்ரீவைஷ்ணவஸித்தாந்தத்தை ரக்ஷிக்கும நூல்களை எழுதுவதற்கும் வெளியிடுவதற்குமே நமக்குப் பொழுது போதவில்லை. ஆகையால், கேள்விகளை அச்சிட்டு தூஷணபரிஹாஸங்களில்லாமல் பதில் கூறும் நேர்மையான வழியில் பிறர் செல்லாவிடில் நாம் இனி இதுவிஷயமாக யாதொன்றும் எழுதமாட்டோம் என்பதை திடமாகக் கொள்வது. அப்படி நேர்ந்தால் இவ்வத்தியாயத்தையே இந்நூலின் பூர்த்தியாகவும் கொள்வது.

ஆறுமத்தியாயம் முற்றிற்று.

---

# முக்கியமான குறிப்பு

*இந்நூலில் பெரியவாச்சான்பிள்ளையுடையவையாக ஸ்தாபிக்கப்பட்டிருக்கும்* **பரந்தரஹஸ்யம, மாணிக்கமாலை** *முதலான ரஹஸ்யக்ரந்தங்களும்,* **கத்யவ்யாக்யானம், ஜிதந்தே வ்யாக்யானம்** *ஆகிய திவ்யக்ரந்தங்களும் நம்மிடம் கிடைக்கும். பெரியவாச்சான் பிள்ளையின் தத்வத்ரயஸங்க்ரஹம் அடுத்த படியாக அச்சிடப்பட்டுள்ளது. நாயனாராச்சான் பிள்ளையின் சது:ச்லோகீவ்யாக்யானமும் நம்மிடம் கிடைக்கும் விலை விபரங்களுக்கு அடுத்த ஏழாவது பக்கம் காண்க.*

**கிடைக்குமிடம்:-**

S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M. A. B. L. அட்வகேட்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

ஸ்ரீ.
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிய

# தத்வத்ரய ஸங்க்ரஹம்

ஸ்ரீமத் க்ருஷ்ண ஸமாஹ்வாய நமோ யாமுந ஸூநவே।
யத் கடாக்ஷைக லக்ஷ்யாணாம் ஸுலப$_4$ ஸ்ரீத$_4$ரஸ் ஸதா$_3$॥

## அவதாரிகை

1. இதரத$_3$ர்ஶநங்களில் பதா$_3$ர்த்த$_2$ங்கள் ஆறென்பார், பதினாறென்பார், இருபத்தஞ்சென்பார் இப்படி ப$_3$ஹுப்ர காரங்களிலே விப்ரதிபத்தி பண்ணுவர்கள்.

2. நம் த$_3$ர்ஶநத்துக்குத் தத்வம் மூன்று.

3. அவையாவன– 'சித்' என்றும், 'அசித்' என்றும், 'ஈச்வரன்' என்றும்.

## அசித்ப்ரகரணம்

4. அசித்தாகிறது– கு$_3$ணத்ரயாத்மகமாய், நித்யமாய், ஜட$_3$மாய், விபு$_4$வாய், எம்பெருமானுக்கு ப்ரகாரதயா ஶேஷமாய், இவனுக்கு லீலோபகரணமாய், மஹதா$_3$தி$_3$ ஸர்வ விகாரங்களுக்கும் ப்ரக்ருதியாய், தன்னோடு ஸம்ப$_3$ந்தி$_4$த்த சேதனனுக்கு ப$_4$க$_3$வத்ஸ்வரூபத்தை மறைத்துத் தன்பக்க லிலே போ$_4$க்$_3$யபு$_3$த்$_3$தி$_4$யைப் பிறப்பிக்கும் தன்மையை உடைத்தாய், ஸததபரிணாமியாயிருக்கும்.

5. இதில் ஸூக்ஷ்மபரிணாமம் அவிஶத$_3$மாயிருக்கும்.

6. ஸ்தூ$_2$லபரிணாமம் விஶத$_3$மாயிருக்கும். அதாகிறது மஹதா$_3$தி$_3$ விகாரங்கள்.

7. இந்த மூலப்ரக்ருதி மஹதா$_3$தி$_3$களாய்ப் பரிணமிக் கும்படி எங்ஙனேயென்னில்:

8. கு$_3$ணத்ரயங்களினுடைய ஸாம்யாவஸ்தை$_2$யான மூலப்ரக்ருதியில் நின்றும் மஹான் பிறக்கும்.

9. இதில் நின்றும் அஹங்காரம் பிறக்கும்.

10. இதுதான் ஸாத்விகமாயும், ராஜஸமாயும், தாமஸ மாயும் மூன்று படியாயிருக்கும்.

11. இதில் ஸாத்விகாஹங்காரத்தில் நின்றும் ஏகாத$_3$ ஶேந்த்$_3$ரியங்கள் பிறக்கும்.

12. இந்த்$_3$ரியங்கள்தான் எவையென்னில்: ச்ரோத்ர த்வக் சக்ஷுஸ் ஜிஹ்வா க்$_4$ராணங்களென்கிற ஜ்ஞாநேந்த்$_3$ரியங்களைந்தும், வாக் பாணிபாத$_3$ பாயூபஸ்த$_2$ங்களென்கிற கர்மேந்த்ரியங்களைந்தும், இவற்றுக்கு ப்ரதா$_4$நமான மநஸ்ஸுமாக இந்த்$_3$ரியங்கள் பதினொன்று.

13. தாமஸாஹங்காரத்தில் நின்றும் ஶப்$_3$த$_3$தந்மாத்ரை பிறக்கும்.

14. இதில் நின்றும் இதினுடைய ஸ்தூ$_2$லாவஸ்தை$_2$யாய் ஶப்$_3$த$_3$கு$_3$ணகமான ஆகாஶம் பிறக்கும்.

15. இதில் நின்றும் ஸ்பர்ஶதந்மாத்ரை பிறக்கும்.

16. இதில் நின்றும் ஸ்பர்ஶகு$_3$ணகமான வாயு பிறக்கும்.

17. இதில் நின்றும் ரூபதந்மாத்ரை பிறக்கும்.

18. இதில்நின்றும்ரூபகு$_3$ணகமானதேஜஸ்ஸுபிறக்கும்.

19. இதில் நின்றும் ரஸதந்மாத்ரை பிறக்கும்.

20. இதில் நின்றும் ரஸகு$_3$ணகமான ஜலம் பிறக்கும்.

21. இதில் நின்றும் க$_3$ந்த$_4$தந்மாத்ரை பிறக்கும்.

22. இதில் நின்றும் க$_3$ந்த$_4$கு$_3$ணகையான ப்ருதி$_2$வீ பிறக்கும்.

23. ராஜஸாஹங்காரம் இரண்டிற்கும் அநுக்$_3$ராஹகமாயிருக்கும்.

24. ஆக, இந்த மஹதா$_3$தி$_3$ ஸகலபதா$_3$ர்த்த$_2$ங்களுங்கூட அண்டமாய்ப் பரிணமிக்கும்.

25. இவ்வண்டத்திலே ப$_3$த்$_3$தா$_4$த்மஸமஷ்டி பூ$_4$தனை ப்$_3$ரஹ்மா பிறக்கும்.

26. இதுக்குக் கீழ் ஸ்வஸங்கல்பத்தாலே எம்பெருமான் தானே ஸ்ருஷ்டித்தருளும்; இதுக்கு மேல் ப$_3$ர்ஹ்மாவுக்கு அந்தர்யாமியாய் நின்று ஸ்ருஷ்டித்தருளும்.

27. இவ்வண்டந்தான் ப$_3$த்$_3$தா$_3$த்மாக்களுக்கு போ$_3$க்$_3$ய போ$_4$கோ$_3$பகரண போ$_4$க$_3$ஸ்தா$_2$னமாய்க்கொண்டு பரிணமிக்கும்.

28. போ4க்யங்களாவன—ஶப்3தா3தி3கள்.

29. போ4கோ3பகரணங்களாவன—இந்த்3ரியங்கள்.

30. போ4க3ஸ்தா2நமாவன-தே3வதிர்யங்மநுஷ்ய ஸ்தா2வரரூபமான சதுர்வித4ஶரீரங்களும், பூமி முதலான மேலேழு லோகங்களும், பாதாளாதி3 லோகங்கள் ஏழும்.

31. இந்த்3ரியங்களும் இச்சரீரங்களும் ஐச்வர்யாதி3 புருஷார்த்த2ங்களுக்கு ஸாத4கமாயிருக்கும்.

32. இது வ்யக்தாவ்யக்தரூபமான அசித்தத்வம்.

33. காலமாகிறது,- அசித்3விசேஷமாய், நித்யமாய், ஏகரூபமாய், கீழ்ச்சொன்ன ப்ரக்ருதி பரிணாமாதி3களுக்கு ஸஹகாரியாய்க்கொண்டு நிமேஷகாஷ்டா2தி3 விகாரங்களையுடைத்தாய், எம்பெருமானுக்கு ப்ரகாரதயா ஶேஷமாய், லீலா பரிகரமாய் இருப்பதொன்று.

அசித்ப்ரகரணம் முற்றிற்று.

## சித்ப்ரகரணம்

34. ஆத்மதத்வம் மூன்று வர்க்கமாய், அஸங்க்2யாதமாயிருக்கும்.

35. இதில், பகவச்சே2ஷைதைகரஸரான அநந்தக3ருட3 விஷ்வக்ஸேந ப்ரப்4ருதிகள் நித்யவர்க்க3ம்.

36. ஸம்ஸாரிகளாய், ஒருநாளிலே ப4க3வத்3ஜ்ஞாநம் பிறந்து அதனாலே ப4க3வத்ப்ராப்தி பண்ணினவர்கள் விமுக்தவர்க்கம்.

37. அநாதி3யான கர்மப்ரபா4வத்தாலே சதுர்வித4ஶரீரங்களையும் ப்ரவேசித்து, அதனாலே ஶப்3தா3தி3விஷயப்ரவணரான ஸம்ஸாரிகள் ப3த்3த4வர்க்க3ம்.

38. ஆத்மஸ்வரூபம் இருக்கும்படி எங்ஙனேயென்னில்: ஜ்ஞாநாநந்த3 ஸ்வரூபமாய், நித்யமாய், அசித்திற்காட்டில் ஸௌக்ஷ்மமாய், ஜ்ஞாநகு3ணகமாய், அணுபரிமாணமாய், ப4க3வதா3யத்த கர்த்ருத்வகமாய், ஈச்வரனுக்கு ப்ரகாரதயா ஶேஷமாயிருக்கும்.

39. ப3த்3தா4த்மாக்களுடைய ஜ்ஞாநம் ஸங்கோசவிகாஸங்களுக்கு அர்ஹமாயிருக்கும்.

40. நித்ய முக்தர்களுடைய ஜ்ஞாநம் ஸங்கோச விகாஸங்களுக்கு அநர்ஹமாயிருக்கும்.

சித்ப்ரகரணம் முற்றிற்று.

## ஈச்வரப்ரகரணம்

41. ஈச்வரன் சேதநாசேதநாத்மகமான உப$_4$யவிபூ$_4$திக்கும் நியந்தாவாயிருக்கும்.

42. எம்பெருமானுடைய தி$_3$வ்யாத்மஸ்வரூபம் ஹேயப்ரத்யநீகமாய், கல்யாணைகதாநமாய், ஸகலேதரவிலக்ஷணமாய், அதிஸூக்ஷ்மமாய், தே$_3$ஶகாலவஸ்துக்களால் அபரிச்சி$_2$ந்நமாய் உள்ள ஜ்ஞாநாநந்த$_3$மாயிருக்கும்.

43. தி$_3$வ்யமங்க$_3$ளவிக்$_3$ரஹம் சுத்தஸத்வமாய், பஞ்சோபணிஷந்மயமாய், எம்பெருமானுக்கு ஸர்வதா$_3$ அபி$_4$மதமாய் தி$_3$வ்யாத்ம ஸ்வரூபத்துக்கும் அதை ஆச்ரயித்திருக்கும் கல்யாண கு$_3$ணங்களுககும் ப்ரகாஶகமாய், ஏகரூபமாய், ஸர்வ விஸஜாதீயமாய், அப்ராக்ருதமாய், அளவிறந்த தேஜஸ்ஸையுடைத்தாய், நித்யயௌவன ஸ்வப$_4$ாவமாய், ஸர்வக$_3$ந்த$_4$ ஸ்வப$_4$ாவமாய், ஸௌந்த$_3$ர்யாதி$_3$ கல்யாணகு$_3$ண யுக்தமாய், அதிமநோஹரமாய், நித்யர்க்கும், முக்தர்க்கும் அநுப$_4$ாவ்யமாய், முமுக்ஷுக்களுக்கும் சுப$_4$ாச்ரயமாயிருக்கும்.

44. பரமபத$_3$மும், அங்குள்ள பதார்த்தங்களும், முக்தருடைய விக்$_3$ரஹங்களும், நித்யஸித்$_3$த$_4$ருடைய விக்$_3$ரஹங்களும் சுத்$_3$த$_4$ஸத்வமாய், பஞ்சோபநிஷந்மயமாயிருக்கும்.

45. எம்பெருமானுடைய திவ்யாத்மகுணங்களாவன-ஜ்ஞாந ஶக்த்யாதி ஷட்$_3$கு$_3$ணங்களும், அதிலே பிறந்த ஸௌசீல்யாதி$_3$களும்.

46. இவைதான் ஓரோ கு$_3$ணங்களுக்கு அவதி$_4$யின்றியிலே இவற்றுக்குத் தொகையுமின்றியிலேயிருக்கும்.

47. இப்படிப்பட்ட ஸ்வரூபாதிகளையுடைய ஈச்வரன் பரவ்யூஹாதி$_3$களினாலே உப$_4$யவிபூ$_4$தியையும் நிர்வஹித்தருளும்.

48. எங்ஙனேயென்னில்:

49. கீழ்ச்சொன்ன ஷாட்$_3$கு$_3$ண்யாதி$_3$ ஸம்ஸ்த கல்யாண கு$_3$ணங்களோடும், தி$_3$வ்யமங்க$_3$ள விக்$_3$ரஹத்தோடும் பரம

பத$_3$த்திலே நித்யரும் முக்தரும் தன்னையநுப$_4$விக்க, அவர்களை அநுப$_4$வி(ப்பி?)த்துக்கொண்டு இருக்குமிருப்பு பராவஸ்தை$_2$.

50. வ்யூஹாவஸ்தை$_2$யாவது–லீலாவிபூ$_4$தியை நிர்வஹிக்கைக்காக ஷாட்$_3$கு$_3$ண்யங்களிலே இரண்டிரண்டு குணங்களை ப்ரகாசிப்பித்துக்கொண்டு ஸங்கர்ஷண ப்ரத்$_3$யும்நாதி$_3$ ரூபேண வந்து அவதரிக்கை.

51. இந்த வ்யூஹங்கள்தான் ஜக$_3$த்ஸ்ருஷ்ட்யாதி$_3$களுக்.கும், திருவவதாரங்களுக்கும் அடியாயிருக்கும்.

52. விப$_4$வமாவது–தி$_3$வ்யமங்க$_3$ளவிக்$_3$ரஹத்தை தே$_3$வ திர்யங்மநுஷ்ய ஸ்த$_2$ாவர ஶரீரங்களோடே ஸஜாதீயமாக்கிக்கொண்டு தன் படிகள் ஒன்றையும் விடாதே அவ்வோ ஜாதிகளிலேவந்து அவதரிக்கை–ஸாக்ஷாத்$_3$விப$_4$வமாவது; சேதநர் பக்கல் ஸ்வரூபேண ஆவேசித்து அவதரிக்கை ஸ்வரூபாவேஶாவதாரம்; சில சேதநர் பக்கலிலே சக்தியினாலே கார்ய காலத்திலே ஆவேசித்து ரக்ஷிக்கை ஶக்த்யாவேஶாவதாரம்.

53. அர்ச்சாவதாரமாவது– ஆஶ்ரிதர் உகந்தது ஏதேனுமொரு த்$_3$ரவ்யத்தை அதி$_4$ஷ்டி$_2$த்து, அதிலே திவ்யமங்க$_3$ள விக்$_3$ரஹத்திற் பண்ணும் ஆத$_3$ரத்தைப் பண்ணிக்கொண்டு ஆஶ்ரிதபராதீ$_4$னனாய்க்கோயில்களிலும் க்$_3$ருஹங்களிலும் காலாவதி$_4$யின்றிக்கே அவதரிக்கை.

54. உபாஸிப்பாருடைய ஹ்ருத$_3$யங்களிலே விக்$_3$ரஹ ஸஹிதனாய்க்கொண்டு அவர்களுக்கு சுப$_4$ாச்ரயமாயிருப்பதொரு ப்ரகாரமுமுண்டு.

55. இப்படி சித$_3$சிதீ$_3$ச்வர தத்வங்களும் ஸங்க்$_3$ரஹேண சொல்லப்பட்டது.

56. ஸகல சேதநாசேதநங்களையும் ஈச்வரன் ப்ரகாரமாக உடையனாய், தான் அவற்றுக்கு ப்ரகாரியாய், வேறு சேதனர்க்கு ப்ரகாரியில்லாமையாலே நம் த$_3$ர்ஶனத்துக்குத் தத்வம் ஒன்றே என்னவுமாம்.

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளையருளிய
தத்வத்ரயஸங்க்ரஹம் முற்றிற்று.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## மாமுனிகளின் திருவாக்கில் (தத்வத்ரயவ்யாக்யானத்தில்) தத்வத்ரய ஸங்க்ரஹமும், தத்வத்ரய விவரணமும்.

## தத்வத்ரயஸங்க்ரஹம்

1. (அவதாரிகை)—"நடுவிற்றிருவீதிப்பிள்ளைபட்டர் ஆச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களுடைய ப்ரபந்த நிர்மாணத்துக்கும கருத்து இதுவிறே"

2. (சித்-3) "நடுவிற்றிருவீதிப்பிள்ளைபட்டரும், ஆச்சான்பிள்ளையும், முதலான ஆசார்யாகள் தத்வதாயமருளிசசெயகிறவிடததில அசிதுபக்ரம மாக அருளிச்செய்தார்கள்" இநத ஸ்ரீஸூக்தியிலிருந்து தத்வத்ரய ஸங்க்ரஹம் ஆதிகாலத்தில் ஆச்சான்பிள்ளையருளிச்செய்த "தத்வ த்ரயம்" என்றே வழங்கப்பட்டுள்ளதெனத் தெரிகிறது. பிள்ளை லோகாசார்யர் தத்வத்ரயததை வ்யாவர்த்திபபதற்காக தத்வத்ரய ஸங்க்ரஹமென்று பினபுளளார் வழங்கியிருக்கவேண்டும்.

3. (அசித-27) "ஸஙகோசேந உத்பத்திக்ரமததை அருளிச்செய்தா ரித்தனே; பெரியவாச்சான்பிள்ளையும இபபடியிறே அருளிச்செய்தது" ஸங்க்ரஹம 13-22 சூர்ணைகளில ஆவரணக்ரமத்தை விவரிக்காமல் அருளியிருக்கும் ஸ்ரீஸூக்திகளையே இங்கு மாமுனிகள் குறிக்கிரு ரென்பது தெளிவு. ஆச்சானபிள்ளையென்று பலவிடங்களில் எடுக்கப் பட்டவர் பெரியவாச்சான்பிளளையே என்று தெளிவுபடுத்துகிருர்.

4. (ஈச்-9) "எம்பெருமானுடைய திவ்யாத்மகுணங்களாவன—ஜ்ஞாந சக்த்யாதி ஷட்குணங்களும அதிலே பிறந்த ஸௌசீல்யாதிகளும்' என் கிற இவ்வாக்யததுக்கு அர்ததமெழுதுகிறவளவில் 'அதிலே பிறக்கையா வது-வஸ்தூத்காஷாபாதக ஷாட்குண்யாயத்தகுணபாவமாகை' என்றிறே விவரணத்தில் ஆச்சான்பிள்ளை அருளிசசெய்தது" ஸங்க்ரஹம் 45-வது சூர்ணையே இஙகு எடுக்கப்பட்ட மூலவாக்யம். இதிலிருந்து ஸங்க்ர ஹத்திற்கு வ்யாக்யானம் விவரணம் என்று தெளிவாகிறது.

5. (ஈச்-48) "'இவ்வண்டத்திலே பத்தாத்ம ஸமஷ்டி பூதனுன ப்ரஹ்மா பிறக்கும்; இதுக்குக் கீழ் ஸவஸங்கலபத்தாலே எம்பெருமான்ருனே ஸ்ருஷ்டித்தருளும்; இதுக்குமேல் பரஹமாவுக்கு அந்தர்யாமியாய் நின்று ஸ்ருஷ்டித்தருளும்' என்று ஆச்சான்பிள்ளை அருளிச்செய்கையாலும"

ஸங்க்ரஹம் 25, 26 சூர்ணைகளை ஆச்சான்பிள்ளையருளியதாகக் குறிப்பிடுகையால், பெரியவாச்சான்பிள்ளையை மாமுனிகள் ஆச்சான் பிளளையென வழஙகிஞர் என்பதற்கு நிஸ்ஸந்திக்தப்ரமாணமிது.

## தத்வத்ரயவிவரணம்

1. (சித்-35) "என்று விவரணத்திலே ஆச்சான்பிள்ளையும்."

2. (அசித்-27) "இது தத்வத்ரயவிவரணத்தில் ஆச்சான்பிள்ளை யருளிச்செய்த க்ரமம்"

3. (அசித-48) "இதுவிறே தத்வத்ரயவிவரணத்தில் ஆச்சான்பிள்ளை ப்ராதாந்யேந அருளிச்செய்தது"

4. (ஈச்-9) "......என்றிறே விவரணத்தில ஆச்சான்பிள்ளை அருளிச் செய்தது"

5. (ஈச்-40) "இப்படி விவரணத்திலே ஆச்சான்பிள்ளை அருளிச் செய்தாரிறே"

குறிப்பு:— விவரணத்தையெடுக்கும்போது நியமேந 'விவரணத் திலே ஆச்சான்பிள்ளை' என்று அருளுகையாலே, ஸங்க்ரஹ விவரண கர்த்ரைக்யம் தோற்றுகிறது.

# ஸ்ரீஸூக்திமாலா வெளியீடுகள்

பதவுரை, அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு முதலானவற்றோடு கூடிய பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களின் க்ரந்தங்கள்.

| க்ரந்தங்கள் | விலை | தபால் |
|---|---|---|
| 1. பரந்த ரஹஸ்யம் முதலிய எட்டு ரஹஸ்யங்கள் | 1-50 | -18 |
| 2. ஸ்தோத்ரரத்ந சது:ச்லோகீ ஜிதந்தே வ்யாக்யானங்கள் | 3-00 | -38 |
| 3. திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1-50 | -18 |
| 4. முதல் திருவந்தாதி வ்யாக்யானம் | 1-88 | -25 |
| 5. பெருமாள் திருமொழி வ்யாக்யானம் | 1-88 | -25 |
| 6. திருமாலை வ்யாக்யானம் | 2-75 | -31 |
| 7. திருவாசிரியம் பெரியதிருவந்தாதி வ்யாக்யானம் | 1-63 | -25 |
| 8. சது:ச்லோகீ வ்யாக்யானம் (நாயனாராச்சான்பிள்ளை) | 1-50 | -18 |
| 9. கத்ய வ்யாக்யானங்கள் | 2-00 | -25 |
| 10. நாச்சியார்திருமொழி வ்யாக்யானம் | 4-00 | -50 |
| 11. திருச்சந்தவிருத்த வ்யாக்யானம் | 3-00 | -38 |
| 12. நான்முகன்திருவந்தாதி வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 2-50 | -38 |
| ௸ மலிவுப்பதிப்பு | 2-00 | -38 |
| 13. ஸ்ரீராமாயணதனிச்லோகம்(விவரணத்துடன்) I Part. | 3-50 | -38 |
| ௸ இரண்டாம்பாகம் (விவரணத்துடன்) | 7-00 | -75 |
| 14. திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யானம | 0-50 | -08 |
| 15. பாசுரப்படி ராமாயணம் (விலையில்லை தபால்கூலி 0-08) | | |
| 16. அமலனாதிபிரான் வ்யாக்யானங்கள் | 1-88 | -25 |
| 17. கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானம் | 2-75 | -38 |
| 18. சிறியதிருமடல் வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1-38 | -25 |
| 19. முமுக்ஷுப்படி வ்யாக்யானம் | 2-50 | -37 |
| 20. பெரியதிருமடல் வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1-50 | -25 |
| 21. முதல் திருவந்தாதி, அப்பிள்ளையுரை, விவரணத்துடன் | 3-00 | -38 |

## ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. திருப்பாவை வ்யாக்யானம் | 3-00 | -37 |
| 2. ஸந்த்யாவந்தநம் பதவுரையுடன் | 0-31 | -10 |
| 3. புருஷஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -25 |
| 4. நாராயணஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -25 |
| 5. ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 1-50 | -38 |
| 6. பூ நீளா விஷ்ணுஸூக்த வ்யாக்யானங்கள் | 1-75 | -38 |
| 7. தேஹளீச ஸுப்ரபாதம் | 0-25 | -15 |
| 8. கம்பராமாயணம் (கையடைப்படலம் முடிய) | 2-50 | -41 |
| 9. ராமாநுஜதேசிக ஸ்தோத்ரங்கள் | 1-00 | -18 |
| 10. பாகவத தசமஸ்கந்த கீர்த்தனை பூர்வபாகம் | 4-00 | 1-00 |
| ௸ உத்தரபாகம் | 4-00 | 1-00 |
| 11. ஸ்ரீகேசவ மணிமாலை | 0-50 | -10 |
| 12. ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹஸ்தவம் | 0-37 | -10 |
| 13. யதிராஜவிம்சதி வ்யாக்யானம் | 0-88 | -15 |
| 14. ஸந்மதகாரிகாவளீ | 1-75 | -38 |
| 15. விஷ்ணுசித்தவிஜயம் முதல் பாகம் (அச்சில்) | 5-00 | -75 |
| ௸ இரண்டாம்பாகம் | 7-00 | 1-00 |

---

கிடைக்குமிடம்:— S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட், 3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

சோதி-16] [ஒளி-5

# த்ரௌபதீப்ரபத்திஸித்தாஞ்ஜநஸம்ரக்ஷணம்

## முகவுரை

1. மஹாவித்வான் ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண்ணங்கராசார்யஸ்வாமியிடம் அடியேனுக்கு என்றும் விசேஷப்ரதிபத்தி உண்டு. எத்தனையோ கருத்து வேற்றுமைகளிருந்தபோதிலும் அடியேனோடு அந்த ஸ்வாமிக்கு இதுவரையில் ஸௌஜந்யப$_4$ங்க$_3$ம் நேர்ந்ததில்லை. இனியும் நேர்வதற்கு அடியேன் காரணமாகமாட்டேன்.

2. பல வருஷங்களுக்குமுன்பு அந்த ஸ்வாமிக்கும், ந்யாய வேதாந்தவித்வான் ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு வேங்கடாசார்யஸ்வாமிக்கும் த்ரௌபதீப்ரபத்தியைப்பற்றிப் பெரியதோர் விவாதம் நடந்ததை ஸ்ரீவைஷ்ணவவுலகம் அறியும். நித்யாபி$_4$வாஞ்சி$_2$தபரஸ்பரநீசப$_4$ாவர்களாயிருக்க வேண்டிய வைஷ்ணவர்கள் ஒருவர்க்கொருவர் விவாதம் செய்வதை அடியேன் அடியோடு வெறுப்பவனுகையால் அவ்விவாத விஷயத்தைப்பற்றிச் சிந்திக்காமலேயிருந்தேன் அடியேன். அந்நிலையில் நமது நண்பரும், சந்தாதாரர்களில் ஒருவருமான ஸ்ரீ உ. வே. K. ஸ்ரீநிவாஸராகவாசார்யஸ்வாமி, [அரசாங்க எஞ்சினியர், 27, தணிகாசலசெட்டிதெரு, டி-நகர், மதறாஸ்-17] அவர்கள் இவ்விவாதத்தைப்பற்றி ஸுதர்சனத்தில் நடுநிலை நின்று ஓர் கட்டுரை எழுதவேண்டும் என்று நியமித்தார். அந்த ஸ்வாமியின் தூண்டுதலால் இதுபற்றிச் சிந்திக்கலுற்றேன். பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களின் திருவடிகளைச் சிந்தித்துக்கொண்டு, பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளையும், மஹாபாரத ஸந்தர்ப்பங்களையும், இருதரப்பு நூல்களையும் நடுநிலைநின்று ஆராய்ந்ததில் ஸகல

பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கும், மஹாபாரத ச்லோகங்களுக்கும் பொருந்தியதொரு நிர்வாஹம் தோன்றிற்று. அந்த நிர்வாஹம் முற்கூறிய இரண்டு ஸ்வாமிகளுடைய நிர்வாஹங்களையும் ஓரளவு ஏற்றுக்கொள்வதாயும், ஓரளவு தள்ளுவதாயும் அமைந்தது. அப்போது அதை உலகுக்கு வெளியிட்டால் ஸ்வரூபநாசகரமான விவாதம் வளருமென்று தோன்றியபடியால் ஸ்ரீ உ. வே. K. ஸ்ரீநிவாஸராகவாசார்யஸ்வாமிக்கு மாத்திரம் அதைத் தெரிவித்துவிட்டு வாளா இருந்தேன். அந்த ஸ்வாமியும் திருப்திபெற்றார். அதற்குச் சிலவருஷங்களுக்குப்பின் பாரதாதி தனிச்லோகத்தில் த்ரௌபதீசரணாகதி ச்லோகத்தை விவரித்தெழுதும்போது, அந்த நிர்வாஹத்தை வெளியிட்டாலல்லது பெரியவாச்சான்பிள்ளையின் திருவுள்ளத்தை வாசகர்களுக்குப் புரியவைக்க முடியாதநிலை ஏற்பட்டதால, "**த₃ரௌபதீப்ரபத்தி ஸித்₃த₄ாஞ்ஜநம**" என்னும் கட்டுரையை த்ரௌபதீசரணாகதி ச்லோக விவரணததிற்கு முன் எழுதி, இரண்டுவருடங்களுக்கு முன்னமே அக்கட்டுரை சேர்ந்த ஸ்ரீராமாயண பாரதாதிதனிச்லோகம் இரண்டாம் பாகத்தை வெளியிட்டு, முகவுரையிலும் அதுபற்றிக் குறிப்பிட்டு இரண்டு ஸ்வாமிகளுக்கும் அந்நூலை உடனே அனுப்பினேன். சிலநாட்களில் மன்னார்குடி சென்றிருந்தபோது அடியேனை அங்கு சந்தித்த ஸ்ரீ உ. வே. காரப்பங்காடுஸ்வாமி அடியேனுடைய கட்டுரையால் 'திருநாமஸங்கீர்த்தனததாலோ, புருஷகாரமின்மையாலோ திரௌபதீப்ரபத்தி அடியோடு பலிக்காமற்போய்விட்டது' என்னும்தம் கருத்துமாறவில்லைஎன்று தெரிவிததார் ஸ்ரீகோசத்தைப்பெறறுக்கொண்ட ஸ்ரீ உ. வே. காஞ்சீ ஸ்வாமி 8—3—61 அன்று அதைப் புகழ்ந்து கடிதம் எழுதினார். நன்றாக ஆராய்ந்து குற்றங்குறைகளிருந்தால தெரிவிக்கவேண்டும என்று அடியேன் விண்ணப்பித்தேன். 16—3—61ல எழுதிய கடிதத்தில் "தனிச்லோக க்ரந்தத்தில் இந்தப் புரோப₄ாகி₃க்கு (குற்றம காண்பவனுக்கு)எதுவும்(எக்குற்றமும்) கிடைக்கவில்லை" என்று எழுதியருளினார். அதன்பிறகு அடியேனுடையகுமாரர்களின் உபநயனத்தின்போது நடந்த மஹாநாட்டிற்கு எழுந்தருளி அடியோங்களை அனுக்ரஹித்துச் சென்றபின் எழுதியதொரு கடிதத்தில், த்ரௌபதீப்ரபத்தி விவாதத்தை அடியேன் மறுபடியும் கிளப்பியிருப்பதைப் பார்த்தாகிவிட்டதா என்று திரு

வல்லிக்கேணியிலிருந்து ஒருவர் கேட்டிருந்ததாகவும், தாம் அதுவரை பார்க்கவில்லையென்றும், ஸயூத்யர்களிடையே விவாதம் ரஸமன்றாகையால் அப்போதைக்குப் பார்க்கப் போவதில்லையென்றும் கடிதம் எழுதினர். பெரியவாச்சான் பிள்ளை நெஞ்சில் எழுதியதை எழுத்தில் வடித்தேனென்றும் கருத்து வேற்றுமையிருந்தாலும் ஸௌஜந்யபங்கம் நேராதென்று உறுதியுடனிருப்பதாகவும் அடியேன் பதில் எழுதினேன். மாதம் ஓரிரு பாரங்களாக வெளிவரும் முறையில் சென்ற மாதப்பத்திரிகையில் த்ரௌபதீப்ரபத்திஸித்தாஞ்ஜனம் முழுவதும் வெளிவந்தது.

3. நிகழும் சோபகிருது–ஹு சித்திரை–மீ 4–உ (17—4—63)ல் கிடைத்த அம்ருதலஹரீபத்ரிகையில் த்ரௌபதீப்ரபத்தி ஸாம்ராஜ்யம் என்னும் தலைப்பில் ஒருபக்கம் எழுதி, அதில் ஸ்ரீராமாநுஜன் 171-ல் "ஸர்வஜ்ஞலோக குரு ஸூக்திஸர்வஸ்வம்" என்னும் நூல் வெளிவந்துவிட்டதாக எழுதி மூன்றுபக்கங்கொண்ட அதன் முன்னுரையைமாத்திரம் வெளியிட்டிருக்கிறார் ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமி. ஸ்ரீராமாநுஜன் 171-ம் இன்று (19—4—63) அடியேனுக்குக் கிடைத்தது. அதில் ஸித்தாஞ்ஜனத்தைக் கண்டிக்க எழுந்த ஸர்வஸ்வ நூலின் முதல் பரிச்சேதம் உள்ளது.

4. ஸித்தாஞ்ஜனத்தில் அடியேன் தூஷணலேசமுமில்லாமல் ஸ்வாமியை மஹனீயரென்று கௌரவமாகக் குறிப்பிட்டே எழுதியிருக்கையில், ஸ்வாமி அடியனேன் குருமுகமாகக் கேட்டவனல்லனென்றும், பிராமாணிகார்த்தங்களை மாறுபடுத்தாமல் ஆர்ஜவத்துடன் எழுதுபவனல்லனென்றும் அந்யாய்யமாக மதிமயங்கியெழுதுவதாகவும், மற்றும் பலவாருகவும் தூஷணவாக்கியங்களை இந்நூலில் எழுதியுள்ளார். இவற்றுக்கும், இன்னமும் வரப்போகும் தூஷணங்களுக்கும் அடியேன் பிரதிதூஷணம் செய்வதாக இல்லை. ஆசார்ய ஸ்ரீஸூக்திகளின் அர்த்தநிஷ்கர்ஷம் மிகமுக்கியமானதாகையாலே, விஷயங்களுக்குமாத்திரம் பதில் எழுதப்போகிறேன்.

5. தூஷணலேசமுமில்லாமல் விஷயவிசாரம் செய்வது வரவேற்கத்தக்கதேயாகும். அப்படி விசாரம்செய்யும்போது பிரகிருத விவாதத்திற்கு ஸம்பந்தமில்லாத பிழைகளை எடுத்துக்காட்டுவது விலக்கத்தக்கதாகும். மஹாவித்வான்

களும் பொருளுரைத் தடுமாறும் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தி களுக்குப் பொருளெழுதும்போது, அல்பஜ்ஞனான அடியேனை சிலபிழைகளைச்செய்வது ஸம்பாவிதமேயொழிய அஸம்பாவித மன்று. இதையுணர்ந்தே குற்றங்குறைகளிருந்தால் திருத்திப பணிகொள்ளவேணும் என்று இரண்டு வருடங்களுககு முன்பே விண்ணப்பித்தேனடியேன. அப்போது 'தனிச்லோக கரந்தத்தில் இந்தப் புரோப₄ாகி₃க்கு ஒன்றும கிடைக்க வில்லை' என்று எழுதிய ஸ்வாமி இப்போது ஆராய்ந்து பார்த்து ஆயிரம்பக்கமுள்ள கிரந்தத்தில் வராஹசரமச்லோக வ்யாக்யான விவரணத்தில் ஒரு பிழையை எடுத்துக்காட்டி யுள்ளார் முன்னுரை 2—3 பாராக்களில். தேடிப்பார்த்தால் இப்படி இன்னும் சில பிழைகளும் கிடைக்கலாம். தனி ச்லோகம் முதல்பாகத்தை இரண்டாவது முறையாகப் பதிப் பிக்கும்போது, அடியேனே முதல்பதிப்பிலுள்ள சில பிழை களைக் கண்டு திருத்தியிருக்கிறேன். ஸ்வாமி எடுத்துக்காட்டிய பிழையையும் ஸமீபத்தில் நேரவிருக்கும் இரண்டாவது பாகத்தின் மறுபதிப்பில் திருத்தி வெளியிடுவேன். 'ஸ்வா மிக்கு அடியேனுடைய நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

6. இதற்குக் கைம்மாறொன்றும் செய்ய விரும்புகிறேன். "வைப்பன மணிவிளக்கா" [நான்-திருவ 46] என்னும் நான் முகன்திருவந்தாதிப் பாசுரத்திற்கு உரையெழுதுகையில, பெரியவாச்சான்பிள்ளை, அப்பிள்ளை ஆகிய பூர்வாசார்யர் களின் ஸ்ரீஸூக்திகளுக்கு நேர்மாறாக சுவையற்றதொரு பொருளை தீபிகையுரையில் ஸ்வாமி எழுதியிருக்கிறார். ஆசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கு அநுகுணமான சுவைமிக்க பொருளை அடியேன் நான்முகன்திருவந்தாதி வ்யாக்யானத் தில் காட்டியிருக்கிறேன். [ஏற்கனவே திருததிக்கொள்ள வில்லையாகில] தீபிகையுரையின் அடுத்தபதிப்பில் பொருளைத் திருத்திக்கொள்ளவேண்டுமென்று ஸ்வாமியைப் பிரார்த் திக்கிறேன்.

7, இதிலிருந்து ஸ்ரீகாஞ்சி ஸ்வாமியும் பிழைகளுக்கு அப்பாற்பட்டவரல்லரென விளங்குகிறது. நான்முகன் திருவந்தாதிப் பாசுரமொன்றுக்கே ஆசார்ய ஸ்ரீஸூக்தி விருத்தமான சுவையற்ற பொருளை ஸ்வாமி எழுதிய மாத்தி ரத்தால் ஸஹஸா அவரை குருமுகமாகக் கேட்டவரல்லர்

என்று எவரும் எழுதிவிடமுடியாது. அப்படியிருக்கும் போது ஆசார்யஸ்ரீஸூக்தியின் ஒருசில பதங்களுக்குத்தவறான பொருளெழுதியதற்காக அடியேனை அப்படி வசைபாடியது தவறென்று இப்போது ஸ்வாமி உணர்ந்திருப்பார். நிற்க.

8. வராஹசரமச்லோக வ்யாக்யானமும், 'வைப்பன் மணி விளக்கு' பாசுரவ்யாக்யானமும் பிரகிருத விவாதத்திற்கு சம்பந்தப்படாத விஷயங்கள். அவற்றில் கிரந்த விஸ்தரத்தைச் செய்துகொண்டு போவது பிரகிருத விவாத விஷயத்தை வாசகர்கள் மறக்கச்செய்யவே உதவும். ஆகையால் இருதரப்பினரும் இத்தகைய விஷயங்களை விவரிக்காமலிருப்பது நலம்.

9. பொதுவாக எந்த விவாதத்திலும், குறிப்பாக ஸ்ரீவைஷ்ணவர்களிடையே நேரும் இத்தகைய விவாதங்களிலும் இருசாராரும் கடைப்பிடிக்கவேண்டிய சில நியமங்களை வெளியிட விரும்புகிறேன்:-(1) விஷயங்களைத் தவறு என்று நிரூபணம் செய்யலாமேயொழிய, வ்யக்திதூஷணத்தில் இறங்கலாகாது. (2) விவாதத்திற்கு சம்பந்தமில்லாத விஷயங்களை விவரிக்கலாகாது. (3) பிறர் பெயரில் நூல்களை எழுதி வெளியிடலாகாது. (4) அபிப்பிராய பத்திரிகைகளை வெளியிடலாகாது. [பெரும்பாலும் இத்தகைய அபிப்பிராய பத்திரிகைகள் கியாதிலாபங்களை அபேக்ஷிப்பவர்களாலும், தாக்ஷிண்யமுடையவர்களாலும் எழுதிக்கொடுக்கப்படுகின்றன.] (5) இரண்டு, அல்லது மூன்றுமுறை பதிலெழுதுவதோடு சாந்தியடையவேண்டும். [இரண்டு மூன்றுமுறைகளிலேயே விஷயங்கள் முழுவதும் வெளிவந்துவிடுகின்றன. அதற்குமேல் எழுதத்தொடங்கினால் சொன்னதையே திருப்பித்திருப்பிச் சொல்லுவதும், தூஷணபரிஹாரோக்திகளும், சம்பந்தமில்லாத விஷயங்களை எழுதுவதுமே நேர்கின்றன.]

10. இந்த நியமங்களை அடியேன் உறுதியாகப் பின்பற்றுவேன். ஸ்வாமியும் இவற்றைப் பின்பற்றினால் இவ்விவாதம் மிகவும் ரஸமாகவும், நல்ல விவாதங்களுக்கெல்லாம் ஓர் எடுத்துக்காட்டாகவும், லோகோபகாரகமாகவும் முடியும்.

முகவுரை முற்றிற்று.

## இனி முதலத்தியாயம்.

11. ஸ்வாமியின் பக்ஷத்தின்மேல் அடியேன் ஸித்தாஞ்ஜனத்தில் 4, 9 பாராக்களில் காட்டியிருக்கும் ஆறு அஸ்வாரஸ்யங்களில் பெரும்பாலானவற்றை ஸர்வஸ்வம் முதலத்யாயத்தில் தொடவேயில்லை. தொட்டிருக்கும் ஒன்றிரண்டிலும் அஸ்வாரஸ்யங்களை சரியாகப் பரிஹரிக்கவில்லை. ப்ரபத்தி முதலில் தடைபட்டபோதிலும், பிறகு பலனளித்ததாக நாம் கொள்ளுகிறோம். அப்படியிருக்க த்ரௌபதீ ப்ரபத்தி எப்போதுமே பலிக்கவில்லை, ப்ரபத்தியே செய்யவில்லை என்று கூறுகிறவர்களைக் கண்டிக்கும் நிரூபணங்களையேயிட்டுப் பல பாராக்களை நிரப்பியிருக்கிறார். 32-வது பாராவின் தொடக்கத்தில் இதை ஒப்புக்கொண்டுமிருக்கிறார். மேற்படி பாராவின் கடைசியில் நியமித்துள்ளபடி ஸர்வஸ்வத்தில் ஒவ்வொரு பாராவையும் இலக்கமிட்டு அவற்றிலுள்ள விஷயங்களுக்குச் சுருக்கமாக பதிலெழுதுகிறோமினி. இதே ரீதியில் ஸ்வாமியும் பதிலெழுதுவாராக.

12. பாரா 1:-பீடிகையாகையால பதில் தேவையில்லை. பாரா 2:-ஸித்தாஞ்ஜநம் தொடக்கத்தில் எழுதியிருக்கும் ச்லோகத்தின் உத்தரார்த்தம் மறுவடிவெடுக்கும் என்றெழுதியிருப்பது ப்ரதிஜ்ஞாமாத்ரமாகவே நிற்கும். 2, 3 பாராக்களில் எடுத்துக்காட்டப்பட்டுள்ள முதல விஷயம் பிழையேயென்று ஒப்புக்கொள்ளுகிறோம். பிழை காட்டியவர்க்கும் இதிலும் வலிய பிழை உண்டென்பதைக் கீழே காட்டினோம்.

## முமுக்ஷுப்படி ஸூத்ரார்த்த விசாரம்.

13. பாரா 4.-"அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டிநின்று உதவும்" என்னும் முமுக்ஷுப்படி ஸூத்ரத்திற்கு "எம்பெருமான் உதவாத தசையிலும் திருநாமம் உதவும்" என்று நாம் ஸித்தாஞ்ஜனம் 4-வது பாராவில் தாத்பர்யார்த்தம் எழுதியிருந்தோம். இது "ப்ராமாணிகார்த்தத்தை மாறுபடுத்தி ஆர்ஜவமில்லாமல் எழுதுவது, அபத்தம், அஸம்பந்தம் பகற்கண்டகுழியிலே பகலிலேயே விழுவது" என்று பலவாறு தூஷித்து எழுதியுள்ளார். இவர் கருத்துப்படி "எம்பெருமான் தூரத்திலிருந்து உதவினான்; திருநாமம் கிட்டிநின்று உதவிற்று" என்று பொருள்கொண்டால், முன் ஸூத்ரத்தில் ப்ரதிஜ்ஞை செய்தபடி வாச்யத்தைக்காட்டிலும் வாச

கத்துக்குப் பெருமை ஸித்திக்காது. இந்த ஸூத்ரத்திலுள்ள 'ஆனாலும்' என்னும் பதமும், அடுத்த ஸூத்ரத்திலுள்ள "புடைவை சுரந்தது திருநாமமிறே" என்னும் பதங்களும் பொருளற்றவையாய்விடும். திருவாய்மொழி (3-3-6) ஈட்டில் "நம்பேர் தன் கார்யம் செய்ததித்தனைபோக்கி நாம் இவளுக்கு ஒன்றும் செய்திலோமிறே" என்று அருளிச்செய்யப்பட்டிருக்கும் ஸ்ரீஸூக்தியை அடியொற்றிவந்தது இந்த ஸூத்ரம். அதில் ஸர்வேச்வரன் உதவவில்லை என்று தெளிவாகவே காட்டப்பட்டது. ப₂லப்ரத₃னாயிருப்பது, ப₂லகரணமாயிருப்பது என்று உதவுவது இருவகைப்படும். ப₂லத்தைக் கொடுக்க ஸங்கல்பம் செய்பவன் பலப்ரதனாகிறான்; அவன் அந்த ஸங்கல்பத்தைச் செய்ய முக்கியகாரணமாயிருப்பது ப₂லகரணமாகிறது. இவையிரண்டும் ப₂லஸாத₄னமென்று சாஸ்திரநூல்களில் வழங்கப்படுகின்றன. நம் ஸம்ப்ரதாயப் படி ப்ரபத்திஸ்தலத்திலேயே பரமபுருஷன் பலப்ரதனாகவும், பலகரணமாகவுமிருந்து உதவுகிறான்; உபாயாந்தரஸ்தலத்தில் பல்ப்ரதனாய்நின்று உதவியபோதிலும், ப₂லகரணமாய் நின்று உதவுவதில்லை. அந்தந்த உபாயங்களே ப₂லகரணமாய் நின்று உதவுகின்றன. த்ரௌபதிக்குப் புடைவை சுரந்தவிஷயத்தில் எம்பெருமான் பலகரணமாய்நின்று உதவவில்லை; திருநாமமே பலகரணமாய்நின்று உதவிற்று என்று கொண்டாலொழிய முமுக்ஷுப்படி ஸூத்ரங்களும், முன் எடுத்த ஈட்டு ஸ்ரீஸூக்தியும் பொருளற்றவையாய் முடியும். மாமுனிகளின் வ்யாக்யான ஸ்ரீஸூக்தியும் ஸூத்ரத்தை அடியொற்றியேயிருப்பதால் நம்முடைய பக்ஷத்திற்கு ஸாதகமேயொழிய பாதகமாகாது. "தூரத்திலிருந்து உதவினபோதிலும்" என்று வ்யாக்யானத்தில் இல்லையே; அப்படிப் பொருள் கொண்டால் வ்யாக்யான ஸ்ரீஸூக்தி மூலவிருத்தமாகவும், விரஸமாகவுமே ஆகிவிடும்.

### ப₂லப்ரத₃னும் ப₂லகரணமும்

**14. பாரா 5:—** அசேதநக்ரியாகலாபம் உதவாது என்கிறார். அசேதநக்ரியாகலாபம் ப₂லப்ரத₃மாய் நின்று உதவாது என்பது எப்படி அனைவருமிசைந்ததோ அப்படியே அவ்வசேதந க்ரியாகலாபம் ப₂லகரணமாய் நின்று உதவும் என்பதும் அனைவருமிசைந்ததேயாகும். இன்றளவும் எந்தப் பண்டிதரும் இதை மறுத்ததில்லை. உலகத்திலும் அசே

தனக்ரியாகலாபமான வேலை ப₂லகரணமாய் நின்று கூலி வாங்கிக்கொடுத்துதவுவதை அனைவரும் காண்கிறோம். **பாரா 11, 33**ல் எடுக்கப்பட்டிருக்கும் ப₂லாதி₄கரண ஸ்ரீபாஷ்ய வாக்யங்கள் அசேதநக்ரியாகலாபங்களுக்கு ப₂ல ப்ரத₃த்வத்தை மறுக்கின்றனவேயொழியப் பலகரணத்வத்தை மறுக்கின்றனவல்ல. இப்படிக்கொள்ளாவிடில் ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதிகளில் நூற்றுக்கணக்கான இடங்களில பக்தி முதலானவற்றுக்குப் பல ஸாதனத்வம் அருளியிருப்பது ஒட்டாமற்போய்விடும். பாரா 11 ல் "பரபக்தியின் பலனுகை வஸ்த்ரவ்ருத்தி ஆயிற்று என்றதனேடும் திருநாம ஸங்கீர்த்தனத்தின் பலனுகை வஸ்த்ரவ்ருத்தி ஆயிற்று என்றதனேடும் வாசியற இரண்டும் ஸமாநார்த்தகமேயொழிய ஈஷத்தும் வாசியில்லை. எந்த ஸங்கர்ப்பத்திலும் பலனளிப்பவன் எம்பெருமானேயல்லது நாமோச்சாரணமன்று" என்று எழுதுகிறார் இது தவறு நாமஸங்கீர்த்தனத்திற்குப் பலனளிக்கும்போது உபாயாந்தரமான நாமஸங்கீர்த்தனம ப₂லகரணமாகவும், எம்பெருமான பலப்ரதனுக்வும் ஆகிறான்; பரபக்திக்குப் பலனளிக்கும்போது எம்பெருமானே ப₂லப்ரதனுகவும் பலகரணமாகவும் ஆகிறான. ப்ரபத்தி அதி₄காரிவிசேஷணமாக மாத்திரமே ஆகிறது. நாமஸங்கீர்த்தநம் முதலான உபாயாந்தரங்களுக்குப பலகரணத்வ ரூபமான ஸாதனத்வம உண்டு. சரணவரணமாகிற பரபத்திக்கு எவ்விதமான உபாயத்வமுமில்லை. "இவை பத்தும் கெடலில் வீடுசெய்யும்" முதலான பாசுரங்களிலும், "திண்கழலாயிருக்கும" முதலான ஆசார்ய ஸ்ரீஸூக்திகளிலும் திருவாய்மொழிப்பாசுரங்களுக்கும், பகவத்விக்ரஹத்திற்கும் ப₂லகரணத்வமே நிரூபிக்கப்படுகின்றதாகையால், ஸர்வஸ்வகாரர் கருதுவதுபோல் அவையும் ரஸோக்திகளன்று. **பாரா-36**ல் எடுக்கப்பட்ட திருமங்கையாழ்வார், பேயாழ்வார் பா₂சுரங்களிரண்டிலும் திருநாமத்தின் பலகரணத்வமே நிலைநிறுத்தப்படுகிறது.

15. **பாரா 6**:—த்ரௌபதீசரணுகதி பிறகு பலனளித்தது என்றே பெரியவாச்சான்பிள்ளை அருளியுள்ளார். அதையே நாம் அடியொற்றியிருக்கிறோம். ஆகையால், பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தி விரோதம் நமக்குச் சிறிதுமில்லை. தடைவந்து நீங்கியதால ப்ரபத்தியின் பௌஷ்கல்யத

*துக்கு யாதொரு குறையும் ஏற்படாது.* **பாரா 7:-***ப்ரதிஜ்ஞா மாத்ரமே.*

**ஸ்ரீவசநபூஷண ஸூத்ரார்த்த விசாரம்**

*16.* **பாரா-7.** *முதலிய பல பாராக்களில்* **"த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்"** *என்னும் ஸ்ரீவசனபூஷண ஸ்ரீஸூக்தியை எடுத்துக்கொண்டு, அதில் 'த்ரௌபதீப்ரபத்திக்குப்* **பலனாகப் பெறப்பட்டது** *வஸ்த்ரம் என்று' கூறியிருப்பதாகவும், ஆகையால், இதற்கும்* **"த்ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திருநாமமிறே"** *என்னும் முமுக்ஷுப்படி ஸூத்ரத்திற்கும் மேலெழத் தோன்றும் விரோதம் உள்ளதென்றும், திருநாமஸங்கீர்த்தனம் ப்ரபத்தியின் உறுப்பாயிருப்பதே என்று கொண்டுவிட்டால் விரோதம் இல்லாமல் போய்விடுகிறதென்றும் கூறுகிறார்.* **"த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்"** *என்னும் ஸூக்திக்கு "த்ரௌபதீப்ரபத்திக்குப் பலனாகப்* **பெறப்பட்டது** *வஸ்த்ரம்" என்னும் பொருள் எவ்வகையிலும் தேறமாட்டாதாகையால், முமுக்ஷுப்படி ஸூத்ரத்துக்கும், அந்த ஸ்ரீவசனபூஷணஸூக்திக்கும் மேலெழத் தோன்றும் விரோதமே கிடையாதென்றும், ஆகையால் இல்லாத விரோதத்தைப் பரிஹரிப்பதற்காகத் திருநாமத்தை ப்ரபத்தியின் உறுப்பென்றுகொண்டு முமுக்ஷுப்படி ஸூத்ரங்களையும், ஈட்டு ஸ்ரீஸூக்தியையும் பொருளற்றதாக்கவேண்டிய அவசியமில்லையென்றும் நிரூபிப்போம் இனி.*

*17. "பலநியமமின்றிக்கே ஒழிந்தபடியென்? என்னில்: தர்மபுத்ராதிகளுக்குப் பலம் ராஜ்யம்; த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்; காகத்துக்கும் காளியனுக்கும் பலம் ப்ராணன்; ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குப் பலம் கைங்கர்யம்; ஸ்ரீவிபீஷணாழ்வானுக்குப் பலம் ராமப்ராப்தி; பெருமாளுக்குப் பலம் ஸமுத்ர தரணம்; இளையபெருமாளுக்குப் பலம் ராமாநுவ்ருத்தி" என்பது ஸ்ரீவசனபூஷணஸூத்ரம். "பல-நிஷ்பத்தௌ" என்று தாதுவாகையாலே, "நிஷ்பாத்யம்" என்பதே பலசப்தத்தின் பொருளாகும். "நிஷ்பாதயிதும் அர்ஹம்" என்றபடி, "ஸம்பாதிக்கத்தக்கது (அல்லது அடையத்தக்கது) பலம்" என்றதாயிற்று. ஸர்வஸ்வகாரர் கருதுவதுபோலே பலசப்தத்துக்கு நிஷ்பந்நம் அல்லது கிடைத்த பலன் என்று பொருள்கொள்வோமானால், "ராமன் இன்ன பலத்தை*

அடைய விரும்பினுன்'' முதலான லோகவ்யவஹாரங்கள் பத்ராதிக்கும். ப்ராப்தமானதை எவனும் அடைய விரும்ப மாட்டானன்றோ. ஆகையால் பலசப்தத்திற்கு நிஷ்பாத்யம் [அடையத்தக்கது] என்றே பொருளாகமுடியும். ஆகையால், "தரௌபதிக்கு நிஷ்பாத்யம் வஸ்த்ரம'' என்பதே பிரகிருத ஸூத்ரப்பகுதியின் பொருளாகமுடியும். "த்ரௌபதியினுல் சரணுகதிக்குப் பலனுக அடையத்தக்கது வஸ்த்ரம்'' என்றபடி. இனி, திரௌபதியினுல் சரணுகதிக்குப் பலனுக வஸ்த்ரம் ஏன் அடையத்தக்கதாகிறது என்னும் கேள்வி எழும். இக் கேள்விக்கு ஸமாதானத்தை "(த்ரௌபதி) வஸ்த்ரார்த்தமாக ப்ரபத்தி பண்ணுகையாலே'' என்று வ்யாக்யாதாவான மாமுனிகள் தெளிவாக அருளியிருக்கிருர். "இவளுக்கு வஸ்த்ரவர்த்தனம் அபேக்ஷிதம்'' என்று பரமாசார்யரான பெரியவாச்ான்பிள்ளை தனிச்லோகத்தில் அருளியதை அடியொற்றி அருளியபடியிது. ஆக, வியாக்கியானத்தைத் துணைகொண்டு இநத ஸூத்ரத்தை நோக்கும்போது "த்ரௌபதியினுல் சரணுகதிககு அபேக்ஷிதமான பலம் வஸ்த்ரம்'' என்னும் இவ்வளவே இந்த ஸூத்ரத்திலிருந்து தேறிநிற்கும். சரணுகதியினுலை வஸ்த்ரம் பெறப்பட்டது என்று தேருது. முமுக்ஷுப்படி ஸூத்ரமோவெனில, "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திருநாமமிறே'' என்று கூறுகிறது இவையிரண்டுக்கும் மேலெழத் தோன்றும் விரோதமும் இலலை. "ராமன் கிருஷ்ணனிடமிருந்து வஸ்திரததைப் பெறவிரும்பினுன்; கோவிந்தனிடமிருந்து அவனுக்கு வஸ்த்ரம் கிடைததது'' என்று இரண்டு வாக்யங்களை ஒருவர் கூறினுல இவையிரண்டுக்கும் விரோதம் உண்டு என்று எவரும் சொலலமாட்டார்கள். ஆகையால் ஸ்ரீவசனபூஷண ஸூத்ரத்திற்கும் முமுக்ஷுப்படி ஸூத்ரத்திற்கும் ஒரு விரோதமுமில்லை. ஆகையால், இல்லாத விரோதத்தை இருப்பதாக நினைத்து, அதைப் பரிஹரிப்பதற்காகத திருநாமத்தையும் ப்ரபத்தியையும் ஒன்ருககி ஆசார்யஸூக்திகளை ரஸோக்திகளாக்கவேண்டிய அவசியமேயில்லை.

18. இனி, ஸர்வஸ்வகாரர் கேட்கக் கூடும்:— "த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்'' என்னும் ஸூத்ரப்பகுதியில், "ப்ராப்தமான'' என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்துகொண்டு "த்ரௌபதிக்கு ப்ராப்தமான பலம் வஸ்த்ரம்''

என்று இந்த ஸூத்ரத்துக்குப் பொருள்கொண்டால் குறையென்ன?—என்று. "ப்ராப்தமான" என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்து கொண்டால், "த்ரௌபதிக்குப் புடைவை சுரந்தது திருநாமமிறே" என்னும் ஸ்வோக்தி விரோதம் வருமாகையாலே அதுவே முதற்குறை. மேலும், "தர்மபுத்ராதிகளுக்கு" என்று தொடங்கி, இந்த ஸூத்ரத்தில் ஏகரூபமாக ஏழு வாக்யங்கள் உள்ளன. இவற்றில் ஒரு வாக்யத்தில் எந்தப்பதத்தை அத்யாஹாரம் செய்து கொள்ளுகிறோமோ, அதையே எல்லா வாக்யங்களிலும் அத்யாஹாரம் செய்து கொள்வதே ந்யாயமும், சாஸ்த்ரஜ்ஞ ஸம்மதமுமாகும். அப்படி எல்லாவாக்கியங்களிலும் "ப்ராப்தமான" என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்துகொண்டு பொருள் கொள்ளுமளவில், "பெருமாளுக்கு ப்ராப்தமான பலம் ஸமுத்ரதரணம்" என்னும் வாக்யம் விரோதிக்கிறது. பெருமாளுக்கு ஸமுத்ரதரணம் சரணாகதியின் பலனாக ப்ராப்தமன்றே. "ப்ராப்தமான" என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்து கொள்வதில் இது இரண்டாவது குறை. "பெருமாளுக்குப் பலம்" என்றவிடத்தில் மாத்திரம் "அபேக்ஷிதமான" அல்லது "உத்$_3$தி$_3$ஷ்டமான" என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்து கொள்ளுகிறோம்; மற்றவிடங்களில் "ப்ராப்தமான" என்னும் பதத்தை அத்யாஹாரம் செய்து கொள்ளுகிறோம் எனில், அப்போது வைரூப்யம் என்னும் தோஷம் வரும். முன் சொன்னபடியே முமுக்ஷுப்படி ஸூத்ர விரோதமும் வரும். இவையெல்லாவற்றுக்கும் மேலே மாமுனிகளின் வியாக்கியான விரோதம் வருவது இப்பக்ஷத்திற்கு மூன்றாவதும் முக்கியமானதுமான குறை. "அபேக்ஷிதமான" அல்லது "உத்$_3$தி$_3$ஷ்டமான" என்னும் பதத்தையே எல்லா வாக்யங்களிலும் அத்யாஹாரம் செய்து பொருள் கொண்டால் மாத்திரமே பொருந்தக்கூடியதாயன்றோ மாமுனிகளின் வியாக்கியானஸ்ரீஸூக்தி அமைந்திருக்கின்றது. "தர்மபுத்ராதிகள் தொடக்கமான ப்ரபந்நாக்களானவர்கள், ராஜ்யார்த்தமாகவும், வஸ்த்ரார்த்தமாகவும், ப்ராணார்த்தமாகவும், கைங்கர்யார்த்தமாகவும், ராமப்ராப்த்யர்த்தமாகவும், ஸமுத்$_3$ரதரணார்த்தமாகவும், ராமாநுவ்ருத்த்யர்த்தமாகவும் ப்ரபத்திபண்ணுகையாலே ப்ரபத்திக்குப் பல நியமமில்லை" என்ற வ்யாக்யான ஸ்ரீஸூக்தி

“ப்ராப்தமான” என்ற பதத்தை மூலத்தில் பல வாக்யங்களிலும், “அபேக்ஷிதமான” என்ற பதத்தை ஒரு வாகயத்திலும் அத்யாஹாரம் செய்துகொண்டு பொருள்கொள்ள மிகவும் பா$_3$த$_4$கமாயன்றே அமைந்திருக்கின்றது. ப$_2$ல சப்தத்துக்கு நிஷ்பாத்$_3$யம் என்று பொருள்கொள்ளாமல் நிஷ்பந்நம் அல்லது ப்ராப்தப$_2$லம் என்று பொருள் கொண்டாலும் இம்மூன்று குறைகளும் தவிர்க்க முடியாதவை. இவற்றைத் தவிர, லோகவ்யவஹாரபா$_3$த$_4$ம் என்னும் பெருங்குறையும் அப்படிப் பொருள்கொள்வதில் ஏற்படுகிறதென்பதை முன்பே காட்டினோம். ஆக, இவ்வளவால் ‘த்$_3$ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்’ என்னும் ஸ்ரீவசநபூஷண ஸூத்ரத்துக்கும், முமுக்ஷுப்படி ஸூத்ரத்துக்கும் எவ்வித விரோதமுமில்லையென்றும், ஆகையாலேயே திருநாம சப்தத்தையும், ப்ரபத்தி சப்தத்தையும் பர்யாயமாகக்கொண்டு ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை அஸ்வரஸமாக்குவது அந்யாய்யம் என்றும் நிரூபிக்கப்பட்டதாயிற்று. இவ்வளவால், பாரா 8, 9, 16, 17, 18, 25, 26, 27, 30 முதலான பாராக்களில் ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியையும், அதன் வ்யாக்யானத்தையும் எடுததுக்கொண்டு ஸர்வஸ்வகாரர் எழுதியவை நிரஸிக்கப்பட்டன. நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை, பிள்ளையுலகாசிரியர், மாமுனிகள் ஆகிய எந்த ஆசார்யருடைய ஸ்ரீஸூக்தியை எடுத்துக்கொண்டாலும், புடைவை சுரந்ததை ப்ரபத்திக்குப் பலமாக (நிஷ்பாத்யமாக) எடுக்கும்போது ‘கிடைததது’ என்று பொருள்கொள்ள முடியாதபடி ஸ்ரீஸூக்திகளை இடுவதையும, திருநாமததின் பலமாக எடுக்குமபோது ‘கிடைததது’ என்று தெளிவாக விளங்கும்படி ஸ்ரீஸூக்திகளை இடுவதையும் நடுநிலையாளர் நோக்கவேணும.

## திருநாமம ப்ரபத்தியின் அவயவமாகாது.

19. இனி, பாரா 10 முதலிய பல பாராக்களில், ப்ரபத்தியின் சரீரத்திலே நாமஸங்கீர்த்தனமும் ஓர் உறுப்பென்றும், ஆகையால், கோவிந்தநாமம் புடைவை சுரந்தது என்றால், ப்ரபத்தி புடைவை சுரந்தது என்றே பொருள்படும் என்றும் கூறியது பொருந்தாது என்று நிரூபிக்கிறோம். ப்ரபத்தியானது மாநஸப்ரபத்தியென்றும், வாசிகப்ரபத்தியென்றும், காயிகப்ரபத்தியென்றும் மூன்றுவகைப்படும். அதில் ‘எனக்கு

நீயே உபாயமாவாயாக' என்னும் நினைவாகவேயிருக்கும் மாநஸப்ரபத்தியே முக்கியமானது. மற்றவையிரண்டும் அமுக்கியமானவை. த்ரௌபதீசரணாகதிஸ்தலத்தில் **"ஸ்மர்த்தவ்யோ பு₄க₃வாந் ஹரி:"** என்று திரௌபதி அநுஸந்திக்கையாலும், சரணாகதிச்லோகத்திற்கு முன் ச்லோகத்தில், **"த்₃ரௌபதீ₃க்ருஷ்ணமஸ்மரத்"** என்று வியாஸர் கூறுகையாலும், தனிச்லோகவ்யாக்யானத்தில், "அத்₄யவஸாயத்தைச் சொல்லிற்றாயிற்று" என்று உபக்ரமத்திலும், "உபாயாத்₄யவஸாயம் சொல்லித் தலைக்கட்டுகிறது" என்று உபஸம்ஹாரத்திலும் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்கையாலும், திரௌபதி முக்கியமான மாநஸப்ரபத்தியை அநுஷ்டித்தாள் என்று தெளிவாகிறது. **வாசிகமான** திருநாமஸங்கீர்த்தனம் இந்த **மாநஸ**ப்ரபத்திக்கு அவயவமாகமுடியாது. ஆகையால் 'ப்ரபத்தியே புடைவை சுரந்தது' என்னும் பக்ஷத்தில், "ப்ரபத்தியின் அவயவமான திருநாமம் புடைவை சுரந்தது" என்று வழங்குவது விரஸமேயாகும். திரௌபதி வாசிகப்ரபத்தியையும் செய்திருந்தபோதிலும், மாநஸமான முக்யப்ரபத்தியைச் செய்திருக்குமிடங்களில் வாசிகமான கௌணப்ரபத்தி பலனளித்ததாகக் கூறுவது ஸ்வரஸமாகாது. அப்படியே கூறுவதாகக் கொண்டாலும், "கோவிந்தா! உன்னை சரணமடைந்தேன் (உபாயமாகக் கொண்டேன்)" என்னும் வாசிகப்ரபத்திவாக்யத்தில், 'சரணமடைந்தேன்' என்னுமதுவே வாசிகப்ரபத்தியாகுமேயொழிய, 'கோவிந்தா' என்னுமது வாசிகப்ரபத்தியாகாது. கோவிந்தநாமமில்லாவிடிலும் அது ப்ரபத்தியாகும்; ஶரணவரணமில்லாவிடில் ப்ரபத்தியாகாது. ஆகையால், வாசிகப்ரபத்தியே திரௌபதிக்குப் பலனளித்ததாகக் கொண்டாலும் 'சரணமென்ற உக்தி பலனளித்தது' என்று கூறலாமேயொழிய, வாசிகப்ரபத்திக்கு அவசியமான அவயவமல்லாத கோவிந்தநாமம் அல்லது உக்தி பலனளித்தது என்று கூறுவது மிகவும் ஒட்டாது. மேலும், சரணாகதிச்லோகத்தில் பல நாமங்களிருக்க, ஆசார்யர்களனைவரும் ஏககண்டமாக கோவிந்தநாமம் ஒன்றையே புடைவை சுரந்ததாகக் கூறுவது ஒருசிறிதும் ஒட்டாது. **நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, பிள்ளைலோகாசார்யர், மாமுனிகள் ஆகிய அனைவரும் பலவிடங்களில் ஏககண்டமாக, திருநாமம், அதிலும் கோவிந்தநாமம் புடைவை சுரந்ததாகக்**

கூறுகிறார்களேயொழிய ஓரிடத்திலாவது வேறொரு நாமமோ, சரணமென்னும் உக்தியோ, அல்லது நினைவோ புடைவை சுரந்ததாக எங்குமே கூறுவதில்லை. ஆகையால் திருநாமஸங்கீர்த்தனமாகிற உபாயாந்தரமே புடைவை சுரந்ததாகக் கொண்டாலொழிய இவ்வாசார்ய ஸ்ரீஸூக்திகள் பொருந்தமாட்டா. *வாசிகப்ரபத்தியைச் சொல்லுமிடங்களில நம் ஆசார்யர்கள்* "ஶரணவரணவாக்யம யோதி3தா" "ஶரணமிதயபி வாசமுதை3ரிரம்" "ஶரணமிதயுக்திக்ஷமௌ ரக்ஷத:" *முதலான பற்பலவிடங்களில சரணோக்தியை வாசிகப்ரபத்தியாக எடுக்கிறார்களேயொழிய நாமோக்தியை வாசிகப்ரபத்தியாக எவ்விடத்திலும் எடுப்பதில்லை என்பதும் காணத்தக்கது.* மேலும், சாஸ்திரங்களில ப்ரபத்திஸ்தலங்கள் பற்பலவிருக்கின்றன. அவற்றில எவ்விடததிலும ப்ரபத்தியின் அவயவமான திருநாமம முதலானவை பலனளித்ததாக எந்த ஆசார்யரும் அருளியிருப்பதைக் காண்கின்றிலோம். திரௌபதீ ப்ரபத்தி ஸ்தலத்திலோவெனில் நியமேன எல்லா ஆசார்யர்களும் திருநாமமே, அதிலும் கோவிந்த நாமமே புடைவை சுரநததாகக் கூறுகிறார்கள். இக்காரணஙகளால் திரௌபதீ ப்ரபத்தி ஸ்தலத்தில் கோவிந்த நாமத்தை ப்ரபததியின் அவயவமாகக் கொண்டு அந்நாமம் புடவை சுரந்ததென்று ஆசார்யர்கள் கூறுகிறார்கள் என்று ஸர்வஸ்வம கூறியது ஒருசிறிதும் ஒட்டாதென்றும். சரணாகதியைப பரிபூர்ணமாக அனுஷ்டிதத பின்பு "பாஹி கோவிநத" என்றவிடத்தில் 'நாமமாவது நம மானத்தையாவது காக்காதா" என்று உபாயபுததியுடன் கோவிந்த நாமத்தை உச்சரித்துவிட்டாள் என்று கருதிய தாலேயே ஸகலாசார்யர்களும் கோவிநதநாமம புடவை சுரந்தது என்று கூறுகிறார்கள் என்றும் விளஙகும. *'திரௌபதி சரணமடைந்தது யாதொன்றுண்டோ" என்ற சொல்ல வேண்டியிருக்க,* 'கோ3விந்தே3தி யதா3க்ரந்த3த்' *[திரௌபதி கோவிந்தா என்று கதறியது யாதொன்றுண்டோ] என்று கண்ணன் அருளியதும், திரௌபதி உடனேபெற விரும்பியவையாகப் பெரியவாச்சான்பிள்ளையருளிய மற்ற பலன்களெல்லாம் உடனே கிடைக்கவில்லையென்னும் உண்மையும், மற்றும் நாம் ஸித்தாஞ்ஜனத்தில் காட்டியிருக்கும் காரணங்களும் இதையே வலியுறுததுகின்றன.* இவ்வளவால பாரா *10, 11, 12, 23 முதலான பாராக்களில ப்ரபத்தி சரீரத்தில்*

திருநாமஸங்கீர்த்தனம் ஓர் உறுப்பு என்றெழுதியது தள்ளப்பட்டது.

20 பாரா 13. 29 ஆகிய இரண்டு பாராக்களிலும் ஆழ்வார்கள், எம்பெருமானுர் முதலானுர் சரணமடையும்போது அபரிமிதமான நாமங்களைப் பொழிவதாலே நம்முடைய பக்ஷத்தில் அவர்களுடைய சரணுகதியும் விபலமாகவேண்டி வரும் என்று எழுதுகிருர். ஆழ்வார்களும், எம்பெருமானுர் முதலானுரும் உபாயபுத்தியுடன் ஒரு நாமத்தையும் ஸங்கீர்த்தனம் செய்யவில்லை. உபாயபுத்தியில்லாமல் ஆயிரங்கோடி நாமங்களை ஸங்கீர்த்தனம் செய்தாலும் ப்ரபத்தி தடைபடாது. திரௌபதியோவெனில் உபாயபுத்தியுடன் கோவிந்த நாமத்தை உச்சரித்துவிட்டாள் என்பது ஆசார்ய ஸ்ரீஸூக்திகளிலிருந்து அசைக்கமுடியாதபடி தேறுவதைக் கீழே காட்டினேம். ஆகையால் இவ்வாதமும் பொருந்தாது.

**பாரதாதி தனிச்லோக ஸூக்திகளின் ஸ்வாரஸ்யம்.**

21. பாரா 15 முதலான பல பாராக்களில், "கண்ணபிரான் நேரில் வந்து ஸேவை ஸாதிக்கவேணும் என்று த்ரௌபதி கோரியிருந்தவள் அல்லள்" என்று ஸர்வஸ்வகாரர் எழுதுகிருர். "அப்படியே (கஜேந்திரனுக்கு உதவியது போலவே) கூராராழி வெண்சங்கேந்தி வந்தருளி, தனக்கு முகங்காட்டவேணும் என்று கருத்து" "அவன் நிலைகலங்கி வரும்படி அவன் நிலையைச் சொல்லிக் கூப்பிடுகிருள்" '**அரைகுலையத் தலைகுலைய** அலமாக்கும்படியான முடி சூடின பேரைச் சொல்லிக்கூப்பிட்டு முறையிடுகிருள்" "உன் சோதிவாய் திறந்து உன் தாமரைக் கண்களால் நோக்காதொழிவதென்? என்னுடைய ஆபத்துக்கு அவலோகனதாநமன்றே அபேக்ஷிதம்?" "வழி பறிக்கும் தசையிலே தாய் முகத்திலே விழிக்க ஆசைப்படுவாரைப்போலே * தாயாயளிக்கின்ற தண்டாமரைக் கண்ணனைக் காணவாயிற்று இவள் ஆசைப்படுகிறது" "ரக்ஷிக்கையாவது விரோதியைப் போக்குகையும். அபேக்ஷிதங்களைக் கொடுக்கையும்" "சரணமடைந்த இவளுக்காகவிறே பண்டு நூற்றுவரை மரணமடைவித்ததும்" "இவளுக்கு வஸ்த்ரவர்த்தனமும், சத்ரு ஸம்ஹாரமும் அபேக்ஷிதம்" "மாசுச: என்று ஒரு வார்த்தையன்றே வேண்டுவது" முதலான பல ஸ்ரீஸூக்திகளில்

திரௌபதியானவள் மேலான ஆர்த்தியுடன் கண்ணன் **உடனே அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து** முகங்காட்டவேணு மென்றும், 'மாசுச:' என்று வார்த்தை சொல்லவேண்டு மென்றும், வஸ்திரத்தை வளரச்செய்யவேண்டுமென்றும், சத்ருஸம்ஹாரம் செய்யவேண்டுமென்றும், இழந்த அரசினை அளிக்கவேண்டுமென்றும், கலைந்த குழலை முடிப்பிக்க வேண்டும் என்றும் பலபலன்களை விரும்பியதாகப் பெரிய வாச்சான்பிள்ளை அருளிச்செய்திருப்பதோடு இது பொருந் தாது. திரௌபதியின் ஆர்த்தியையும் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளையும், காணும்போது இவையெல்லாம் **உடனே நடக்கவேண்டும்** என்றே திரௌபதி விரும்பியிருக்க வேண்டும் என விளங்கும். "புடைவை சுரப்பதை மாத் திரம் இப்போது செய்துவிடு; உனக்கு எப்போது இஷ்டமோ அப்போது நேரே வந்து முகங்காட்டி நல்வார்த்தை சொல்லி, மற்ற பலன்களைக்கொடு" என்று அவள் ஒருகாலும் கருதி யிருக்க முடியாது. வனவாஸத்தில் கண்ணனை முதல்தரம் பார்த்தபோது "நீயும் என்னை ரக்ஷிக்கவில்லையே" என்று கதறியதிலிருந்து இப்பலன்களையெல்லாம் உடனே அவள் பெறவிரும்பினாள் என்று தெளிவாக விளங்குகிறது. ஆனால் வஸ்த்ரம் வளர்ந்ததைத் தவிர மற்ற எல்லாப் பலன்களும் நெடுங்காலம் கழித்தே கிடைத்ததைப் பார்க்கிறோம். உடனே கிடைத்த ஒரே பலனான வஸ்திரவிருத்தியையும் கோவிந்த நாமத்தின் பலனாகவே கிடைத்ததாக எல்லா ஆசார்யர்களும் ஒருமிடறாக கோஷிப்பதையும் காண்கிறோம். ஓராசார்யராவது ஓரிடத்திலாவது வஸ்திரவிருத்தியை மாத்திரம் தனியே எடுத்து சரணாகதியின் பலனாகச் சொல்ல வில்லையென்பதையும், மற்ற பலன்களில் ஒன்றையெடுத்து இது திருநாமத்தின பலன் என்று அருளவில்லை என்பதை யும் காண்கிறோம். உடனே பலன்களை திரௌபதி விரும்பிய தாகக் காட்டும் பெரியவாச்சான்பிள்ளை சரணாகதி பலன்களை அவன் அருளியதைக் காட்டும்போது நியமேன நெடுநாள் கழித்தே அருளினான் என்று நிரூபிப்பதையும் காண்கிறோம். இவையெல்லாம், த்ரௌபதீப்ரபத்தியானது இடையிலே தடைபட்டிருந்தது என்று கொண்டாலொழியப் பொருந்த மாட்டா.

22. பாரா-19ல் "வஸ்த்ரவர்த்தநம் உடனே பலித்தது; சத்ருஸம்ஹாரம் நாளடைவில் பலித்தது. சத்ருஸம்ஹாரத்தையும் உடனே பலிப்பிக்கவல்ல ஆற்றல் கண்ணபிரானுக்கு இருக்கச்செய்தேயும், அதை விளம்பித்து முடித்ததானது கீதாசாஸ்த்ராவதரணம் முதலியவற்றைக் கருதியென்றும், திருவாய்மொழியை அவதரிப்பிக்கவேண்டி ஆழ்வாருடைய பரபக்தியை விளம்பேந ஸபலமாக்கினது போலவே இதுவுமென்றும் பெரியோர்கள் நிர்வஹித்துள்ளார்கள்" என்று எழுதுகிறார். இதை ஆராய்வோம். ஆழ்வாரைக்கொண்டே திருவாய்மொழி அவதரிப்பிக்கவேண்டும் என்று ஆசைப்பட்டான் ஸர்வேச்வரன்; ஆழ்வார்க்கு மோக்ஷம் கொடுத்துவிட்டால் அவ்வாசை ஈடேறாது; அதனால் விளம்பித்தான் என்று சொல்லுவது ஒட்டும். இங்கோவெனில், பரமார்த்தியோடு நேரே வந்து எல்லாக் காரியங்களையும் உடனே செய்யவேணுமென ஆசைப்பட்ட திரௌபதியின் விருப்பத்தையும் ஈடேற்றிவிட்டுப் பிறகு காலாந்தரந்திலே கீதோபதேசம் முதலானவற்றைச் செய்ய இடமுண்டு. மேலும், அப்படி எம்பெருமான் கருதியிருந்தாலும் அதை சாஸ்திரவரம்புக்குக கட்டுப்பட்டுச் செய்வானேயொழிய, சாஸ்திர வரமபை மீறிச்செய்யமாட்டான். ஆகையால், சத்ருஸம்ஹாரம கீதோபதேசம முதலானவற்றைக் காலாந்தரத்தில் செய்யவேண்டும் எனனும் திருவுள்ளமிருந்ததாலேயே சிலகணங்கள் தாமதித்து திரௌபதிக்கு உபாயாந்தரஸம்பந்தத்தை ஏற்படுத்திப் பிறகு அதற்குப் பிராயச்சித்தமும் அநுஷ்டிப்பித்துத் தன் விருப்பப்படி சரணாகதி பலன்களை நெடுங்காலங்கழித்துக்கொடுத்தான் என்றே கொள்ளவேண்டும். இப்படி உபாயாந்தர ஸம்பந்தத்தை இடையிடாவிடில், பரமார்த்தியோடு பல பலன்களை திரௌபதி உடனே விரும்பியிருக்கையில், அவற்றை உடனே தராமல் காலங்கடத்தி, 'ஆர்த்தப்ரபத்திக்கு உடனே பலன் தரவேணும்' என்னும் சாஸ்திரவரம்பை மீறினான் கண்ணன் என்னும் தோஷம் ஏற்பட்டேதீரும். ஆழ்வார் விஷயத்திலும் ஆர்த்தியை மேன்மேலே சிறுகச்சிறுக வளர்த்துக் கொண்டுபோய், திருவாணை நின்னாணை கண்டாய்" என்னும் பரமார்த்தியைக் கடைசியில் விளைப்பித்து உடனே மோக்ஷம் கொடுத்தான சாஸ்த்ரபரதந்த்ரனான ஸர்வேச்வரன் என்பதே தத்துவம.

ராவணவத₄ார்த்திகளான தேவர்களின் ப்ரபத்தி த்ரௌபதி யின் பிரபத்தியைப்போலே உடனே பலன் தரவேண்டுமென விருமபிய ஆர்த்தப்ரபத்தியல்லவாகையால், பாரா 20-ல் அதை த்ருஷ்டாந்தமாக எடுப்பதும் பொருந்தாது. இவ்வளவால் பாரா 14, 15, 19, 20, 21 முதலான பாராக்களில் பாரதாதி தனிச்லோக ஸ்ரீஸூக்திகளை எடுத்துக்கொண்டு எழுதியிருப் பவை வீணானவை என்று விளக்கப்பட்டது

**சணற்கயிறு கண்ட ப்ரஹ்மாஸ்த்ர விசாரம்.**

23. பாரா 28லும், அம்ருதலஹரியில் வெளிவந்த த்ரௌ பதீப்ரபத்தி ஸாம்ராஜ்யததிலும், "நாமோச்சாரணத்தால் சணற்கயிறுகண்ட ப்ரஹ்மாஸ்திரம்போலே ப்ரபத்தி நழுவிற் றாகில், சணற்கயிறுபோலே உபாயாந்தரமும் காரியம செய் யாது" என்று எழுதுகிறார். உபாயாந்தர ஸம்ஸர்க்கம் ஏற்பட டால்ப்ரபத்திநிஷ்டை நழுவும் என்று லக்ஷ்மீதந்த்ரம் முத லான சாஸ்திரங்கள் கோஷிப்பதை ஸித்தாஞ்ஜனம் பாரா 7-ல் காட்டினோம். அந்த ஸ்தலங்களில் உபாயாந்தரங்கள் தம காரியததைச் செய்யமாட்டா என்பதற்கு யாதொரு பர மாணமுமில்லை. சணற்கயிறு கண்டு ப்ரஹ்மாஸ்திரம் நழு வியவளவில சணற்கயிறும நழுவிவிட்டது என்று எப் பிர மாணமும் சொலலவிலலை. மஹாபலசாலியாகையாலே அனு மன் அதைப் பயனற்றதாக்கிவிட்டான. ஸாமான்ய பலமுள்ள வன் ஒருவன் கட்டப்பட்டிருந்தால, சணற்கயிறு ப்ரஹ்மாஸ் திரம் நழுவியபினபும் அவனை அசையமுடியாதபடி கட்டியே வைத்திருக்கும். அதுபோலவே ப்ரபத்தியை நழுவச் செய்த உபாயாந்தரம தன்னால இயன்ற காரியத்தைச் செய்தே தீரும். ஆகையால சணற்கயிறு வாதமும் பயனற்றது.

24. பாரா 32-ல் "முராரேஸ் த்ருதீய பந்த₂ா:" என்கிற ரீதியில் நாம எழுதியிருப்பதாகப் பரிஹஸிககிறார். இரண்டு பக்ஷங்கள் ஆசாரய ஸ்ரீஸூக்திகளுககு விருத்தமாயிருக்கின் றன என்று காட்டி, இரண்டுக்கும் மத₄யமார்ககத்தில அமைந்திருப்பதும், ஸகலாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கும பொருந்தியதும், ஓராசார்ய ஸ்ரீஸூகதியையும், அமுக்கிய மென்றோ, ரஸோகதியென்றோ தள்ளாததுமான பக்ஷத்தை நாம் காட்டியிருப்பது நடுநிலையாளர்களால ஏற்கத்தக்கதே

யாகும். அபி₄நிவேஶவஶீக்ருதர்களே இதைப் பரி ஹஸிப்பார்கள்.

25. ஸித்தாஞ்ஜனம் பத்தாவது பாராவில் "ஒரு குடும்ப தலைவன்" என்று தொடங்கி நாம் காட்டியிருக்கும் த்ருஷ் டாந்தத்தை "அநுவதிக்கவும் தகாத அசட்டு த்ருஷ்டாந்தம்" என்று பரிஹஸிக்கிறார். எவ்வகையில் அது அசட்டு த்ருஷ் டாந்தமாகும் என்று நிரூபிக்கவில்லை. ப₄லப்ரத₃னுக்கும், ப₄லகரணத்துக்குமுள்ள வாசியைவிளக்கும் அந்த த்ருஷ்டாந் தத்தை அநுவதித்துவிட்டால், அவ்வாசியை அறியாத ஸர் வஸ்வநூலின் அசட்டுத்தனம் வெளியாகிவிடும் என்று கரு தியே இப்படி எழுதுகிறார் என்பது தெளிவு. "ஜக₃ தே₃க குடும்பி₃னே என்று போற்றப்பட்ட ஸர்வேச்வரனுடைய குடும்பத்தில் சேர்ந்தவர் இன்னார், சேராதவர் இன்னார் என்று நிர்ணயிக்க இவர் ஆர்கொல்?" என்று சீறுகிறார். உலகிற்கெல் லாம் இயற்கையிலேயே ஸ்வாமியாயிருப்பதால் உலகத்தைக் குடும்பமாகக் கொண்டவன் எனத்தக்கவனே ஸர்வேச்வரன். அப்படியிருந்தும் சிலரைத் தன் ஆத்மாவாகவே நினைத்து அபிமானிப்பதும், சிலருக்கு வேலைக்குக் கூலிகொடுப்பது போலே காரியம செய்து அநுக்ரஹிப்பதும் சிலரை ஸர் வாத்மநா நிக்ரஹிப்பதும் செய்கிறான் என்பதை எவராலும் மறுக்கவொண்ணாது. அந்த ரீதியில் ஸர்வேச்வரனை எல்லா வுறவுமாக அறிந்து, அவனையே உபாயமாகப் பற்றிநிற்கும் ப்ரபந்நர்களைத் தனக்கு மிகவும் அந்தரங்கர்களாகக்கொண்டு, அவர்களிடம் எதையும் எதிர்பாராமல் எல்லாக் காரியங் களையும் செய்கிறான் என்பதையும், ஸம்பந்தஜ்ஞானம் பரி பூர்ணமாக இல்லாமையாலோ, அறிவுக்கலக்கத்தாலோ உபா யாந்தரங்களைப் பற்றுகிறவர்களுக்கு வேலைக்குக் கூலி கொடுப்பது போலே அளந்து பலன் கொடுக்கிறான் என் பதையும் எவராலும் மறுக்கவொண்ணாது.

26. 34, 35 **பாராக்களில்** உத்தமப்ரபந்நயாய், ப்ர பத்தியை வெளியிடப் பிறந்த பாக்யவதி' என்று கொண் டாடப்படும் த்ரௌபதியை உபாயாந்தரபரிக்ரஹம் பண்ணி னாள் என்று நாம் எழுதியிருப்பது மஹாபசாரம் என்றும், பெரிய அநீதியென்றும் எழுதுகிறார். ஆசார்ய ஸ்ரீஸூக்திகள் வேறுவகையாக நிர்வஹிக்க முடியாதவையாயிருப்பதா

லேயே நாம் த்ரௌபதி உபாயபுத்தியைச் செய்தாள் என்று கலபிக்கிறோம். உபாயாந்தரபரித்யாக பூர்வகமாக ப்ரபத்தியைப் பரிபூர்ணமாக அனுஷ்டித்தபின்பு ஆபத்தாலே அறிவு கலங்கி உபாயாந்தரத்தில் நெஞ்சு செலுத்தி விட்டாள்; பிறகு அதற்கும் பிராயச்சித்தம் செய்துவிட்டாள் என்று நாம் எழுதியிருப்பது எந்த ஆசார்ய ஸ்ரீஸூக்தியோடும் விரோதிககாது. இதை அபசாரமாகவும், அநீதியாகவும் கொண்டால், ப்ரேமத்தாலே அறிவு கலங்கி, நம் ஆழ்வார்கள் ஸ்வப்ரவ்ருத்தியிலும், தேவதாந்தரபஜனத்திலுங்கூடக் கைவைப்பதாக நம் ஆசாரியர்கள் எழுதி வைத்திருப்பது மஹாபசாரமாக வேண்டிவரும். விசிஷ்டாதி$_4$காரிகளான ஆழ்வார்களுக்கே கலக்கத்தால் ஏற்பட்ட ஸ்வப்ரவ்ருத்தி அவத்யமாகாதபோது, ஸாமாந்யாதிகாரியும் பிரயோஜநாந்தரபரை என்று ஸர்வஸம்ப்ரதிபந்நையுமான த்ரௌபதிக்குக் கலக்கத்தாலே மஹத்தான ஆபத்துக்காலத்திலே ஏற்பட்டதும், ப்ராயச்சித்தத்தால் அழிந்ததுமான உபாயாந்தரஸம்பந்தம் ஓரவத்யத்தையும் விளைக்காது. நாம் அப்படி எழுதியது எவ்விதத்திலும் அநீதியன்று.

27. த்ரௌபதிக்கு வந்து கழிந்த உபாயாந்தர ஸம்பந்தம் ஏற்பட்டது என்று கொண்டாலொழிய, நாம் உயிரைக் கொடுத்தும் காப்பாற்றவேண்டிய பற்பல ஆசார்ய ஸ்ரீஸூக்திகள் பொருளற்றவையாகவும், ரஸோகதியாகவும் ஆகிவிடுகின்றன. ஆசார்ய ஸ்ரீஸூக்திகள் தம்பக்ஷத்தில் ரஸோக்தியாவதை பாரா-11 முதலானவிடங்களில் ஸர்வஸ்வகாரரும் இசைந்தேயுள்ளார். ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை இப்படி ரஸோகதிமாத்ரமாகாதபடி ஸம்ரக்ஷிப்பதற்காக நாம் எழுதியுள்ளதில் யாதொரு அவத்யமும் இல்லை. தூஷணபரிஹாரஸங்களில்லாமல் விஷயவிசாரம ஸர்வஸ்வகாரரால் செய்யப்படுமானால் மேலே ஒருசில அத்தியாயங்களில் இவ்விஷயங்களை நன்கு நிலைநிறுத்துவோம.

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ராதிபரான
ஸ்ரீக்ருஷ்ணஸ்வாமிதாஸன் இயற்றிய த்ரௌபதீப்ரபத்தி
ஸித்தாஞ்ஜன ஸம்ரக்ஷணத்தில் முதலத்தியாயம் முற்றிற்று.

———

# த்ரௌபதீப்ரபத்திஸித்தாஞ்ஜநஸம்ரக்ஷணம்

## இரண்டாவது அத்தியாயம்

28. ஆழ்வார் திருநகரியில் எம்பெருமானாருத்ஸவத்திலும், மதுரையில் சித்ராபௌர்ணமி யுத்ஸவத்திலும், அந்வயித்துவிட்டு, திருமோகூர், திருக்கோட்டியூர், திருமெய்யம், திருக்கடிகை, திருமலை, ஸ்ரீகாஞ்சீ, திருக்கோவலூர் முதலான திவ்யதேசங்களை ஸேவித்துவிட்டுத் திரும்பியதும் இன்று (19—5—63) அம்ருதலஹரியைக் கண்டோம். அதில் ஸித்தாஞ்ஜந ஸம்ரக்ஷணத்தைக் கண்டிக்க எழுந்த ஸம்ரக்ஷண ஸமீக்ஷணம் என்னும் கட்டுரையையும், "உபமா காளிதாஸஸ்ய" என்னும் சிறு வியாஸத்தையும், ஸர்வஸ்வம் இரண்டு முதல் நாலு அத்தியாயங்களையும் எழுதியிருக்கிறார் ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமி. ஸித்தாஞ்ஜனத்திலும், ஸம்ரக்ஷணத்திலும் தம் பக்ஷத்தின்மேல் நாம் காட்டியிருக்கும் பற்பல தோஷங்களில் பெரும்பாலானவற்றை இவற்றிலும் தொடவேயில்லை. தொட்டிருக்கும் ஒன்றிரண்டு விஷயங்களிலும் தோஷங்களைச் சரியாகப் பரிஹரித்துக்கொள்ளவில்லை. சம்பந்தமில்லாத கதைகளையும், விசாரங்களையுமிட்டுப் பல பக்கங்களை நிரப்பியிருக்கிறார். ஸர்வஸ்வம் 32-வது பாராவில் "இவற்றுக்கெல்லாமிவர் அடைவே லக்கமிட்டு விடையிறுக்கட்டும்" என்று நியமித்தார். அந்நியமனத்தைச் சிரமேற்கொண்டு நாம் ஸர்வஸ்வத்தில் நமக்கு சம்பந்தப்பட்ட ஒவ்வொரு பாராவையும் லக்கமிட்டு விடையிறுத்தோம். ஸம்ரக்ஷணம் 11-வது பாராவில் 'இதே ரீதியில் ஸ்வாமியும் பதிலிறுப்பாராக' என்று பிரார்த்தித்தோம். இந்தப் பிரார்த்தனையைத் தலைக்கட்ட முடியாமையாலே, ஸமீக்ஷணம் 13-வது பாராவில் "**எத்தனை லக்கங்கள் கொடுத்தும் எழுதிக்கொண்டு போகட்டுமே; அவற்றுக்கெல்லாம் பிரதிலக்கமிட்டு மறுப்பெழுதவேணுமென்று விதியா நமக்கு**" என்று எழுதுகிறார். இதிலிருந்து நம்முடைய விஷயவிசாரங்களுக்கு ஸர்வஸ்வகாரரால் பதிலெழுதமுடியவில்லை என்று நடுநிலையாளர்க்கு எளிதில் விளங்கும். நாம் இப்போது வெளிவந்திருக்கும் விஷயங்களிலும் பிரகிருத விவாதத்திற்கு சம்பந்தப்பட்ட விஷயங்களை ஒன்றுவிடாமல் எடுத்து பதிலிறுப்போம். இவ்வத்தியாயத்தின் கடைசியில் ஒரே பாராவில் ஸர்வஸ்வ

காரர் பதிலிறுத்தே தீரவேண்டிய பல விஷயங்களை இலக்கமிட்டு எடுத்துக் காட்டுவோம். அடுத்த மாத அம்ருதலஹரியில [அல்லது ராமாநுஜனில்] அந்த விஷயங்களுக்காவது அடைவே இலக்கமிட்டு பதிலிறுக்க முயல்வாராக.

## ஸமீக்ஷண நிரஸனம்

29. ஸமீக்ஷணம் பாரா-2 ல் நம்முடைய நிர்வாஹத்தை ப்ரஸ்தாவித்து 'பெருமாள் மூன்ருவதானவொரு விலக்ஷண மான ஸ்வாபிப்ராயத்தை வெளியிட்டருளினதாக....... வெளியிட்டுள்ளார். அங்ஙனேயிருந்தால் உலகமெல்லாமுகந்து கொண்டாட நிற்கும். அந்த பாக்கியமில்லாமைக்கு வருந்த வேண்டியதே'' என்றெழுதுகிறார். நம்முடைய நிர்வாஹம் ஸகல பூர்வாசாரய ஸ்ரீஸூக்திகளுககும் பொருந்தியுள்ளதா இலலையா என்பதை நிஷ்கர்ஷம் செய்யப் பக்ஷபாதியான ஸர்வஸ்வகாரர்க்கு அதிகாரம் கிடையாது. வர்த்தமான காலத்திலும் அநந்தமானபவிஷ்யத்காலத்திலும் முமுக்ஷூப்படி ஸூத்ரங்களையும், ஸ்ரீவசந பூ$_4$ஷணஸூத்ரங்களையும், ஈட்டு ஸ்ரீஸூக்திகளையும் பாரதாதி தனிச்லோக ஸ்ரீஸூக்திகளையும் விவரிககும் நூல்களிலும் உபந்யாஸ காலக்ஷேபங்களிலும் க்யாதிலாப$_4$பூஜாதி$_3$ நிரபேக்ஷர்களான பண்டித ப்ரவரர்கள் பலரும் எந்தப்பக்ஷம் ஸகலபூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுககும் பொருந்தியது' என்று நிஷகர்ஷித்தே தீருவார்கள். [நாம் இப்படி எழுதியிருப்பதைக் கண்டவுடன் 'இதோ இப்போதே காட்டுகிறேன் பார்' என்று வேண்டியவர்களிடமிருந்து அபிப்ராய பத்திரிகைகளைப் பெற்று வெளியிடவோ, வெளியிடச்செய்யவோ வேண்டாம் என்று பிரார்த்திககிறேன். இவர் வெளியிட்டாலும் நாம் வெளியிடமாட்டோம்.]

30. ஸமீக்ஷணம் பாரா 2-ல் தனிச்லோக க்ரந்தத்தில் பெரியவர்ச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி தவிர வேறொன்றும் இல்லையென்று நினைத்துப் புகழ்ந்து எழுதிவிட்டதாக எழுதுகிறார். புஸ்தகத்தைப் பிரித்து எந்தப்பக்கத்தைப் பாராதிருந்தாலும் நம்முடைய விவரணம் சிறிய எழுத்தில் கீழேயிருப்பதைக் கண்டிருக்கலாம். பலவருஷங்களாக மாதந்தோறும் ஸுதர்சனத்தில் விவரணத்தோடு வெளி வருவதையும் முதல் பாகம் அப்படியே வெளிவந்திருப்பதையும் கண்டவரேயிவர். ''தன் நெஞ்சறிவது பொய்யற்க

பொய்த்தபின் தன் நெஞ்சே தன்னைச்சுடும்" இவர் பின்னை எதிரம்பு கோக்கப்போவதில்லை. அறிந்த ஸர்வஜ்ஞனான எம்பெருமான் இவர் கையைக்கொண்டே "ஸ்ரீச்லோக க்ரந்தத்தில் இந்தப் புரோப$_4$ாகி$_3$க்கு ஒன்றும் கிடைக்கவில்லை" என்று எழுதி வைத்துவிட்டான் என்பதே தத்துவம்.

31. ஸமீக்ஷணம் பாரா 4-ல் 'ஸ்ரீபாஷ்யகாரர் அத்வைதிகளை ஒரு **வாக்கியத்தில்** தூஷித்திருப்பதுபோலே நானும் தூஷிக்கலாம்' என்னும்பொருள்படும்படி எழுதுகிறார். பகவானுடைய ரூபகுண விபூதிகளை இல்லை செய்யும் பாபிஷ்ட$_2$ர்களான அத்வைதிகளுக்கும், நிலா, தென்றல், சந்தனம்போலே உத்தேச்யர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் வாசியறியாமை குறித்து வருந்துகிறோம்

32. ஸமீக்ஷணம் பாரா 5-ல் "குற்றங்குறைகளைக் காட்டும்போது கண்சிவப்பாரே மலிந்துள்ளார்" என்று எழுதிவிட்டு அடுத்த பாராவிலேயே தாமுமக்கோஷ்டியைச்சார்ந்தவரே என்று காட்டிக் கொண்டிருப்பது வருந்தத்தக்கது. வாயைக்கையைத் திறக்கமுடியாத "வைப்பன் மணிவிளக்கு" பாசுரவிஷயத்திலும் "நான்பிடித்த முயலுக்கு மூன்றே கால்" என்ற ரீதியிலே எழுதியிருப்பது அத்யாச்சர்யமானது. இது ஒன்றே த்ரௌபதீப்ரபத்தி விஷயத்திலும் இதே மனப்பான்மை தான் என்று நடுநிலையாளர்க்குக் காட்டித்தரும்.

33. ஸமீக்ஷணம் பாரா 6-ல் "நம்முடைய நூல்களில் **திருத்திக்கொள்ளவேண்டிய விஷயங்கள் சிலவோ பலவோ இருக்குமாகிலும்**, அச்சுப்பிழைகளை திருத்திக்கொள்ளத் தெரிவிக்கவல்லார் உளரேயன்றி, பொருட்பிழைகளைத் திருத்திக்கொள்ளத் தெரிவிக்கவல்லார் இக்காலத்தில் இல்லையென்பது நமது துணிபு" என்று எழுதுகிறார். ஒரு பிழையைக் காட்டி குருமுகமாகக் கேட்டவனல்லன் எனும் தூஷணம் செய்தார். பிழைகள் இவரோடு நம்மோடு வாசியற அனைவர்க்கும் துல்யமாதலால் பிழையிருக்கும் மாத்திரத்தால் அந்த தூஷணம் ஏறாது என்று வ்யபி$_4$சாரம காட்டினோம். தம் நூல்களிலும் **பல பிழைகள்** இருக்கக்கூடும் என்று ஒப்புக்கொண்டுவிட்டார். இதுவே நமக்குஸாத்$_4$யம். இனி, 'பொருட்பிழைகளைத் திருத்திக்கொள்ளத் தெரிவிக்கவல்லார் இக்காலத்தில் இல்லை' என்று எழுதுவது மறதியால் எழுதுவ

தாகும். பரந்தரஹஸ்ய விவாதத்தின்போது இவர் ஒரு பிழை காட்டியவுடன் எந்தையார் இவர் அப்போது எழுதிய நூலிலேயே இரண்டு பிழைகளைக் காட்டியதையும், அதைப் பற்றி வாயைக் கையைத் திறக்கமுடியாமையாலே வாளா விருந்ததையும் இப்போது மறந்துவிட்டார். 'அவர் இக் காலத்தில் இல்லையே!' எனலாம். அந்தப்பரந்த ரஹஸ்ய விவாதத்தின்போதே ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்ரீ உ. வே. ஆழ்வாரய் யங்கார் ஸ்வாமி, தம் நூலில் ஒரு பொருட்பிழையைக காட்டி யதையும், அதை உடனே பெருந்தன்மையோடு திருத்திக் கொண்டதையும் இவரே எழுதியிருப்பதையும், அந்த ஸ்வாமி இக்காலத்திலும் எழுந்தருளியிருபபதையும் மறந்துவிட்டா ரந்தோ! 'மஹாவிஷ்ணுஸாம்ராஜ்யம்' என்னும் தம் நூலில் ஸதவாதிகுணங்கள் ஸ்வரூபகுணமேயொழிய தேஹத்தின் குணமன்று என்று இவர் எழுதியபோது, அதன் தவறை எடுத்துக்காட்டி ஸதவாதிகுணங்கள் உடலின் குணமே யொழிய ஸ்வரூபததின் குணமன்று என்று காட்டி நாம் எழுதிய கடிததத்தை இவர் மறுக்கக்கூடுமானாலும், அப்பிழை இன்றும் அந்நூலில ஏறிக்கிடப்பதை இவரால மறுக்க முடியாதே! பல வருஷங்களுக்கு முன் அஸ்மத்தாதபாதர்கள் இவருடைய ஐதிஹ்யநிர்வாஹரத்னமாலையில் சில பிழைகளை எடுத்துக்காட்டியபோது, "அடியேன் இவ்விஷயங்களில் த்$_3$ருட$_4$பூர்வச்ருதன்" என்று இவர் எழுதியது முண்டு. இனி 'உன்னுடைய லேக$_2$ங்களில் நான் பிழைகாட்டினதில்லையா?' என்பர். சில பிழைகளை (பெரும்பாலும் சொற்பிழைகள்) காட்டினமையுண்டு. அதை உடனுக்குடன் நாம் ஒப்புக் கொண்டு க்ருதஜ்ஞதாநுஸந்தானம் செய்திருக்கிறோம். அப் பெருமை இவர்க்குக் கிடையாது. பிழைகள் என்பது நம் அனைவர்க்கும் ஸஹஜமானது. அதை எவர் எடுத்துக்காட்டி னாலும், பிழையென்று நெஞ்சறியத்தேரனறினல் ஒப்புக் கொண்டு திருத்திக்கொள்வதே பெருந்தன்மை.

34. "வைப்பன் மணிவிளக்கு" [நான்-திருவ-46] பாசுரப்பொருளில் ஸமீக்ஷணகாரர் இப்பெருந்தன்மையைக் காட்டமறுப்பது மிகவும் வருந்தத்தக்கது. மாமுனிகளின் திருவடியான அப்பிள்ளை எழுதிய பொருளுக்கு நேர் முரணான ஒரு பொருளை இவர் எழுதியிருப்பது மாமுனிகளின் திரு வுள்ளத்துக்கு மிகவும் அருந்துதமாயிருக்கும். "**புறம்புள்ள**

வேடர்'' "திருமலையிலே வர்த்திக்கும் குறவர்'' என்று பெரியவாச்சான்பிள்ளை இட்டிருக்கும் விசேஷணங்கள் அப்பிள்ளை வெளிப்படையாகக்காட்டிய பொருளே ஆவருமுகந்தது என்று காட்டுகின்றன. இதை மாற்றப் பாடத்தைத் திருத்துவதால் பயனில்லை. "திருமலையப்பன் பக்கலிலே அன்புள்ள ஒரு களிற்றிற்குத் திருமலையிலேயுள்ள வேடரும் குறவரும் தீங்கு செய்கின்றார்கள்; அந்த வேங்கடத்தை நாடெல்லாம் வளைத்தாடுவது நல்லது'' என்னும் சுவையற்ற பொருளை ஆழ்வார் ஒருகாலும் திருவுள்ளம்பற்றியிருக்க மாட்டார். இப்பொருள் இரண்டு வியாக்கியானங்களுக்கும் விருத்தம் என்பது வெளிப்படை. பரதாழ்வான் மீது குஹனும் பரத்வாஜரும் அதிசங்கை பண்ணினாற்போலே யானையின்மீது வேடரும் குறவரும் அதிசங்கை பண்ணினார்கள் என்று எழுதுவதற்குப் பாசுரத்திலோ. வியாக்கியானங்களிலோ சிறிதும் இடமில்லை இப்பொருள் அப்பிள்ளை வியாக்கியானத்திற்கு நேரே விருத்தம் என்பதையும், பெரியவாச்சான்பிள்ளை "புறம்புள்ள வேடர்—திருமலையிலே வர்த்திக்கும் குறவர்'' என்று வ்யாவர்த்தக விசேஷணமிட்டிருப்பதையும் பார்த்தாவது தீபிகையுரையைத் திருத்திக்கொள்ளவேணும். "இவ்வுரையில் திருத்தங்கள் செய்ய வேண்டியவற்றை அறிவிற்சிறந்த அன்பர் அறிவித்தருள்வரேல் * தலையல்லால் கைம்மாறிலேன். மறுபதிப்பில் திருத்தவும் பெறும்'' என்று முப்பத்துநான்கு வருடங்களுக்கு முன் எழுதிவைத்திருப்பது இப்போதாவது ஸ்பலமாகவேணும். இதில் பிடிவாதம் கூடாது. பெரியதிருமொழி (1-2-10) ஐதிஹ்யத்தில் காட்டபபட்ட நஞ்சீயர் நிர்வாஹத்தில் சுவைக்கேடில்லாமையாலே பெரியவாச்சான் பிள்ளை அதையும் எழுதிவைத்ததில் குறையில்லை; இவருடைய பொருளில் சுவைக்கேடே உள்ளதை நிரூபித்திருக்கிறோம்.

35. ஸமீக்ஷணம் பாரா 8-ல் காட்டப்பட்டிருக்கும் சொற்பிழை ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஸர்வஸ்வநூலின் முதல் பரிச்சேதத்திற்கு ஓரிரு நாட்களில் நாம்பதிலெழுதி ஐந்து நாட்களுக்குள் அச்சிட்டு வெளியிட நேர்ந்தமையால் இத்தகைய பிழைகள் சில நேர்ந்திருக்கக்கூடும். அவற்றில் கண் செலுத்தாமல் விஷயவிசாரம் செய்வது நலம்.

36. நல்ல விவாதங்களில் இருசாராரும் கடைப்பிடிக்க வேண்டிய நியமங்களை ஸம்ரக்ஷணம் பாரா 9-ல வெளியிட்டோம். "அறுபது ஆண்டுகட்கு மேலாக நூலகளை எழுதி நாற்றிசைகளிலும் பரபபி வருகின்ற நாம் புதிதாக ஒரு நிபந்தனையையும் தெரிந்துகொள்ளவேண்டா' என்று பாரா 9-ல எழுதுகிறூர். அறுபது ஆண்டுகளாக வைஷ்ணவர்களைக் குறித்து இவர் எழுதிவரும் விவாதநூல்கள் ஒனறிலாவது இந்த நியமங்கள் பினபறறப்படாமையாலேயே இவறறை எடுத்துக்காட்டினேம். இவ்விவாதம் ஒன்றிலாவது இவறறை இயன்றவரையில பின்பற்றிப்பெருமை பெறவேண்டுமென்று மறுபடியும் பிரார்த்திக்கிறேம்.

37. பாரா 10-ல 'பொருளற்ற சில லக்கங்களை விட்டிடுகிறேம்" என்று எழுதியிருக்கிறூா. "பொருளற்ற' எனறதற்கு பதிலாக "பதிலுரைக்கமுடியாத" என்று எழுதியிருந்தால் உண்மையாயிருநதிருக்கும்.

38. பாரா 11-ல் "த்ரௌபதி வஸ்த்ரத்திற்காகத் தான் பிரபத்திபண்ணினுள் என்பது ஸ்ரீவசனபூஷணஸித்தம்" என்று எழுதுகிறூர். "த்ரௌபதிக்குப் பலன் வஸ்தரம்" என்னும் வாக்யத்தில் நாம் நிருபித்தரீதியில் ப₂லசப்தம் நிஷ்பா₃த்யம் என்னும பொருளையுடையதேயொழிய தாம் கருதியதுபோல் நிஷ்பந்நம் என்னும் பொருளையுடையதன்று என்று ஒப்புக்கொண்டமைக்குப் பாராட்டுகிறேம். 'வஸ்த்ரத்திற்காகந தான்' என்று ஸூத்ரத்தில் அவத₄ாரணமில்லை. இவராக நுழைப்பது இது. பாரதாதி தனிச்லோகத்திலிருந்து, பறபல பலன்களை விரும்பியிருக்கிறுள் த்ரௌபதி என்று ஸித்திக்கிறது. ஆகையால் "த்ரௌபதி விரும்பிய பலன்களில் ஒன்று வஸ்த்ரம்" என்னும் இவ்வளவே பிள்ளையுலகாசிரியரின் கருத்தாக முடியும். பரமார்த்தியோடு பற்பல பலன்களை உடனே பெறவிரும்பினுள் த்ரௌபதி என்று காட்டுகிறூர் பெரியவாச்சான்பிள்ளை. வஸ்திரவிருத்தி தவிர ஒரு பலனையும் உடனே பெறவில்லை என்றும் காட்டுகிறூர். [இது பாரதத்திலிருந்தும் ஸித்திக்கிறது.] உடனே பெற்ற ஒரே பலனை வஸ்திரத்தைத் திருநாமத்தின் பலன் என்றும் கூறுகிறூர். நம்பிள்ளை பிள்ளையுலகாசிரியர் முதலான ஸகலாசார்யர்களும் இதை வலியுறுத்துகிறூர்கள். ஆகையால்

ப்ரபத்தி திருநாம ஸங்கீர்த்தனத்தால் தடைபட்டது என்று கொள்ளுவதைத் தவிர வேறு வழியில்லை.

39. பாரா 12-ல் "தவறைந்தவறென்று ஒப்புக்கொண்டு விட்டாய்; அதனால் சரியானவற்றையும் தவறென்று ஒப்புக் கொள்ளவேண்டும்" என்னும் விசித்திரவாதத்தைப் புரிகிறார். பொருத்தமில்லாத ஒரு விரஸக்கதையையும் எழுதுகிறார். விஷய விசாரம் செய்ய இயலாமையால், விரஸக் கதைகளை எழுதுவதைத்தவிர வேறுவழியில்லை.

40. பாரா 13-ல் "எந்தப் பக்கத்தைப் பார்த்தாலும், எந்தப் பங்க்தியைத் தொட்டாலும் 'அவன் தூரஸ்தனானாலும்......புடவை சுரந்தது திருநாமமிறே' என்னுமிந்த ஸ்ரீஸூக்திகளைத் திருப்பித்திருப்பி எழுதுவது தவிர வேறு ஒரு ப்ரமாண ப்ரதர்சனமோ உள்புக்க நிரூபணமோ (ஸம்ரக்ஷணத்தில்) உண்டாவென்று யாரும் பார்க்கலாம்" என்று கூசாமல் எழுதுகிறார். பிரகிருத விவாதத்திற்கு ஸம்பந்தப்பட்ட தனிச்லோக ஸ்ரீஸூக்திகள், ஈட்டுஸ்ரீஸூக்தி, ஸ்ரீவசனபூஷண ஸ்ரீஸூக்தி, மஹாபாரத ஸந்தர்ப்பங்கள், லக்ஷ்மீதந்த்ரவசனம் முதலான பல ப்ரமாணங்களைக்காட்டி சாஸ்த்ரஜ்ஞர்கள் இசைந்த முறையிலே நாம் விஷயவிசாரம் செய்திருக்க, அவற்றைத் தொடாமலே முமுக்ஷுப்படி ஸூத்ரம் ஒன்றையே நாம் திருப்பித்திருப்பி எழுதுவதாகப் பொய் எழுதுகிறார். "தன் நெஞ்சறிவது பொய்யற்க" என்னும் குறளையே நாம் மறுபடியும் எடுத்துக்காட்ட விரும்புகிறோம்.

41. பாரா 14-ல் "ப₂லப்ரத₃னும் ப₂லகரணமும் என மகுடமிட்டு எழுதப்படும் விஷயங்கள் தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்திற்குச் சால வைதே₃சிகங்கள்" என்று எழுதுகிறார். பக்தி முதலான உபாயாந்தரங்களுக்கு [நிரூபித்தால் ப₂லகரணத்வம் என்றே தேறும்] ஒருவிதமான உபாயத்வம் உண்டென்றும், அவ்வுபாயத்வம் சரணவரண ரூபமான ப்ரபத்திக்கு இல்லையென்றும் கூறுவது தென்னாசார்ய ஸம்ப்ரதாயம். இந்தஸமீக்ஷணகாரரும் ப்ரபத்திக்கு உபாயத்வமில்லை என்று நூல்கள் எழுதியிருக்கிறார். எந்த உபாயத்வம் உபாயாந்தரங்களுக்கு உண்டோ, அந்த (பலகரணத்வ ரூபமான) உபாயத்வம் சரணவரணத்திற்கு இல்லை என்பதே ஸமீக்ஷணகாரரையுள்ளிட்ட ஸகலதென்னாசார்ய ஸம்ப்ரதாய

ஸ்தர்களின் முடிவாயிருக்க முடியும். இப்படியிருக்கும்போது உபாயாந்தரங்களுக்கே ப₂லகரணத்வரூபமான உபாயத்வ மில்லையென்றால், பரபத்திக்கு அது கிம்புநர்ந்யாயஸித்த மாகையாலே, அதை நூல்களெழுதி ஸாதிக்கவேண்டிய அவசியமேயிருந்திருக்காது. ப்ரபத்திக்கு அநுபாயத்வத்தை ஸாதிக்கும் நூல்களோ ஏராளமாயிருக்கின்றன. ஆகையால இப்போது உபாயாந்தரங்களுக்குப் பலகரணத்வரூபமான உபாயத்வமில்லை என்று மீக்ஷணகாரர் கருதுவதுதான் தென்னுசார்ய ஸம்பரதாயத்திற்குச் சால வைதேசிகமாகும். உபாயாந்தரங்களுக்கு உபாயத்வமுண்டென்று காட்டு வதற்காகவே ஸ்ரீபாஷ்யகீதாபாஷ்யாதிகளை எடுத்திருக் கிறோம். அது சோசநீயமன்று. அவற்றுக்கு வழிகாட்டாமல் இவர் எழுதிப்போவதே மிகவும் சோசநீயம். ப்ரபத்தி ஸ்த லத்தில் பரமபுருஷனே ப₂லகரணமாவதாக நாம் இசைந்தே யிருப்பதால், 'ஸவஸி ந₃தே₄: கரணம்'' என்னும் தேசிக ஸ்ரீஸூக்தி நமக்கு மிகவும் அநுகுணமானதேயொழிய விருத்தமானதன்று. உபாயாந்தரங்களுக்கு உபாயத்வத்தை ஸாதிக்கும் ஆயிரக்கணக்கான தேசிக ஸ்ரீஸூக்திகள் இவர்க்கே விரோதிக்கும். அத்தகையவையேயான ஆயிரக் கணக்கான தென்னுசார்ய ஸ்ரீஸூக்திகளும் இவர்க்கு விரோதிக்கும். த்ரௌபதீ ப்ரபத்தி விசாரத்தைவிட இது மிகவும் முக்கியமான விசாரம்.

42. பாரா 15-ல் '''ப்ரபத்தியினுல் (வஸ்திர விருத்தி யைப்)பெறவில்லை, நாமஸங்கீர்த்தனத்தினுல்தான் பெற்ருள்; ப்ரபத்தி பழுதாயொழிந்தது' என்று ஓராசாரியர் ஒரு மூலையில் ஒருவரி எழுதியிருந்தாலும் எடுத்துக்காட்டி விட்டால் சாந்திச் சாந்திச் சாநதி:'' என்று எழுதுகிருர். ப்ரபத்தி பழுதாயொழிந்ததாக நாம் கூறவில்லையாகையாலே, எந்த ஆசார்யரும் அப்படிக கூறியிருப்பதாகக் காட்ட வேண்டிய அவசியம் நமக்கில்லை. ப்ரபத்தி பின்பு பலனளித்த தாக நாம் கூறுகிறோம். பெரியவாச்சான்பிள்ளை தனிச் லோகத்தில் அப்படியே உபபாதித்திருக்கிருர். திரௌபதி திருநாமஞ்சொன்னுள் என்றும் அந்த நாமஸங்கீர்த்தனத் தால்தான் வஸ்திரவிருத்தி பெற்ருள் என்றும் ஓராசாரியர் ஒரு மூலையிலல்ல, பல ஆசார்யர்கள் பலவிடங்களில் உத் கோஷித்திருக்கிருர்கள். அவையாவன:— (1) இவள் விரும்

பிய மற்ற எல்லாப் பலன்களையும் ப்ரபத்திக்குப் பலனாகப் பிறகு கொடுத்தான் என்று நிரூபிக்கும் பெரியவாச்சான் பிள்ளை உடனே கிடைத்த பலனை வஸ்திரவிருத்தியைமாத்திரம் பொறுக்கியெடுத்து "இவளுக்குப் புடவை சுரக்கும் திருநாமமிருக்கும்படி" என்று அருளிச்செய்தார். (2) தத்வநிஷ்கர்ஷபரமான முமுக்ஷுப்படியிலே "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது **திருநாமமிறே**" என்று பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்தார். (3) திருவாய்மொழி ஈட்டில் (3-3-6) "த்ரௌபதி **திருநாமஞ்சொல்ல கோவிந்தா என்றவாறே,** 'நம் பேரைச்சொன்னாள்" என்று திருவுள்ளம் புண்பட்டிருக்குமவனிறே' என்று ஒரு வாக்யம் காணப்படுகிறது. உபாயபுத்தியில்லாமல் த்ரௌபதி நாமஸங்கீர்த்தனம் செய்ததைக் குறிப்பிடுவதாகில், 'திருநாமஞ்சொல்ல' என்றோ, 'கோவிந்தா என்றவாறே' என்றோ குறிப்பிட்டால் போதுமானது. இரண்டையும் கூறியிருப்பது புநருக்தியாகும். 'திருநாமஞ் சொல்ல' என்றதற்கு 'திருநாமத்தை உபாயபுத்தியுடன் சொல்லுவதற்காக' என்று பொருள் கொண்டால்தான் புநருக்திபரிஹாரம் ஏற்படும். ஸமீக்ஷணகாரர் பக்ஷத்தில் புநருக்தி பரிஹாரம் ஏற்பட வழியில்லை. அவருடைய பக்ஷம் பூர்வாசார்யர்கள் உகந்ததாயிருந்தால், 'த்ரௌபதி ப்ரபத்திபண்ண கோவிந்தா என்றவாறே' என்றே இங்கு ஸ்ரீஸூக்தி ஏற்பட்டிருக்க வேண்டும். (4) முன் வாக்யத்தை ஒட்டியுள்ள மற்றொரு வாக்யத்தில் "நம் பேரைச் சொல்லிக் கூப்பிட்டவளுக்கு ஆற்றாமையிலே முகங்காட்டப் பெற்றிலோம்' என்று உள்ளதனையும் இழவு பட்டிருந்தானிறே" என்று உள்ளது (5) "'நம் பேர் தன் காரியம் செய்ததத்தனைபோக்கி நாம் இவளுக்கு ஒன்றும் செய்திலோமிறே' என்று இருந்தான்" என்பது அடுத்த வாக்யம். இதில் 'பேர்' என்பதை ப்ரபத்தி என்று கொண்டால் 'நாம் காரியம் செய்தோமேயொழிய. நாம் ஒன்றும் செய்யவில்லையே' என்னும் விரஸமான அர்த்தமே ஸித்திக்கிறது இதை "ரஸோக்தி" என்று திருப்பித்திருப்பி ஸர்வஸ்வகாரர் எப்படித்தான் எழுதுகிறாரோ தெரியவில்லை. (6) முன் வாக்யத்தைக் காண்பவர்கள் 'பேர்' எப்படிக் காரியம் செய்யும்? இவ்வாக்யம் வெறும் ரஸோக்தியாகத்தானே இருக்கமுடியும் என்று நினைக்கக்

கூடும் என நம்பிள்ளைதாமே ஆசங்கித்து, அவ்வாசங்கையை அடுத்த வாக்யத்தில் பரிஹரிக்கிறார்; "அஸங்க₃தமாக இரண்டு சப்தத்தைச் சேர்ததுச் சொன்னால், அது விஷஹரணத்துக்கு உடலாகாநின்றதிறே **சப்தசக்தியாலே;** அவ்வோபாதியும் போராமையிலேயிறே திருநாமம்" என்பது அவ்வாக்கியம். விஷஹரண மந்திரமானது எப்படி **சப்தசக்தியாலே** விஷத்தைப் போக்குகிறதோ, அப்படியே திருநாமமும் **சப்தசக்தியாலே** திரௌபதிக்குப் புடைவை சுரக்கலாம் என்று அத்யாதரத்துடன் நிரூபிக்கிறார் நம்பிள்ளை. ஆகையால் ஸமீக்ஷணகாரரின் ரஸோக்திவாதம் அடியற்றுப்போயிற்று. திருநாமமானது ப₂லகரணமாய்நின்று தன் சக்தியாலே புடைவையைச் சுரககச் செய்தது என்று கொண்டாலொழிய இவ்வாக்கியம் ஒட்டவே ஒட்டாது. ப்ரபத்திஸ்தலங்களில் அர்த்தமான பகவானின் சக்தியாலே காரியம் நடக்கிறதேயொழிய சப்தத்தின் சக்தியாலே காரியம் நடப்பதில்லை; அப்படி நடப்பதாக எந்த ஆசாரியரும் எழுதமாட்டார். ஆகையால் திருநாமமென்றால் ப்ரபத்தியென்று கொள்ளும் ஸர்வஸ்வகாரர்கரு இவ்வாக்யம் அடியோடு ஒட்டாது. ஈட்டில் இங்கு எடுக்கப்பட்ட நாலு வாக்யங்களில் 'பேர்' என்றும், 'திருநாமம்' என்றும் ஐந்து இடங்களில் பிரயோகித்திருக்கிறார் நம்பிள்ளை. பேரும் பிரபத்தியும் ஒன்று என்று கருதியிருந்தாராகில் ஓரிடத்திலாவது பிரபத்தி அல்லது சரணகதி முதலான சரணவரணபர்யாயமான சப்தங்களைப் பிரயோகித்திருப்பார். அப்படி அருளாததிலிருந்து நம்பிள்ளை பிரபத்தியையும் பேரையும் ஒன்றாகக் கருதவில்லை என்றும் நாமஸங்கீர்த்தனமாகிற உபாயாந்தரத்தாலேயே புடைவை சுரந்ததாகக் கருதினரென்றும் விளங்குகிறது. (7) பெரிய திருவந்தாதி (53) வியாக்கியானத்தில் "தன் பேர் சொன்னவளுககுத் திருவுள்ளத்திலே தனிசு பட்டிருக்குமாபோலே" என்று பெரியவாச்சான்பிள்ளை அருளியிருக்கிறார். இவ்வாக்யங்கள் அனைத்திலிருந்தும், சரணாகதியைச் செய்தபின்பு திரௌபதி திருநாமஸங்கீர்த்தனமாகிற உபாயாந்தரத்தையும் அனுஷ்டித்தாள் என்று நம் ஆசார்யர்கள் கருதினார்கள் என்று விளங்குகிறது. நம்முடைய ஆசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திக்கடலில் தேடினால் இத்தகைய வாக்யரத்னங்கள் மேலும் பல கிடைக்கும். இவற்றிலிருந்து நம்முடைய

ஆசார்யர்கள் பலரும் பலவிடங்களில் திரௌபதி சரணு கதியை அனுஷ்டித்ததோடன்றியில் திருநாம ஸங்கீர்த்தன மும் செய்தாள் என்றும் அத்திருநாம ஸங்கீர்த்தனத்தா லேயே வஸ்திரத்தைப்பெற்ருள் என்றும் அருளியிருக்கிருர் கள் என்று விளங்குகிறது. ஆகையால் ஸமீக்ஷணகாரர் தாம் ப்ரதிஜ்ஞை செய்தபடியே சாந்தியடைவதே நியாயமானது.

43. நாம் இவ்விஷயத்தில் உலகறியச்சில ப்ரதிஜ்ஞை களைச்செய்கிருேம். **ப்ரதிஜ்ஞை 1. வஸ்திரவிருத்தியைமாததிரம தனியே எடுத்து** ஓராசார்யராவது ஒரு மூலையிலாவது இது சரணுகதியின் பலனுகக் **கிடைத்தது** என்று எழுதியிருப்பதாக ஸமீக்ஷணகாரர் காட்டிவிட்டாராஞல் நாம் '**தோற்ருேம, தோற்ருேம், தோற்ருேம்**' என்று ஸுதர்சனத்திலேயே எழுதி, த்ரௌபதீ சரணுகதி ச்லோக விவரணத்தையும் மாறறி எழுதி மறுபதிப்பும் போடுகிருேம் [வஸ்திரவிருத்தியானது திருநாமஸங்கீர்த்தனமாகிற உபாயாந்தரத்தின் பலனுகவே கிடைத்தது என்றே ஸகலாசார்யர்களும் திருவுள்ளம் பற்றியபடியால் ஓராசார்யரும் இப்படி அருளமாட்டார்.] **ப்ரதிஜ்ஞை** 2. திரௌபதி விரும்பியதாகப் பெரியவாச்சான் பிள்ளை காட்டிய மற்ற பலன்களில் ஒன்றையாவது ஓரா சார்யராவது ஒரு மூலையிலாவது எடுத்து 'இது திருநாமத் தின் பலம்' என்று காட்டியிருப்பதாக ஸமீக்ஷணகாரர் காட்டிவிட்டாராஞலும் முதல் பிரதிஜ்ஞையில் கூறியபடியே செய்கிருேம். [மற்ற பலன்களெல்லாம் சரணுகதியின் பல னுகப் பிறகு கிடைத்ததென்றே எல்லா ஆசார்யர்களும் திருவுள்ளம் பற்றியபடியாலும், சரணுகதி பலனளிககு மிடங்களில் திருநாமம் பலனளிப்பதாக எவரும் அருளிச் செய்யமாட்டாராகையாலும் இத்தகைய பிரயோகங்களும காணக்கிடைக்காது.] **ப்ரதிஜ்ஞை** 3. சாஸ்திரங்களில் காணுமு ப்ரபத்தி ஸ்தலங்களில் ஒன்றையாவது ஓராசார்யராவது ஒரு மூலையிலாவது எடுத்து, [திருநாம விஷயத்தில் நம் பிள்ளையும் உலகாசிரியரும் காட்டியிருப்பதுபோலே] அவ் விடத்தில் ப்ரபத்தி தன் காரியத்தைச் செய்ததேயொழிய எம்பெருமான் ஒன்றும் செய்யவில்லை என்று காட்டியிருப்ப தாக ஸமீக்ஷணகாரர் காட்டிவிட்டாராஞலும் முதல் பிர திஜ்ஞையில் கூறியபடியே செய்கிருேம். [ப்ரபத்தி ஸ்த லத்தில் எம்பெருமானே பலப்ரதனுகவும்' பலகரணமாகவு

மாவதாலும், ப்ரபத்திக்குப் ப₂லகரணத்வ ரூபமான உபாயத்வம் கிடையாதாகையாலும் எந்த ஆசார்யரும் இப்படி அருளிச்செய்யமாட்டார்] இம்மூன்று பிரதிஜ்ஞைகளையும். பீஷ்மப்ரதிஜ்ஞை போலும், '' **ஸத்யம் ஸத்யம் புந:ஸத்யம** '' என்ற வியாஸருடைய பிரதிஜ்ஞைபோலும், நம்பாடுவான் பிரதிஜ்ஞைபோலும் கொள்வது. ஸமீக்ஷணகாரர் விரஸக் கதைகளையும், ஸம்பந்தமில்லாத விஷயங்களையும் எழுதுவதை விடுத்து, பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திக்கடலிலே குடைந்தாடித் தேடி நம்மை வெற்றிகொள்ள முயல்வாராக. இம்மூன்று விதமான வாக்யராசிகளில் ஒன்றையாவது ஸமீக்ஷணகாரர் காட்டினுலொழிய நம்முடைய நிர்வாஹத்தை அசைக்கமுடியாது. அவருடைய பக்ஷமும் நிலைக்காது.

44. ஸமீக்ஷணம் பாரா 15-ல் ''த்ரௌபதிக்கு மற்றும் பல கோரிக்கைகள் இருந்தால் இருக்கட்டுமே; அவை ஸ்ரீவசநபூ₄ஷணருட₄மாகவில்லையே'' என்று எழுதுகிருர். ஸ்ரீவசநபூ₄க்ஷணருட₄மாயிருந்தால்தான் பதிலுரைக்க வேண்டுமென்றும், பாரதாதி₃ தனிச்லோகாருட₄மாயிருந்தால் பதிலுரைக்கவேண்டியதில்லையென்றும் கூறமுடியாதே! பிள்ளைலோகாசார்யரே உத்தேச்யரென்றும், பெரியவாச்சான்பிள்ளை உத்தேச்யரல்லரென்றும் தென்னுசார்ய ஸம்ப்ரதாயஸ்தர் ஒருவரும் இதுவரையில் கருதியதில்லையே! உண்மையை நடுநிலை நின்று ஆராய்ந்தால், திரௌபதீ ப்ரபத்தியைப் பற்றி ப்ரஸக்தாநுப்ரஸக்தமாகப்பேசும் ஸ்ரீவசநபூஷண ஸூத்ரத்தைக்காட்டிலும், த்ரௌபதீ சரணுகதி ச்லோகத்தை விவரிக்கவென்றே இழிந்த பாரதாதி தனிச்லோக ஸ்ரீஸூக்திகளுக்கன்றே ப்ராப₃ல்யம் அதிகம். அந்த பாரதாதி தனிச்லோகத்தில் திரௌபதி பரமார்த்தியோடு பல பலன்களை உடனேபெற விரும்பினுள் என்றும், வஸ்திரவிருத்தி ஒன்றைமாத்திரம் திருநாமம் கொடுத்து விட்டதென்றும், மற்ற எல்லாப் பலன்களையும் நெடுநாள் கழித்து சரணுகதியின் பலனுக ஸர்வேச்வரன் அருளினுன் என்றும் பெரியவாச்சான்பிள்ளை தெளிவாக அருளியிருக்கும்போது ஸமீக்ஷணகாரர்க்கு வாய்திறக்க வழியேது. இப்படிப் பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகள் கண்டே₂ாக்த₃வாயிருப்பதால்தான் ஸர்வஸ்வம்

84-வது பாராவிலும்பாரதாதி தனிச்லோக ஸ்ரீஸூக்திகளுக்கு நேர்முரணாக த்ரௌபதி பல பலன்களைக் கோரவில்லையென்றும், வஸ்த்ரத்தைக்கூடக் கோரவில்லையென்றும், மான ஸம்ரக்ஷணமே அவள் விரும்பியதென்றும் எழுதுகிறார்.

45. ஸமீக்ஷணம் பாரா 16-ல் "வாசா ஶரணம் என்று சொல்லிவிடுவது மட்டுமே வாசிகப்ரபத்தி என்கிற வார்த்தை எந்த நூலிலும் நடையாடுமதன்று" என்று தொடங்கிச் சில வாக்கியங்கள் எழுதுகிறார். வாசிகப்ரபத்தி வாக்கியத்தில ஶரணோக்தியே அவசியாபேக்ஷிதமாகையாலே அந்த ஶ ர ணோ க் தி பலனளித்தது என்று கூறலாமேயொழிய, அவச்யாபேக்ஷிதமல்லாத நாமோக்தி பலனளித்தது என்று கூறலாகாது என்று நாம் காட்டியிருக்கிறோம். ரங்கநாதனின் திருமுன்பே நின்று கொண்டு ஒரு நாமத்தையும் சொல்லாமல் "உன்னை சரணமாக அடைந்தேன்" என்று ஒருவன் கூறினால் இதை வாசிகப்ரபத்தியல்ல என்று எவரும் தள்ளி விடமுடியாது. ஶரணோக்தியில்லாமல் "கோவிந்தா ரங்க நாதா" என்று எத்தனை நாமஞ்சொன்னாலும் அது ப்ரபத்தியாகாது. வாசிகப்ரபத்தி வாக்யத்தில திருநாமம் இருந்தாலுமிருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம்; திருநாமங்களிலும் இன்ன திருநாமந்தான் இருக்கவேணும் என்னும் நியமமுமில்லை. ஶரணோக்தியோவெனில் இருந்தே தீரவேண்டும். ஆ கை யா ல் வாசிகப்ரபத்தி ஸ்தலத்தில் இருந்தே தீர வேண்டிய ஶரணோக்தி பலனளித்ததாகக் கூறலாமேயொழிய இருந்தேயாகவேணுமென்னும் நிர்ப்பந்தமில்லாத ஒரு நாமோக்தி பலனளித்ததாகக் கூறுவது ஒட்டாது என்பதே நம்முடைய அசைக்கமுடியாத நிருபணம். ஆகையால் 'கோவிந்த நாமம் புடைவை சுரந்தது' என்றுள்ள ஆசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கு ஸர்வஸ்வகாரர் உரைக்கும் பொருள் கனவிலும் தேறாது. இதுவரையில் ஸமீக்ஷணநிரஸநமாயிற்று. இனி ஸர்வஸ்வநிரஸனம் தொடங்குகிறது. ஸமீக்ஷணத்தில் பாரா 16-ல் "புடைவை சுரந்தது திருநாமமிறே" என்பது பற்றிய விசாரமும், "உபமா காளிதா₃ஸஸ்ய" என்ற தலைப்புள்ள கட்டுரையுமினிவரும் ஸர்வநிரஸனத்திலேயே ஆராயப்படும்.

## ஸர்வஸ்வம் இரண்டாவது பரிச்சேதத்தின் நிரஸனம்.

46. இவ்விரண்டாமத்தியாயத்திற்கு "த்₃ரௌபதீ₃ விபது₃த்₃த₄ாரம் என்று பெயரிட்டிருக்கிறார் ஸர்வஸ்வகாரர்;

பாரா-37, 38ல் த்ரௌபதிக்கு அந்தக்காலத்தில் துச்சா ஸன துர்யோதனுதிகளால் ஏற்பட்ட விபத்து பெரிதன்று என்றும் இக்காலத்தில் நம்மைப் போன்றவர்களால விளைக் கப்பட்டிருக்கும் விபத்தே மிகமிகப் பெரிதென்றும், அந்த விபத்தைத் தான் களைவதே கண்ணன் செய்த மானஸம் ரக்ஷணத்தைக் காட்டிலும் மிகமிகச் சிறந்ததென்றும் எழுதிச்செல்கின்றார். இவ்வார்த்தைகள் பாமரர்களை மயக்கலாமேயொழிய அறிவாளிகளை மயக்கமாட்டாது. த்ரௌபதி ப்ரபத்தியைப்பற்றி நம் ஆசார்யர்கள் எவ்வித மாக ஆராய்ச்சி செய்திருக்கின்றார்கள் என்பதைச் சிறிது நாமும் ஆராய்ந்தோமானுல் இது தெளிவாக விளங்கும்.

## ஆசாரியர்களின் திருவுள்ளம்.

47. நம் ஆசார்யர்கள் "ஸங்கசக்ரக₃த₃ாபாணே" என்னும் த்ரௌபதீசரணுகதிச்லோகத்தை அணு அணுவாக ஆராய்ச்சி செய்திருக்கினுர்கள். நம்முடைய பாக்கியவசத் தாலே பெரியவாச்சான்பிள்ளையின வியாக்கியானம் இன்றும் கிடைத்திருக்கிறது. "ஸங்கசகரகதாபாணே" என்று அவள் கதறியது "நீ சங்கசக்கர கதைகளை தரித்திருப்பது அழகுக் காகவல்லவே; துர்யோதனதுச்சாஸனுதியரைப் போன்ற துஷ்டர்களை நிரஸிக்கத்தானே நீ ஆயுதங்களைத் தரித்திருக் கிறுய்" என்னும் கருத்திலேயே ஆகவேண்டுமாகையாலே கண்ணன் வந்து சத்ருஸம்ஹாரத்தை உடனே செய்ய வேண்டும் என்று விரும்பினுள் என்று கண்டறிந்தார்கள். பல பதங்களாலே அவனை ஸம்போதனம் செய்கையாலும், "புண்டரீகாக்ஷ" என்று விளிக்கையாலும் கஜேந்திராழ் வானுக்கு வந்தது போலே உடனே நேரே வரவேண்டு மென்று இவள் விரும்பினுள் என்றும், வழிபறிக்கும் தேசத்திலே தாய்முகத்திலே விழிக்க ஆசைப்படுவாரைப் போலே தாயாயளிக்கின்ற தண்டாமரைக் கண்ணனைக் காணவும், 'அஞ்சாதே' என்னும் அவன் வார்த்தையைக் கேட்கவும் விரும்பினுள் என்றும் முடிவுகட்டினுர்கள். "த்வாரகாநிலய" என்று "நீ துவாரகையில் நிலையுடையவ னுய் அரசுசெலுத்திக்கொண்டிருக்கையில் நாங்கள் அரசி ழந்து தவிக்கலாமோ" என்று கதறுகையாலே, ராஜ்யப்ராப் தியையும் அவன் உடனே வந்து செய்துதரவேண்டுமென்று த்ரௌபதி விரும்பினுளென்று கண்டார்கள். "அச்யுத"

என்று "நீ அடியவரை நெகிழவிடாதவனாயிருக்க என் உடை நெகிழலாமோ" என்று கூப்பிடுகையாலே வஸ்திர வர்த்தனத்தையும் திரௌபதியானவள் பிரபத்திக்குப் பல னாக விரும்பினாள் என்று கண்டறிந்தார்கள். "கே₃ஶவ" என்று "என் குழல்கள் தூர்த்தனாலே அலைப்புண்டிருக்க, நீ குழலிருண்டு சுருண்டேறிய குஞ்சிக்கோவிந்தனாய், மயிர் பேணியிருப்பதென்" என்று ஓலமிடுகையாலே இவள் மயிர் முடிப்பித்தலையும் தன் சரணாகதிச்சுப் பலனாக விரும்பினா ளென்று உய்த்துணர்ந்தார்கள். "புண்டரீகாக்ஷ" என்று "நீ தாமரைக்கண்ணனாய் கண்மலர்ந்திருக்கும் போது நான் கண் கலங்கிக் கமலக்கண்ணில் நீர் சோரவிருக்கலாமோ" என்னும் கருத்தைத் தெரிவிக்கையாலே தன் கண்ணீரை அவன் உடனே நேரே வந்து துடைக்கவேண்டும் என்று அவள் கருதினாள் என்று முடிவு கட்டினார்கள் ஆனால், மஹாபார தத்தைப் பார்க்கும்போது இப்பலன்களில் புடைவை சுரந்த தொன்று மாத்திரம் சரணாகதிசெய்த **சில கணங்களுக்குப் பிறகு** கிடைத்திருப்பதையும், மற்ற பலன்களில் ஒன்றாவது கிடைக்கவில்லையென்பதையும் கண்டார்கள். திரௌபதி பரமார்த்தியோடு பல பலன்களை உடனே பெற ஆர்த்தப்ர பத்தி செய்திருக்கையில், புடைவை சுரந்தது ஒன்றைத்தவிர மற்ற எல்லாப்பலன்களும் ஏன் உடனே கிடைக்கவில்லை என்று ஆராய்ந்தார்கள். **"கோவிந்தேதி யதா₃க்ரந்த₃த் க்ருஷ்ணா மாம் தூ₃ரவாஸிநம்"** [பார-உத் 47-39] என்னும் கண்ணனின் வாக்கியம் இதற்குக் காரணத்தைக் காட்டு வதை உணர்ந்தார்கள். "திரௌபதி சரணமடைந்தது யாதொன்றுண்டோ" என்று சொல்லவேண்டியிருக்க, "திரௌபதி **கோவிந்தா என்று கதறியது** யாதொன் றுண்டோ" என்று கூறியிருப்பதிலிருந்து, திரௌபதியான வள் சரணாகதி செய்ததற்கும், புடைவை சுரந்ததற்கும் இடையிலேயுள்ள சில கணங்களிலே, கணத்துக்குக்கணம் பெருகிவரும் ஆபத்தாலே அறிவு கலங்கி, '*அவனிலும் விஞ்சிய பெருமையையுடைய அவனுடைய கோவிந்தநாமமா வது நம்முடைய மானத்தையாவது காப்பாற்றாதா' என்னும்

* "ருணமேதத் தவ கோ₃விந்த₃ நாமத்வத்தஸ் ஸதா₃தி₄கம்" என்னும் ப்ரமாணத்தை கோவிந்தநாம வ்யாக்யானத்தில் பெரியவாச்சான்பிள்ளை உதாஹரித்திருப்பது காணத்தக்கது.

நினைவுடன் கோவிந்தநாமத்தை உபாயபுத்தியுடன் உச்சரித்துவிட்டாள்; அதுவே எம்பெருமானுடைய திருவுள்ளத்தை மிகவும் புண்படுத்திற்று எனக் கண்டறிந்தார்கள். இப்படி உபாயாந்த ஸம்ஸர்க்கம் ஏற்பட்டுவிட்டதாகையாலே, சாஸ்த்ரபரதந்த்ரனான ஸர்வேச்வரன் ப்ரபத்திக்குப் பலனாக அவள் உடனே விரும்பிய பலன்களை உடனே கொடுக்கமுடியாதவனானான். திருநாமத்துக்குப் பலனாக விரும்பிய வஸ்த்ரவிருத்தியை உடனே கொடுத்தான் என்று முடிவுகட்டினார்கள். இவ்வுபாயாந்தரஸம்ஸர்க்கமும் பரமாபத்துக்காலத்திலே ஏற்பட்டதாகையாலே தேஜாஷாவஹமன்றென்றும், கண்ணன் இதை தோஷமாகக் கொள்ளவில்லையென்றும் கண்டறிந்தார்கள். "நம்மையே நம்பியிருந்த திரௌபதியை நாம் காலத்திலே ரக்ஷிக்காமல் தாமதித்துவிட்டோமே, அவ்வாபத்துக் காலத்திலும் அவள் ஒரு க்ஷுத்ர புருஷனைப்பற்றாமல் நம் திருநாமத்தைத் தானே பற்றினாள்; நாம் பெற்றிருக்கவேண்டிய பெருமையை நம திருநாமமன்றோ பெற்றுப்போய்விட்டது. 'கோவிந்தா' என்று பேரைச் சொன்னதையே பற்றாசாகக்கொண்டு நேரே முகங்காட்டியிருக்கலாமே: அதையும் செய்யாமல விட்டுவிட்டேனே; நம்முடைய திருநாமமன்றோ அவளுடைய மானத்தைக் காத்தது; நான் ஒன்றும செய்யப்பெற்றிலேனே; திருநாமத்தை அவள் உபாயமாக நினைக்கும்படி பார்த்திருந்ததும் உண்மையில நம் குற்றமேயன்றோ" என்று பலவாறாகத் தன்னைநிந்தித்தும், திரௌபதியைக் கொண்டாடியும் "கோவிந்தேதி" எனனும் சுலோகத்தில புண்பட்டிருக்கிறான் கண்ணன் என்று ஸாக்ஷாத்கரித்தார்கள். இந்த உபாயாந்தரஸம்ஸர்க்கத்திற்கும், அடுத்துவரும் ஒரு ஸர்க்கத்தில் ஆபத்தாலே மறுபடியும் அறிவுகலங்கி பீ$_4$ஷ்மாதிகளை அவள் ரக்ஷகராகக் கூப்பிட்டதற்கும், "த்$_3$ரௌபத்$_3$யா ஸஹிதா:" என்றவிடத்திலே கண்ணனே அவளுக்கு ப்ராயச்சித்தத்தை அனுஷ்டிப்பித்து, அவளுடைய பிரபத்தியின் மற்ற பலன்களைப் பின்பு கொடுத்தான் என்றும் அறுதியிட்டார்கள். இப்படியெல்லாம் நம்முடைய ஆசார்யர்கள் ஆராய்ச்சி செய்து முடிவுகட்டியிருக்கிறார்களென்பதை பாரதாதி தனிச்லோக ஸ்ரீஸூக்திகள், ஈடு (3—3—6) ஸ்ரீஸூக்திகள், முமுக்ஷுப்படி ஸூத்ரம் முதலானவை

தெளிவாகக் காட்டுகின்றன. அப்படியிருக்கும்போது நம்மை துச்சாஸனதுல்யரென்று ஸர்வஸ்வகாரர் எழுதுவது நமது ஆசார்யர்களையும் அப்படி எழுதுவதேயாகும்.

48. த்ரௌபதிக்கு ஆபத்துக்காலத்திலே ஏற்பட்டுப் பின் கழிந்த உபாயாந்தர ஸம்ஸர்க்கத்தைக் கண்ணன் ஒருகுறையாக நினைக்கவில்லை. அதனாலேயே நம் ஆசார்யர்களும் அதை ஒரு குறையாக எவ்விடத்திலும் அருளவில்லை. 'திருநாமஞ்சொல்ல கோவிந்தா என்றாள்' 'பேர் சொன்னாள்'. 'திருநாமம் புடைவை சுரந்தது' என்று அதைகுணமாகக் கொண்டார்களேயொழிய 'திருநாமஸங்கீர்த்தனமாகிற உபாயாந்தர ஸம்பந்தம் திரௌபதிக்கு ஏற்பட்டது' என்று அதை ஒரு தோஷமாக ஓரிடத்திலும் எழுதிவைக்கவில்லை. இப்படிக் கண்ணனும், நம் பூர்வாசார்யர்களும் ஒரு தோஷமாகக் கருதாததை ஸர்வஸ்வகாரர் பெருந்தோஷமாகக் கருதி, அந்த 'தோஷாரோபணத்தைப்' போக்கி திரௌபதியைக் 'காப்பாற்ற' முன் வந்திருப்பது வியப்பினும் வியப்பேயாகும்.

49. லக்ஷ்மீதந்த்ரத்தில் ப்ரபத்தி நிஷ்டைக்குத் தடையாகக் கூறப்பட்ட உபாயஸம்பந்தம் இருவகைப்பட்டதாகும். திருநாமம் முதலான அசேதனங்களை உபாயமாகப் பற்றுவது ஒருவகை. இது ஆகிஞ்சந்யத்துக்கு ஹானியை விளைக்கும். வேறொரு சேதனரை ரக்ஷகராகப் பற்றுவது மற்றொரு வகையாகும். இது அநந்யகதித்வத்துக்கு ஹானியை விளைக்கும். "கோ₃விந்தே₃தி" என்னும் பகவத் ஸூக்தியையும், அதை அடியொற்றிய ஆசார்ய ஸ்ரீஸூக்திகளையும் அடியொற்றி திரௌபதிக்கு நாம் உபாயாந்தரஸம்பந்தம் கூறியிருப்பதைக் கண்டு பேராபத்து வந்துவிட்டதாகக் கூச்சலிடும் ஸர்வஸ்வகாரர், சரணாகதியனுஷ்டித்த சிறிது நேரத்திற்கெல்லாமே வியாஸர் திருநாமஸம்பந்தத்தைக் காட்டிலும் தண்ணியதாய், அநந்ய க₃தித்வத்துக்கு ஹானியை விளைக்கும் உபாயஸம்பந்தத்தை திரௌபதிக்குக் கூறியிருப்பதைக் காணத்தவறிவிட்டார். மஹாபாரதம் ஸப₄ாபர்வம் (கிருஷ்ணாசார்யர் பதிப்பு) தொண்ணூறாவது அத்தியாயத்தில் சரணாகதியனுஷ்டித்துத் திருநாம ஸங்கீர்த்தனத்தாலே புடைவையைப் பெற்றபின்பு, தொண்ணூற்றிரண்டாவது அத்தியாயத்தில் கர்ணனாலும், சகுனியாலும்

தூண்டப்பட்டு த்ரௌபதியை துச்சாஸனன் மறுபடியும் இழுக்க ஆரம்பித்தவுடன்

'பரித்ராயஸ்வ மாம் பீ₄ஷ்ம த்₃ரோண த்₃ரௌணே தத₂ா க்ருப।
பரித்ராயஸ்வ விது₃ர த₄ாமிஷ்டே₂ா த₄ர்மவத்ஸல ||
த்₄ருதராஷ்ட்ர மஹாராஜ பரித்ராயஸ்வ வை ஸ்நுஷாம்।
க₃ாந்த₄ாரி தவம மஹாப₄ாகே₃ ஸர்வஜ்ஞே ஸர்வத₃ர்ஶிநி || ..
ந வை பாண்டு₃ர் நரபதிர் ந த₄ர்மோ ந ச தே₃வராட்।
ந வாயுர் நாச்விநௌ வாபி பரித்ராயந்தி வை ஸ்நுஷாம ||''
[பார-ஸபா 92-44...49]

[பீஷ்மரே! என்னைக் காப்பாற்றுவீர்! த்ரோணரே! த்ரோண புத்ரரே! கிருபரே! என்னைக் காப்பாற்றுவீர்! தர்மவத்ஸல ரான விதுரரே! தாமிஷ்டரான நீர் என்னை ரக்ஷிப்பீராக! மஹா ராஜரான திருதராஷ்ட்ரரே! மருமட்டுப்பெண்ணான என்னை ரக்ஷித்தருளுக! மஹாபாககியவதியாய் எல்லாமறிந்த வளாய், எல்லாவற்றையும காண்பவளான காந்தாரியே! நீ என்னைக் காப்பாற்றுவாய்! (தேவராகிவிட்ட) பாண்டு மகாராஜரும், (தர்மபுத்ரரைப்பிறப்பித்த) யமனும், (அர்ஜுனனைப பிறப்பித்த) இந்திரனும், (பீமனைப்பிறபபித்த) வாயுவும், (நகுல ஸஹதேவர்களைப் பிறப்பித்த) அச்வினிகளும் மருமட்டுபபெண்ணான என்னைக் காப்பாற்றவில்லையே.] என்று கதறியிருககிறாள் திரௌபதி. ''ரக்ஷமாம ஶரணாக₃தாம்'' என்று எந்த துச்சாஸநாதியரிடமிருந்து ரக்ஷையைக் கண்ணனிடம் பிரார்த்தித்தாளோ, அதே துச்சாஸனாதி யரிடமிருந்து ரக்ஷையை திருதராஷ்ட்ரன், காந்தாரி முதலான க்ஷாத்ரபுருஷர்களிடமும பிரார்த்தித்திருக்கிறாள் என்று வியாஸர் காட்டிவிட்டார். இனி, 'துச்சாஸனாதியரிலும் கொடியவர்' என்று வியாஸரை வசைபாடுவது தவிர வேறு வழியில்லை ஸர்வஸ்வகாரர்க்கு. உண்மையில், பரமாபத்துக் காலங்களில் இத்தகைய உபாயாந்தரஸம்பந்தங்கள் பெரிய தோஷமன்று என்பதை இப்போதாவது ஸர்வஸ்வகாரர் உணர்ந்திருபபார் என்று எண்ணுகிறோம்.

50. ''கே₃ாவிந்தே₃தி'' என்னும் மஹாபாரத ஸூக்தி யையும், ஆசார்யஸூக்திகளையும் அடியொற்றி நாம் திரௌ பதிககுத் திருநாமஸங்கீர்த்தனமாகிற உபாயாந்தர ஸம் பந்தத்தைக் கூறி, ''த்₃ரௌபத்₃யா ஸஹிதா:'' என்றவிடத்

திலே அதற்குப் பிராயச்சித்த மநுஷ்டிக்கப் பட்டமையை யும் உரைத்தோம். அதை மறுத்துவிட்டார் ஸர்வஸ்வகாரர். இப்போது பீ₄ஷ்மாதி₃களைப் பற்றுவதாகிற உபாயாந்தர ஸம்பந்தத்தை வியாஸர் வெளிப்படையாகவே காட்டியிருப்ப தைக்காட்டினேம். பிரபத்தியின் மற்ற பலன்கள் நெடுநாள் கழித்தே கிடைத்தன என்று கூறும் ஸர்வஸ்வகாரர் இந்த உபாயாந்தர ஸம்பந்தத்துக்கு திரௌபதி பிராயச்சித்த மநுஷடித்ததைக் காட்டியே தீரவேணும். அதற்கு, "தரௌபதயா ஸஹிதா:" என்றவிடத்தைத் தவிர வேறிட மில்லை. ஆகையால், ஸர்வஸ்வகாரரும் நம் வழிக்கு வந்தே தீரவேண்டும் என்று காட்டப்பட்டதாயிற்று.

51. பாரா 39 முதல் 46 முடிய சுவைமிக்க விவாதங் களுக்குச் சில உதாஹரணங்களைக் காட்டுவதாகத் தொடங்கிச் சுவை சிறிதுமற்ற சில கற்பனை விவாதங் களைக் காட்டிப் பத்ரபூரணம் செய்திருக்கிறார். பாரா-47 ல் முற்கூறிய விவாதங்களுக்கு ப்ரஸக்தியுண்டென்றும், த்ரௌபதியின் வஸ்த்ரலாபத்தைப் பற்றிய விசாரத்திற்கு ப்ரஸக்தியே இல்லையென்றும் எழுதுகிறார். த்ரௌபதீ ப்ர பத்தியைப்பற்றிய விவாதம் இன்று நேற்று தொடங்கிய தன்று. பற்பல வருஷங்களுக்கு முன்பே தொடங்கியது. த்ரௌபதீப்ரபத்தியானது திருநாம ஸங்கீர்த்தனமாகிற உபாயாந்தரத்தாலே தடைபட்டது என்னும் நிர்வாஹம் நெடுநாட்களாக ஸம்ப்ரதாய ஸித்தமான அர்த்தமாக உப தேசிக்கப்பட்டு வந்தது. இதைச் சதுச்சாஸ்த்ர வித்வா ஞன திருமழிசை அண்ணாவப்பங்கார் ஸ்வாமி முதலான மஹனீயர்கள் ஏடுபடுத்தி வைத்திருக்கிறார்கள். சுமார் நூறு வருஷத்துக்குள்ளிருந்த எம்பார் ஜீயர் ஸ்வாமியே இப்பக்ஷத்தைக் கண்டித்து முதன்முதலாக விவாதத்தைக் கிளப்பினார். ஏழெட்டு வருஷங்களுக்கு முன் அண்ணாவப் பங்கார் ஸ்வாமி நிர்வாஹத்தையும். எம்பார் ஜீயர் ஸ்வாமி நிர்வாஹத்தையும் தழுவி, பரமவைதிகரான ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு ஸ்வாமி ஒரு கட்டுரை எழுதியவுடன் ஸர்வஸ்வகாரர் எந்தப் பூர்வாசார்யராலும், வித்வானாலும் அதுவரையில் ஆதரிக்கப்படாத 'ப்ரபத்தியும் திருநாமமும் ஒன்று' என்னும் பக்ஷத்தைப் புதிதாகக் கிளப்பி, ஆசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கு அபார்த்தங்களூ செய்தார். ஆசார்ய

ஸ்ரீஸூக்திகளுக்குச் செய்யப்பட்ட இவ்வபார்த்தங்களைப் பொருத பரமபுருஷன் வாளாவிருந்த அடியேனைத் தூண்டி விட்டு, திருமழிசை அண்ணுவைப்பங்கார் ஸ்வாமியால் ஏடு படுத்தப்பட்ட நிர்வாஹத்தைப் போஷித்து எழுதச்செய்து நெடுநாளாக ஸம்ப்ரதாய ஸித்தமாயிருந்த அர்த்தத்தை நிலைநாட்டிப் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளைஸம்ரக்ஷித்து விட்டான். இப்படியிருக்கும்போது த்ரௌபதிக்கு வஸ்த்ர லாபம் ஏற்பட்டது பற்றிய விசாரத்திற்கு ப்ரஸக்தியே கிடையாதென்றும், தாம் எழுதுவதே குருமுகமாகக் கேட்ட ப்ராமாணிகார்த்தமென்றும் மற்றவர்கள் குருமுக மாகக்கேட்டவரல்லரென்றும், ப்ராமாணிகார்த்தங்களை மாறு படுத்தி ஆர்ஜவமில்லாமல எழுதுபவரென்றும் ஆத்மச்லாகை$_4$ யும் பரநிந்தனமும் செய்துபோருவதால் ஒரு பயனுமில்லை.

52. பாரா 47 முதல் 52 முடியவும், 54-வது பாரா விலும், நம்முடைய ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகளிலும், அவற்றின் வியாக்கியானங்களிலும் முமுக்ஷுப்படி முதலான வற்றிலும் பற்பல ரஸோக்திகள் உள்ளன என்றும், அவற்றில் கேள்விகள் கேட்பது அரஸிகர்களின் கார்ய மென்றும் பொருள்பட எழுதுகிறார். ஆழ்வார்களின் பாசுரங் களிலும், அவற்றின் வியாக்கியானங்களிலும் பற்பல ரஸோக்திகள் இருப்பதை எவரும் மறுக்கவில்லை. ஆனல் அந்த ரஸோக்திகள் ஒவ்வொன்றிலிருந்தும் ஒரு ரஸமான அர்த்தம் ஸித்திக்கும். இவர் ரஸோக்திகளாகச் சொல்லும் வாக்கியங்களில், இவர் கூறியபடி பொருள்கொண்டால் முன்னுக்குப்பின் முரணனதும், விரஸமானதுமான அர்த் தங்கள் ஸித்திக்கின்றனவேயொழிய ஒரு ரஸமான அர்த்தமும் ஸித்திப்பதில்லை. உதாஹரணமாக, "நம் பேர் தன்கார்யம் செய்ததித்தனை போக்கி நாம் ஒன்றும் செய்திலோமிறே" என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தியில் இவர் கூறுவதுபோல் பேறை ப்ரபத்தியென்று கொண்டால், "நான் காரியம் செய்தேனே யொழிய நான் ஒன்றும் செய்யவில்லையே" என்னும் முன்னுக்குப்பின் முரணும், விரஸமாயிருக்கும் பொருளே தோற்றுகிறது. ஒரு ரஸமான அர்த்தமும் வெளியாகவில்லை. 'எம்பெருமான் தன் ஔதார்யஸ்வபா$_4$வத்தாலே தான் செய்தகாரியத்தை ஒரு வியாஜமான பேரின்மேலே ஏற்றிச் சொல்லுகிறன்' என்னும் ரஸமான அர்த்தம் ஸித்திக்கிறதே

என்னில்: பேரை ப்ரபத்தியென்று கொள்ளாமல், எம்பார் ஜீயர் ஸ்வாமியைப்போல் பேரை உபாயபுத்தியற்ற வெறும் பேறென்று கொண்டால், அப்போது அது ஸித்திக்கும். அப்போதும் அது கௌணப்ரயோகமாகுமேயொழிய முக்கிய ப்ரயோகமாகாது. ஸர்வஸ்வகாரர் கொள்வதுபோல் பேரை ப்ரபத்தியென்றே கொண்டால், ஶரணவரணத்திற்கு வியாஜரூபமான உபாயத்வமும் கிடையாதாகையாலே, 'ஶரணவரணம் கொடுத்ததேயொழிய நான் கொடுக்கவில்லை' என்று கூறுவதன் மூலம் கண்ணன் பொய்சொன்னான் என்றோ முன்னுக்குப்பின் முரணாகப் பேசினான் என்றோதான் ஏற்படும். ஸம்ப்ரதாய விருத்தமாக நம்பிள்ளை இப்படி ஒருகாலும் அருளியிருக்கமாட்டார். மேலும், அடுத்தவாக்கியத்தில் "அஸங்கதமான இரண்டு சப்தங்களைச் சேர்த்துச் சொன்னால் விஷஹரணத்திற்கு உடலாகாநின்றதிறே சப்த சக்தியாலே; அவ்வோபாதியும் போராமையில்லையிறே திருநாமம்" என்று நம்பிள்ளை அத்யாதரத்தோடு திருநாமமே தன் சக்தியாலே பலனளித்தது என்று திருஷ்டாந்தத்தைக் காட்டி நிரூபிப்பதிலிருந்து இவ்வாக்கியம் வெறும் ரஸோக்தியன்றென்றும். நம்பிள்ளை பேரையும் பிரபத்தியையும் ஒன்றாகக் கருதியிருக்கமுடியாதென்றும் விளங்குகிறது. ஆழ்வாராசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளில் பல ரஸோக்திகளிருக்கின்றன என்ற காரணத்தால், எல்லா ஸ்ரீஸூக்திகளையும் ரஸோக்தியாகவே கொள்ளவேண்டும் என்று விவேகிகள் எவரும் கூறமாட்டார்கள். தத்வார்த்தம் ஒன்றும் கிடைக்காவிட்டால்தான், வேறு வழியில்லாமையாலே ரஸோக்தியாகக் கொள்வார்கள். இங்கு, இந்த ஈட்டு ஸ்ரீஸூக்திகளிலும், இவற்றை அடியொற்றிய முமுக்ஷுப்படி ஸூத்ரங்களிலும் த்ரௌபதியுரைத்த திருநாமத்திற்குப் பூலகரணத்வமாகிற தத்வார்த்தம் நிரூபிக்கப்படுகிறது என்று கொள்ள வழியிருக்கும்போது, அவற்றை எதற்காக ரஸோக்தியாகக் கொள்ளவேண்டும்?

53. முமுக்ஷுப்படி ப்ரஹ்மஸூத்ரம்போன்றது. அதில் ஒவ்வொரு ஸூத்ரமும் தத்வார்த்தத்தை நிலைநிறுத்த வந்ததேயொழிய ரஸோக்திகளையும், சாடூக்திகளையும் வாரி யிறைக்கமாத்திரம் வந்ததல்ல. பாரா 47-ல் முமுக்ஷுப் படியில் ரஸோக்தியுண்டென்பதற்கு மூன்றிடங்களை

த்ருஷ்டாந்தமாக எடுக்கிறார் ஸர்வஸ்வகாரர். "த்ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திருநாமமிறே" என்றது முதலிடமாம்; இது ரஸோக்தியன்று. தத்வகதநமே என்பதை முன்பும் நிரூபித்தோம்; இனியும் நிரூபிப்போம். "பிராட்டியுமவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண் கழலாயிருக்கும்" என்றது இரண்டாவது ரஸோக்தியாம்; இதுவும் "பிராட்டியின் புருஷகாரத்வமும், எம்பெருமானுடைய உபாயத்வமும் கார்யகரமாகாவிடிலும், இத்திருவடிகள் தம் வைலக்ஷண்யத்தாலே துவக்கி இவனைப் பிராட்டியை முன்னிட்டு எம்பெருமானைப் பற்றச்செய்து கார்யம் செய்விக்கும்" என்று கூறுவதன்மூலம் திருவடிகளின் மூலகரணத்வம கிற தத்துவத்தை உணர்த்துகின்றதாகையால், வெறும் ரஸோக்தியன்று. "ணிச்சாலே நானும் வேண்டா நீயும் வேண்டா; அவை தன்னடையே விட்டுப் போங்காண் என்கிறான்" என்றது மூன்றாவது ரஸோக்தியாம்; இந்த ஸூத்ரத்திற்கு "நானும் இதுக்கு (பாப விமோசனத்துக்கு) ஒரு யத்னம் பண்ணவேண்டா; நீயும் இதுக்கு ப்ரார்த்திக்கவேண்டா; நீ என்னை ஆச்ரயித்த ராஜகுல மாஹாத்ம்யத்தாலே உன்னைக்கண்டு தாமே பயப்பட்டு, 'காணே ஒருங்கிற்றுக் கண்டிலமால் என்கிறபடியே போன வழி தெரியாதபடி தன்னடையே விட்டுப்போங்காண் என்று அருளிச்செய்தான் என்கை' என்று மாமுனிகள் வியாக்கியானம் செய்கையாலும், அடுத்த ஸூத்ரத்திலும், அதன் வியாக்கியானத்திலும் ஈச்வரநிக்ரஹம் அநுக்ரஹமாக மாறும்போது பாபம் தானேயழிகிறது என்று இதை விவரிக்கையாலும், இந்த ஸூத்ரமும் "பகவானுடைய தனிப்பிரயத்தினத்தையும், ஜீவனுடைய பிரார்த்தனையையும் எதிர்பாராமல் பாபங்கள் தாமே அழிகின்றன" என்னும் தத்வார்த்தத்தையே கூறுகின்றதாகையாலே வெறும் ரஸோக்தியாக ஒரு ஸூத்ரமும் இல்லை என்றதாயிற்று.

54. பாரா 53-லும், ஸமீக்ஷணம் 16-வது பாராவிலும், "உபமாகாளிதாஸஸ்ய" என்னும் வியாஸத்திலும் முமுக்ஷுப்படி ஸூத்ரங்களைப்பற்றி எழுதியிருப்பதை ஆராய்வோம். "வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ" என்று காளிதாஸன் சொல்லியிருக்கையாலே, வாசகமும், வாச்யமும் ஒன்றோடொன்று என்றும் கூடியிருப்பவையென்றும்,

அதனாலேயே வாசகம்கிட்டிநின்று உதவியபோது 'வாச்யனான எம்பெருமான் தூரஸ்தனாயிருந்தான் என்று கூறுவதற்கு முக்யார்த்தம் கொள்ளமுடியாதென்றும், அது (பொருளற்ற?) சாடூக்தியே என்றும்' எழுதுகிறார். எல்லாப்பொருள்களோடும் எப்போதும் பகவத்ஸ்வரூபம் கூடியிருப்பதேயல்லாது, ஒருபோதும் விலகியிருப்பதன்று. திரௌபதிக்கு ஆபத்தில் புடைவை சுரந்தபோது பகவத்ஸ்வரூபம் தூரப்போய்விட்டது; திருநாமம் தான் கிட்டநின்று உதவிற்று என்று எவரும் கருதவுமில்லை. எழுதவுமில்லை. திரௌபதியானவள் க்ருஷ்ணவிக்ரஹவிசிஷ்டனான பரமபுருஷன் நேரே எழுந்தருளி வஸ்திரத்தைப் பலகரணமாயிருந்து அளிக்க வேண்டும் என விரும்பினாள். அந்த விக்ரஹவிசிஷ்டனான பகவான் தான் நேரே வந்து பலகரணமாயிருந்து வஸ்திரத்தை அளிக்காமல் தூரஸ்தனாயிருந்து விட்டான்; திருநாமம் இவள் நாவினுள் நின்று ப₂லகரணமாயிருந்து வஸ்திரத்தை அளித்தது'' என்பதே அந்த ஸூக்தத்தின் பொருளாகும். ஆகையால் இது பொருளற்ற சாடூக்தியல்ல.

55. ''ப்ரப₄ாவத்ப்ரப₄ாவம் போலன்று ப்ரப₄ாப்ரப₄ாவம்; ப்ரப₄ாவான ஆகாசஸ்தனாயிருந்தாலும் ப்ரபை₄ நம்முடைய க்₃ருஹாங்கணத்திலிருந்து வெளிச்சம் தரும்; புஷ்பப்ரப₄ாவம் போலன்று பரிமளப்ரப₄ாவம்; புஷ்பம் பரோக்ஷமாயிருந்தாலும் பரிமளம் ப்ரத்யக்ஷமாயிருந்து கமழும். பி₄ஷக்கின் ப்ரப₄ாவம் போலன்று பே₄ஷஜத்தின் ப்ரப₄ாவம்; அவன் வாராதேயிருந்தாலும் இது வந்து காரியம் செய்யும்''. முதலான லோகோக்திகளில் ப்ரபை₄க்கும், பரிமளத்துக்கும், மருந்துக்கும், ப்ரப₄ாவானையும், புஷ்பத்தையும், வைத்தியனையுங்காட்டிலும் கூறப்படும் சிறப்பு மெய்யேயொழியப் பொய்யல்ல. ஆயினும், ப்ரபை₄யின் பெருமை ப்ரபாவானால் ஏற்படுவது என்பதையும் அவன் பெருமையிலேயே பர்யவஸிக்கும் என்பதையும், பரிமளத்தின் பெருமை புஷ்பத்தால் ஏற்படுவதென்பதையும், அதன் பெருமையிலேயே பர்யவஸிக்கும் என்பதையும், மருந்தின் பெருமை வைத்தியனால் ஏற்படுவதென்பதையும், அவனுடைய பெருமையிலேயே பர்யவஸிக்கும் என்பதையும் மறுப்பார் யாருமில்லை. அதுகொண்டு உள்ள பெருமையை இல்லைசெய்து வெறும் ஆரோபவாதமே என்ன

முடியாது. இதுபோலவே "வாச்யப்ரபாவம் போலன்று வாசகப்ரப$_4$வம்" என்றாலும் வாச்யனுக்கு அவ்விடத்தில் இல்லாததான ப$_2$லகரணத்வம் என்னும் பெருமை வாசகத்துக்கு உண்டு என்று கொள்வதே பொருத்தமுடையது. இப்பெருமையும் வாசகத்துக்கு அவன் ஸங்கல்பத்தால் வந்ததேயென்பதையும், தன்னிலும் விஞ்சிய பெருமையுடைய திருநாமத்தையுடையவன் அவனேயாகையாலே அவன் பெருமையிலேயே பர்யவஸிக்கும் என்பதையும் மறுப்பார் ஆருமில்லை. இதுகொண்டு வாச்யத்தைக்காட்டிலும் வாசகததுக்கு உள்ள பெருமையை இல்லைசெய்து வெறும் ஆரோபவாதமே என்னமுடியாது. பரமபுருஷனை விட்டு எல்லா நிலைகளிலும் ஒரு கணமும் அகலகில்லாத பிராட்டிக்கு அஜ்ஞாதநிக்$_3$ரஹத்வம் முதலான எம்பெருமானுக்கில்லாத பல பெருமைகள் நம்மால் ஒப்புக்கொள்ளப் படுகின்றன. ஆயினும் அப்பெருமைகள் அவனுடைய நித்யஸங்கல்பத்தால் அவளுக்கு ஏற்பட்டவையே என்றும், பலவிஷயங்களில் தன்னிலும் விஞ்சிய பெருமையையுடைய பிராட்டியை இயற்கையிலேயே தன் சொத்தாகக் கொண்டவன் அவனேயாகையாலே, அவளுடைய பெருமையெல்லாம் அவனுடைய பெருமையாகவே முடியுமாகையாலே அவனுடைய பெருமைக்கு ஒரு குறைவுமில்லை என்றும் கொள்கின்றோம். இதுகொண்டு பிராட்டிக்கு எம்பெருமானுக்கில்லாத ஒரு பெருமையும் இல்லையென்றும் இருப்பதாகக் கூறுவதெலலாம் வெறும் ஆரோபவாதமே என்றும் கூறிவிடமுடியுமோ? இது போலவே உபாயாந்தரங்களைப் பற்றும் ஸ்தலங்களில் எம்பெருமானுக்கில்லாத ப$_2$லகரணத்வம் உபாயாந்தரங்களுக்கு உண்டு என்று கூறுவது ஆரோபவாதமாகமுடியாது.

56. "ப்ரபத்தவ்யன் ப்ரப$_4$ாவம் போலன்று ப்ரபத்தியின் ப்ரப$_4$ாவம்; அவன் கண்ணுக்குத் தோற்றுதபடி நின்றாலும் இது கரஸ்த$_2$மாயிருந்து காரியம் செய்யும்" என்று ஒரு வாக்யத்தைக் கற்பிக்கிறார். ப்ரபத்திக்கு எவ்விதமான உபாயத்வமும் கிடையாதென்று கொள்ளுகையாலே இத்தகைய வாக்யத்தைத் தென்னுசார்ய ஸம்பிரதாயஸ்தர்கள் எவரும் பிரயோகிக்கமாட்டார்கள். அப்படிப் பிரயோகித்தார்கள் என்றால் 'ஸம்பிரதாயமறியாதவர்கள்'

என்னும் பட்டமே அவர்களுக்குக்கிடைக்கும். தென்னாசார்ய ஸம்பிரதாயஸ்தர்களின் தலைவர்களாய், ஆசார்யாக்ரேஸரர்களான பிள்ளைலோகாசார்யருக்கும் நம்பிள்ளைக்கும் இந்தப்பட்டத்தை வாங்கிவைப்பதற்காகவே ஸர்வஸ்வகாரர் அரும்பாடுபடுகிறார்.

57. **ஸமீக்ஷணம்** பாரா 16-ல் "வாச்யப்ரப$_4$ாவமென்றும், வாசகப்ரப$_4$ாவமென்றும் இரண்டாகப்பிரித்து அருளிச்செய்தது புத்த்யாரோஹார்த்தமந்தனே; **ஶாக$_2$ாக்$_3$ரே சந்த்$_3$ர:** என்றால் கிளையின் நுனியில் சந்திரன் வந்துவிடுவனே" என்று கேட்கிறார். "ப்ரஹ்மஸூத்ரம் போன்ற கௌரவமுடைய முமுக்ஷுப்படி ஸூத்ரத்திற்கு முக்கியார்த்தம கொள்ள இடமிருக்கும்போது, '**ஶாக$_2$ாக்$_3$ரே சந்த்$_3$ர:**' என்றாற்போலே லாக்ஷணிகமாகப்பொருள் கொள்ளவேண்டிய அவசியம் இல்லை" என்பதே நம்முடைய ஸாரமான பதில்.

58. பாரா 55-ல் "த்ரௌபதியின் விபத்தைப் போக்கினவன் எம்பெருமான் என்பதே தத்துவம்; ப்ரபத்தி செய்ததற்காகப் போக்கினான் என்றாலும், திருநாமஸங்கீர்த்தனம் பண்ணினதற்காகப் போக்கினான் என்றாலும், அவள் தன்னிடத்தில் வைத்திருந்த அன்புக்காகப் போக்கினான் என்றாலும், தன்னுடைய நிர்ஹேதுக கருணையினாலே போக்கினான் என்றாலும் ஏற்கும்" என்று எழுதி, 56, 85 பாராக்களில் சில திருஷ்டாந்தர்களைக் காட்டுகிறார்; "திரௌபதி **திருநாமஞ்சொல்லி** கோவிந்தா என்றாள்" என்றும், "திருநாமம் சப்தசக்தியாலே பலனளித்தது" என்றும், "திருநாமம் பலனளித்ததேயொழிய பகவான் அளிக்கவில்லை" என்றும் ஆசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகள் இவ்விஷயத்தில் ஏற்பட்டிருக்கின்றன. இந்த ஸ்ரீஸூக்திகளை வெறும் ரஸோக்திகளாக்கிக் கழிக்காமல் பொருள் கூற வேண்டிய கடமை நமக்குள்ளது. மேலும், விபத்தைப் போக்கினதைத் **தனியாக எடுத்து** எந்த ஆசார்யரும் ப்ரபத்தி செய்ததற்காகப் போக்கினான் என்று எங்கும் அருளவில்லை; விபத்தைப்போக்கினதைத் தனியே எடுக்கும்போதெல்லாம் நியமேன திருநாமம் சொன்னதற்காகப் போக்கினான் என்றே காட்டுகிறார்கள். மற்ற பலன்களையெல்லாம் சரணாகதியின் பலனாகக்கொடுத்தான்என்றே காட்டுகிறார்கள். திருநாமத்துக்காகக் கொடுத்தான் என்று எங்கும் சொல்லுவதில்லை.

பொதுவாக சரணுகதிக்குப் பலன் கொடுத்ததாக ஸம்ப்ரதி பன்னமான எவ்விடத்திலும் திருநாமம் பலன் கொடுதத தாக ஆசார்யர்கள் அருளுவதில்லை என்பதையும் காண் கிறேம். திரௌபதி தன் சரணுகதிக்குப்பலனுகப் பலவற்றை உடனே விரும்பினுள் என்று அருளும் பெரியவாச்சான பிள்ளை, உடனே கிடைத்த பலனுன வஸ்திரவிருத்தியைத் திருநாமம் கொடுத்ததென்றும், மற்ற பலன்கள் நீண்டநாள் கழித்து சரணுகதி பலனுகக் கிடைத்தனவென்றும் காட்டு கிருர். ஆசார்யர்கள் இப்படியெல்லாம் ஸ்ரீஸூக்திகளை அமைத்திருப்பதற்குக் கருத்தைக் கூறவேண்டிய கடமையும் நமக்குள்ளது. இக்கடமைகளைச் சரியாக நிறைவேற்ற வேண்டுமாகையாலே, திரௌபதி சரணுகதியனுஷ்டித்த பிறகு திருநாமத்தை உபாயபுத்தியுடன் கூறினுள் என்றும், அதன் பலனுகவே வஸ்திரம் உடனே கிடைத்ததென்றும், சரணுகதி தடைபட்டதென்றும், "த்$_3$ரௌபத்$_3$யா ஸஹிதா:" என்றவிடததில் ப்ராயச்சித்த ப்ரபத்தியனுஷ்டித்த பிறகு சரணுகதிபலன்கள் பிறகு கிடைத்தனவென்றும் நாம் நிரூபிக்கிறேம். இக்கடமைகள் தமக்குமிருப்பதை உணராமல், முமுக்ஷுப்படி ஈடு முதலானவற்றிலுள்ள பல ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை ரஸோக்திகளென்று கழிததும், பாரதாதி தனிச்லோக ஸ்ரீஸூக்திகள் போன்ற பல ஸ்ரீஸூக்திகளுககு நேர் முரணுக எழுதியும் செல்கின்ருர் ஸர்வஸ்வகாரர். பாரா 56-ல் எடுக்கப்பட்ட அத்யயந சிலருக்கு ஏற்பட்ட விபத்து கழிந்ததற்கு ஹேதுவாக ஒவ்வொருவர் கூறிய வேதாத்யயன ஸம்பந்தும், அக்நிஹோத்ர ஸ்ரீயும், அந்தி தொழுத அதிசயமும் ஆகிய மூன்றுமே விபத்து கழிகையாகிற ஒரே பலத்திற்கு உண்மையில் காரணமாகும். ஒவ்வொருவர் ஒவ்வொன்றைச் சொன்னுர்களித்தனை. இங்கு ப்ரபத்திக்குப் பலன் வேருகவும், திருநாமத்துக்குப் பலன் வேருகவும் ஆசாரியர்கள் காட்டியிருக்கிருர்கள். ஆகையால் த்$_3$ருஷ்டாந்த த$_3$ார்ஷ்டாந்திகங்களுக்கு வெடுவாசியுண்டு. அதே பாராவில் எடுத்துள்ள மாணவ திருஷ்டாந்தத்தில் அநுஷ்டானம் பண்ணுவதும், ஸந்த்யாவந்தனம் பண்ணுவதும் ஒன்றேயாகும். ப்ரபத்தியும் திருநாமமும் ஒன்றென்று எந்த ஆசாரியரும் அருளியதில்லை என்பதை பலகால் காட்டியிருகிறேம். ஆகையால் இங்கும் த்ருஷ்டாந்தம் விஷமம்.

பாரா 85-ல் எடுக்கப்பட்ட கஜேந்திரவ்ருத்தாந்த த்ருஷ்டாந்தமும் வெறும் உல்லேகவாதமேயாகையாலே மிகவும் விஷமமேயாகும். அப்பாராவில் கூறியுள்ளபடி எம்பெருமான் திரௌபதியை ரக்ஷிக்கவில்லையென்று எவரும் கூறவில்லை பூலகரணமாயிருந்து ரக்ஷிக்கவில்லை என்றே கூறுகிறோம். பூலப்ரதனாயிருந்து ரக்ஷித்ததை எவரும் மறுக்கவில்லை; ப்ரபத்தி வஸ்திரவிருத்தியைச் செய்து ரக்ஷித்தது என்று எந்த ஆசார்யரும் கூறவில்லை. திருநாமம் வஸ்திரவிருத்தியைச் செய்து ரக்ஷித்தது என்றே அனைவரும் கூறுகிறார்கள், இவை வெறும் உல்லேகவாதமன்று. ஆகையால் கஜேந்திருஷ்டாந்தமும் விஷமமே என்று விளங்குமாகையால் 55, 56, 85 பாராக்களில் எழுதியவை பயனற்றவை.

59. பாரா 57-ல் பாரதாதி தனிச்லோக ஸ்ரீஸூக்திகளையும், 58ல் திருவிருத்தம்(33) வ்யாக்யானத்தில். 'ஸாஹம் கேஶக்ரஹம்'' ''ஶங்கசக்ரகதாபாணே'' என்ற ச்லோகங்களுக்கு அருளியிருக்கும் வியாக்கியானங்களையும் எடுத்துக்காட்டி 'இவற்றிலிருந்து த்ரௌபதியானவள் உபாயாந்தரகந்தமும் அறியாத ஸித்தோபாய ஸ்வீகார நிஷ்டை என்பது அப்ரகம்ப்யமாகத் தேறுகிறது' என்கிறார். ''சங்கசக்ரகதாபாணே'' என்ற ச்லோகத்தைக் கூறும்போது அவள் இருகையையும் விட்டுப் பரிபூர்ணமான சரணாகதியை அனுஷ்டித்தாள் என்பதை இல்லை செய்வார் ஆருமில்லை. இதற்காக திரௌபதியை எவ்வளவு கொண்டாடினாலும் தகும். இதற்காகவே நம் ஆசார்யர்கள் அவளை மிகக்கொண்டாடியிருக்கிறார்கள். இப்படி சரணாகதியனுஷ்டிப்பதற்கு முன் க்ஷணத்தில் அவள் பர்த்தாக்கள் முதலானவர்களை ரக்ஷகராகக் கூப்பிட்டிருக்கிறாள் என்பது ''அரக்ஷகரான பர்த்தாக்கள் முதலானவர்களை ரக்ஷகராகக் கூப்பிட்ட இழவு தீர'' என்று பெரியவாச்சான்பிள்ளை சரணாகதி ச்லோகத்தின் அவதாரிகையில் அருளியிருப்பதிலிருந்து விளங்குகிறது. சிறிது நேரத்திற்கெல்லாம் அவள் பீஷ்மாதிகளை ரக்ஷகராகக் கூப்பிட்டாள் என்பதை வியாஸரே காட்டியிருக்கிறார். அப்படியிருக்க, பகவத்குணத்தையும் பற்பல ஆசார்யஸ்ரீஸூக்திகளையும் ரக்ஷிப்பதற்காக, சரணாகதி ச்லோகத்தைச் சொன்னபின்பு, சில கணங்களுக்குப் பிறகு நிரதிசயமான ஆபத்தாலே அறிவுகலங்கி அவள் திருநாமத்தை

ரக்ஷகமாகப் பற்றினுள் என்று கற்பித்தால் என்ன குறை? பரமாபத்துக்காலத்திலே ஏற்பட்டதாகையாலே சரணுகதிக்குப்பின் ஏற்பட்ட உபாயாந்தர ஸம்பந்தங்களை தோஷமாகக் கண்ணனே கருதவில்லை. தன் குற்றமாகவே கருதிப் புண் பட்டுத் தானே ப்ராயச்சித்தத்தை அனுஷ்டிப்பித்து எல்லாப் பலன்களையும் கொடுத்தபின்பும் காலத்திலே ரக்ஷிக்கத்தவறி விட்டோமே என்று கடைசிவரையில் புண்பட்டிருந்தான் என்று ஆசாரியர்கள் பலவிடங்களில் "நாதிஸ்வஸ்த₂மநாயயௌ" என்னும் பிரமாணத்தைக் காட்டி நிரூபிக்கிறார்கள். ஆகையாலே நமக்கு எந்த ஆசார்ய ஸ்ரீஸூக்தியும் விரோதிக்காது. தனிச்லோகத்தில் திரௌபதி வஸ்திரம் தவிரப் பற்பல பலன்களை உடனே பெற விரும்பினுள் என்றும், அவற்றைப்பிறகே பெற்ருள் என்றும் நிரூபித்திருப்பது இவர்க்கே விரோதிக்கும் என்று காட்டினேம். திருவிருத்த வ்யாக்யானத்திலும் புண்டரீகாக்ஷபத வ்யாக்யானத்தில் "குளிர்ந்து சேர்த்து ஏலமிட்ட தண்ணீரை விடாயர்க்கு வார்க்காதே நிரபேக்ஷர்க்கு வார்க்குமாபோலே அக்கடாக்ஷங் கொண்டு நித்யஸூரிகளை நோக்கவிருக்கிருயோ?" என்று அவலோகநதானத்தை இவள் அப்போது பெறவிரும்பினள் என்று நம்பிள்ளை அருளியிருப்பதை இவரே எடுத்துக்காட்டுகிருர். இவையனைத்தையும்ஏனிவள் உடனேபெறவில்லைஎனும் கேள்விக்கு இவரால் பதிலுரைக்க முடியாதாகையாலே இவர்க்கே இந்த ஸ்ரீஸூக்திகளெல்லாம் விரோதிக்கும்.

60. பாரா 58-ன் கடைசியில் "த்ரௌபதி சுத்த ப்ரபந்நையென்பது நன்கு காட்டப்பட்டது. இவளுக்கு உபாயாந்தர ஸம்பந்தம் சொல்லுவதும், அதனுல் ப்ரபத்தி பலிக்கவில்லையென்று சொல்லுவதும் அவளுக்கு அபூர்வ பரிப₄வமேயாகும்." என்று எழுதி த்ரௌபதீ விபதுத்தாரம் என்னும் இரண்டாவது பரிச்சேதத்தை முடிக்கிருர். சரணுகதியனுஷ்டித்த சிறிது நேரத்திற்குள்ளாகவே திரௌபதி பீஷ்மாதிகளை ரக்ஷகராகப் பற்றியிருப்பதை வியாஸரே காட்டியிருக்கிருர் என்பதையும், பரமாபத்துக்காலத்திலே ஏற்பட்ட இதெல்லாம் ஒரு பெரிய தோஷமன்று என்றும் கண்ணனும் பூர்வாசார்யர்களும் இவற்றை தோஷமாகக் கருதவில்லை என்றும் விரிவாக நிரூபித்தோம். ஆகையாலே நம்மால் எந்த நவீனபரிப₄வமும் த்ரௌபதிக்கு விளைக்கப்

படவில்லை. ஆகையால் இல்லாத ஆபத்தை இவர் உத்₃தா₄ரம் செய்யக்கிளம்பியது வ்ருதா₂ப்ரயத்னமே என்று இவ்வள வால் நிரூபிக்கப்பட்டது.

61. உண்மையில் இவராலேயே பகவத்குணத்திற்கும் பற்பல பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கும் பேராபத்து விளைக் கப்பட்டுள்ளது. பகவானுடைய குணமெல்லாம் ஒரு தட் டென்றால் சரணாகத ஸம்ரக்ஷகத்வம் என்னும் குணம் ஒரு தட்டாகும். சரணாகத ஸம்ரக்ஷணத்தில் ஒரு பக்ஷி தன்னிலும் சிறப்புப்பெற்றுவிட்டதே என்று பெருமாள் புண்பட்டது இவ்வளவு அவ்வளவு அல்ல. இவருடைய பக்ஷத்தை அவலம் பித்தால், "த்ரௌபதி ஆபத்துக்காலத்திலே கண்ணன் முகத்திலே விழிக்கவேண்டுமென்றும், 'மாசுச:' என்னும் அவன் வார்த்தையைக் கேட்கவேண்டுமென்றும், அவனிட மிருந்து பற்பல பலன்களைப் பெறவேண்டுமென்றும் விரும்பிப் பரமார்த்தியோடு பரிபூர்ணப்ரபத்தி செய்திருக் கையில் புடவையை மாத்திரம் சுரக்கச்செய்துவிட்டு, ஒரு காரணமுமில்லாமல் மற்ற பலன்களை உடனே அளிக்கத் தவறிவிட்டான் கண்ணன்" என்னும் **பெரிய அபகீர்த்தி கண்ணனுக்கு ஏற்படும்.** இந்த குணஹானி கண்ணனுக்கு ஏற்படலாகாது என்று கருதியே பூர்வாசார்யர்கள் வஸ்திர விருத்தி ஏற்படுவதற்கு முன் க்ஷணத்தில் உள்ள கோவிந்த நாமத்தில் திரௌபதிக்கு உபாயபுத்தி ஏற்பட்டதென்று திருவுள்ளம்பற்றி ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்திருக்கிறார்கள். சரணாகதி செய்தவுடன் வஸ்திரவிருத்தி ஏற்படவில்லை; "பாஹி **கோ₃விந்த₃**" என்று சொன்னவுடன் வஸ்திர விருத்தி ஏற்பட்டுள்ளது. "**யத₃நந்தரம் யத்₃ப₄வதி தத் தஸ்ய காரணம்**" என்னும் நியாயத்தைக்கொண்டு பார்த் தாலும், உபாயபுத்தியுடன் உச்சரிக்கப்பட்ட இந்த கோவிந்த நாமத்தாலே புடவை சுரந்ததென்று கொள்வதே பொருத்தமுடையது என விளங்கும். **உண்மையில் ஒரு பெரிய தோஷமல்லாததும், கண்ணனும் பூர்வாசார்யர்களும் தோஷமென்று கருதாததுமான ஓர் உபாயாந்தர ஸம்பந்தத்தை திரௌபதிக்கு ஒப்புக்கொள்வது சிறந்ததா, கண்ணனுக்குப் பெரிய குணஹானியை விளைக்கக் கூடியதும், பற்பல பூர்வா சார்ய ஸ்ரீஸூக்திகளைப் பொருளற்றதாக்கக்கூடியதுமான ஸ்வ வஸ்வகாரர் பக்ஷத்தை ஒப்புக்கொள்வது சிறந்ததா என்பதை**

**விவேகிகள் ஆராயவேணும்.** இவ்விஷயத்தை நடுநிலைநின்று ஆராய்ந்தால், ஸர்வஸ்வகாரரால் தன்னுடைய குணத்துக்கும், ஆசார்யஸ்ரீஸூக்திகளுக்கும் விளைக்கப்பட்டிருக்கும் ஆபத்தைப்போக்கித் தன் குணத்தையும், ஆசார்ய ஸ்ரீஸூக்திகளையும் ஸம்ரக்ஷித்துக் கொள்வதற்காகவே அடியேனை எழுதுகோலாகக் கொண்டு ஸம்ரக்ஷணத்தை அவதரிப்பித்திருக்கிறுன் ஸர்வேச்வரன் என்பதே உண்மை என்று விளங்கும்.

## ஸர்வஸ்வம் மூன்றுவது பரிச்சேதத்தின் நிரஸனம்

62. "உட்புகுந்து ஆராயப்படவேண்டிய விஷயங்கள்" என்று மகுடமிட்டுள்ள இப்பரிச்சேதத்தில் மேலெழுந்தவாரியாகச் சில ஆராய்ச்சிகளைச் செய்கின்றார். பாரா 59-ல் நடாதூரம்மாளுடைய ச்லோகத்தில் "மூலமூலேதி கி₂ந்நே" என்று கஜேந்திரன் திருநாமத்தையே சொன்னுன் என்று விளங்குகையால், அவனுக்கும் ப்ரபத்தியால் பேறு கிடைக்கவில்லை என்றும், நாமத்தாலேயே பேறு கிடைத்ததென்றும் கூறலாம் என்று கூறுகிருர். "**பரமாபத₃மாபந்ந: நாராயண பராயண: ஹ்ரிம மநஸாऽசிந்தயத்**" என்ற கஜேந்த்ர ப்ரபத்திப்ரதிபாதகமான ச்லோகத்தையொட்டிப் பார்க்கும் போது, "ருவதி" "கி₂ந்நே" என்னும் பதங்களுக்கு "மிக வருந்தி சரணமடைந்தவளவில்" எனறே பொருள் கொள்ள வேண்டும் என்று எவர்க்கும் விளங்கும். மேலும், கஜேந்திர ப்ரபத்தி உடனே பலிததென்று காண்கிறோம். எல்லா ஆசார்யர்களும் அது உடனே பலிந்ததாகவே அருளுவதையும் காண்கிறோம். திரௌபதியின் ஆர்த்தப்ரபத்தி உடனே பலிக்கவில்லையென்பதையும், உடனே பலித்திருக்கவேண்டிய ப்ரபத்தி உடனே பலிக்காமையாலேயே ஆசார்யர்கள் உபாயாந்தர ஸம்பந்தம் அப்போது திரௌபதிக்கு ஏற்பட்டதெனக் காட்டும் பற்பல ஸ்ரீஸூக்திகளையும் பிறகு பலித்ததெனக் காட்டும் ஸ்ரீஸூக்திகளையும் அருளியிருப்பதையும் காண்கிறோம். இப்படி த்ரௌபதீ கஜேந்திரப்ரபத்திகளுக்கும் அவை பற்றிய ஆசார்ய ஸ்ரீஸூக்திகளும் மிகவும் வாசிகாண்கையாலே த்ரௌபதீ ப்ரபத்தியிற்போலே கஜேந்திர ப்ரபத்தியில் திருநாமஸம்பந்தத்தால் பலனுண்டாயிற்றென்று கொள்ளவேண்டிய அவசியம் எவர்க்குமில்லை. பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்தியை அடியொற்றி

ப்ரபத்தி பின்பு பலித்ததென்று நாம் நிரூபிக்கையால், "த்ரௌபதி ஸ்நாதையாயன்றோ ப்ரபத்தி பண்ணிற்று" என்னும் ஸூத்ரம் நமக்கு விரோதிககாது.

63. பாரா 60 முதல் 68 முடிய முமுக்ஷுப்படியின் தொடக்கத்திலிருந்து வாசகப்ரபாவம் சொல்லுமிடம் வரையுள்ள ப்ரகரணத்தை ஆராய்கிறார். ஸூத்ரத்தில் முதலில் திருமந்திரத்தின் பெருமையைச்சொல்லி, அத்திருமந்திரத்தை வேதங்களும், ரிஷிகளும், ஆழ்வார்களும் விரும்பினார்கள், என்று கூறியிருக்கும்போது அந்த ஸூத்ரத்தின் வியாக்கியானத்தில் திருமந்திரத்தை வேதபுருஷன் முதலானோர் ஆதரிப்பதைக் காட்டுவதோடு நில்லாமல் நாராயண நாமத்தை மாத்திரம் ஆதரித்திருக்கும் ப்ரமாணங்களையும் மாமுனிகள் ஏன் காட்டுகிறார்? என்று கேட்கிறார். பாரா68ல் "இந்த மூன்றாவது பரிச்சேதத்தின் ஸாராம்சம் இவ்வளவே; திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்திற்குக் காட்டவேண்டிய பெருமையை அதன் ஏகதேசமான நாராயணத் திருநாமத்திற்குக் காட்டியருள்வது போலப்ரபத்திக்குக் காட்டவேண்டிய பெருமையை அதன் ஏகதேசமான திருநாமத்திற்குக் காட்டியருளியதும் குறையற்றதேயென்று" என்று தாமே இதற்கு ஸமாதானமுரைத்து அதற்குமேல் அப்ரஸக்தமான ப்ரபத்தியை நுழைத்திருக்கிறார். இங்கு மூலத்திலும், வியாக்கியானத்திலும் ப்ரபத்தியைப்பற்றிய பேச்சே கிடையாது. வ்யாக்யாதா நாராயணநாமத்தின் பெருமையைக் காட்டுவதன் மூலம் அதையுள்ளடக்கிய திருமந்திரத்தின் பெருமையைக்காட்டுகிறார் என்று ஸர்வஸ்வகாரரே இசைந்த ரீதியில் ஸூத்ரகாரரும் நாராயணநாமத்தின் அர்த்தத்தில் ஏகதேசத்திற்கு வாசகமான கோவிந்த நாமத்தின் பெருமையைக் காட்டுவதன் மூலம், அதன் அர்த்தத்தை உள்ளடக்கிய நாராயண நாமத்தின் பெருமையை வலியுறுத்தி, அந்த நாராயண சப்தத்தை உள்ளடக்கிய திருமந்திரத்தின் பெருமையை உறுதிப்படுத்துகிறார் என்பதே மாமுனிகள் வியாக்கியானத்தின்படி இப்ரகரணத்தின் தாத்பர்யமாகும். "நாராயண சப்தார்த்தத்தில் ஏகதேசத்துக்கு வாசகமான ஒரு திருநாமம் செய்தபடி கண்டால் இதன் ப்ரபாவம் கிம்புநந்யாய ஸித்தமிறே என்று கருத்து" என்னும் மாமுனிகளின் வியாக்கியானம் இதைத் தெளிவாகக் காட்டுகிறது. ஸர்

வஸ்வகாரர் கருதுவதுபோல் மாமுனிகள் கருதியிருந்தால் இவ்விடத்தில் "**ப்ரபத்தியின் ஏகதேசமான ஒரு கோவிந்த நாமம் செய்தபடி கண்டால், அதை உள்ளடக்கிய ப்ரபத்தியின் ப்ரபாவமும், அதுக்கு வாசகமான திருமந்த்ர ப்ரபாவமும கிம்புநர்ந்யாயஸித்தமிறே**" என்று அருளியிருப்பார். இப்படி அப்ரகரணத்தில் எங்குமே அருளாமையால், ஸர்வஸ்வகாரரின் பக்ஷம் மாமுனிகளின் திருவுள்ளத்திற்கு விருத்தம் என்று ஸித்தித்தது.

## ஸர்வஸ்வம் நான்காவது பரிச்சேதத்தின் நிரஸனம்

64. "மணவாளமாமுனிகளின் வியாக்கியான சைலீ விவரணம்" என்று மகுடமிட்ட இப்பரிச்சேதத்தில் பாரா 69 முதல், 83 முடிய மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்திலிருந்து பலவிடங்களை எடுத்துக்காட்டி, பிள்ளை லோகாசார்யருடையவும், அவருடைய திருத்தம்பியாருடையவும் ஸ்ரீஸூக்திகளில் பரஸ்பர விரோதமோ, பூர்வ ஸ்ரீஸூக்தி விரோதமோ, ஔசித்யவிரோதமோ ஆபாதத; தோன்றுவதற்கு ஸ்வல்பப்ரஸக்தியிருந்தாலும் மாமுனிகள் அதை எடுத்துக்காட்டிப் பரிஹரிக்காமல் விடமாட்டார் என்று விளக்குகிறார். அதை நாம் மறுக்கவுமில்லை; மறுக்க வேண்டிய அவசியமும் நமக்கில்லை. ஸ்ரீவசநபூஷண ஸூத்ரத்திலிருந்து, "ப்ரபத்திக்கு நிஷ்பாதகம் வஸ்த்ரம்" என்றும், முமுக்ஷுப்படி ஸூத்ரத்திலிருந்து "திருநாமத்தினால் நிஷ்பந்நம் வஸ்த்ரம்" என்றும் தேறுகிறது என்றும் இவற்றினிடையே விரோதமிருப்பதாகச் சிறுவர்கள்கூட நினைக்கமாட்டார்கள் என்றும் நாம் நிரூபித்திருக்கிறோம். அதனாலேயே மாமுனிகள் இவ்விரண்டு ஸூத்ரவ்யாக்யானங்களில் ஒன்றிலும் விரோதமிருப்பதாக எடுத்துக்கழிக்கவேயில்லை. ஸர்வஸ்வகாரர் கருதுகிறபடி "ப்ரபத்தியினால நிஷ்பந்நம் வஸ்த்ரம்" என்று ஸ்ரீவசனபூஷண ஸூத்ரத்திற்கும் "திருநாமத்தினால் நிஷ்பந்நம வஸ்த்ரம்" என்று முமுக்ஷுப்படி ஸூத்ரத்திற்கும் பொருள் கொண்டால்தான் இரண்டினிடையே விரோதம் தோற்றுகிறது. ஸர்வஸ்வகாரரைப் போல் அப்படிப் பொருள் கொண்டிருந்தால் விரோதம் தெளிவாகத் தோற்றுகையாலே, மாமுனிகள் மேலெழத் தோன்றும் விரோதத்தை எடுத்து திருநாமமும் ப்ரபத்தியும் ஒன்றே என்றோ வேறுவிதமாகவோ விரோதபரிஹாரம்

செய்திருப்பார். அப்படிச் செய்யாததிலிருந்து ஸர்வஸ்வ காரர் பக்ஷத்தை மாமுனிகள் திருவுள்ளம் பற்றவில்லையென விளங்குகிறது. ஸ்ரீவசனபூஷண ஸூத்ரத்துக்கு ஸர்வஸ்வ காரர் கருதுவதற்கு நேர்மாறாக "ப்ரபத்திக்கு நிஷ்பாத்யம் வஸ்த்ரம்" என்றே மாமுனிகள் பொருள்கொண்டார் என்பதை அவர் வியாக்கியானத்திலிருந்தே காட்டினோம். ஆகையால் ஸர்வஸ்வம் நான்காம் பரிச்சேதத்தில் மணவாள மாமுனிகளின் வியாக்கியான சைலியைக் காட்டியிருப்பது ஸர்வஸ்வகாரர்க்கே விரோதிக்கிறது. நமக்கு எவ்வித விரோதமுமில்லை. "மாமுனிகளின் மேதைக்கு கோசரமாகாத விரோதம் தமக்கு ஸ்புரித்ததாக உரைக்க ஒருவர் முன் வருவது மிகப்பரிஹாஸ்யமன்றோ" என்று 83-வது பாரா கடைசியில் எழுதுகிறார். மாமுனிகளின் மேதைக்கு கோசரமாகாத விரோதம் நமக்கு ஸ்புரித்ததாக நாம் எங்கும் உரைக்கவுமில்லை; அதைப் பரிஹரிக்க முன்வரவுமில்லை. "வஸ்த்ரத்தை ப்ரபத்தியால் நிஷ்பன்னமாகக்கூறும் ஸ்ரீவசநபூஷணஸூத்ரத்திற்கும் அதைத்திருநாமத்தால் நிஷ்பன்னமாகக் கூறும் முமுக்ஷுப்படி ஸூத்ரத்திற்கும் விரோதம் தோன்றுகிறது; அதைப் பரிஹரிக்க ப்ரபத்தியையும் திருநாமத்தையும் ஒன்றென்று கொள்கிறோம்" என்று சொல்லித் தீரவேண்டிய இவரையே இவருடைய இந்த வாக்கியம் தாக்கும்.

65. பாரா 84-ல் ஸ்ரீவசந பூஷணத்தில் "த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ராதிகள்" என்றில்லாமையாலே, வஸ்திரத்தைத் தவிர வேறொன்றையும் அவள் கோரியிருக்க முடியாதென்றும், உண்மையில் வஸ்திரத்தையும் கோரவில்லை, கோரப்ரஸக்தியுமில்லையென்றும் மானஸம்ரக்ஷணமொன்றே அவள் விரும்பக்கூடியதும் விரும்பியதும் என்றும் எழுதிச்செல்கின்றார். பாரதாதி தனிச்லோகத்தில் **"சங்கசக்ரகதாபாணே"** என்னும் ச்லோகத்தை வியாக்கியானம் செய்யும்போது ஒவ்வொரு பதத்தாலும் ஒவ்வொரு பலனை திரௌபதி உடனே பெற விரும்பினாள் என்று தெளிவாகப் பெரியவாச்சான்பிள்ளை அருளியிருப்பதற்கு இது நேரே விரோதிக்கும். பாரா 19-ல் "வஸ்த்ரவர்த்தனம் உடனே பலித்தது; சத்ருஸம்ஹாரம் நாளடைவில் பலித்தது" என்றும், ஸமீக்ஷணம் பாரா 15-ல் "த்ரௌபதிக்குமற்றும் பல

கோரிகைகள் இருந்தால் இருக்கட்டுமே'' என்றும் தாமே எழுதியிருப்பதோடும் விரோதிக்கும். இப்படி ஸ்வோக்தி விரோதமும் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திவிரோதமும் ஏற்படுவதைககூட கவனியாமல் எழுதிச்செல்வதைக் காண்பார்க்கு ஸர்வஸ்வகாரருடைய பக்ஷம் இன்னதென்றே விளங்கவில்லை. "வஸ்த்ரமே பலம்'' என்று ஸ்ரீவசநபூஷணத்தில் இல்லையே.

66. திரௌபதி விரும்பிய மற்ற எல்லாப்பலனும் ஒருபுறமிருக்கட்டும்; கஜேந்திரனுக்கு வந்து உதவியது போலே அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து அவன் முகங் காட்டவேணுமென்றும், தாயாயளிக்கின்ற தண்டாமரைக் கண்ணனைக் காணவேணுமென்றும், அவனுடைய அவலோகநதானத்தைப் பெறவேண்டுமென்றும், 'மாசுச:' என்னும் அவன் வார்த்தையைக் கேட்கவேண்டுமென்றும், வழிபறிக்கும் தசையிலே தாய்முகத்திலே விழிக்கவிரும்புவாரைப்போலே அவன் முகத்தில் விழிக்கவேணுமென்றும் திரௌபதி விருமபினுள் என்று பலவிடங்களில் பெரியவாச்சான் பிள்ளை காட்டிவிட்டார். இந்தப் பலன் உடனே ஏன் கிடைக்கவில்லை என்பதற்கு எவரும் பதில் சொல்லியே திரவேணும். மஹாபாரதத்தில் வனபர்வத்தில இருநூற்றறுபத்து நாலாம் அத்தியாயத்தில ஒரு விருத்தாந்தம் உள்ளது. துர்யோதனனுல் தூண்டப்பட்ட துர்வாஸர் அகாலத்தில் ஆயிரக்கணக்கான சிஷ்யர்களோடு தர்மபுத்ரரிடம் ஆதித்யத்தை விரும்பி வந்ததையும், அப்போது திரௌபதி கண்ணனை மனத்தாலே சரணடைந்ததையும், உடனே கண்ணன் அருகில் படுக்கையிலிருந்த ருக்மிணியையும் விட்டு அரைகுலையத தலைகுலைய ஓடிவந்து அவ்வாபத்தைப் பரிஹரித்ததையும் வியாஸர் கூறுகிறுர். அவ்வாபத்தைவிட துச்சாஸனனுல் வந்த ஆபத்து மஹத்தானது. துர்வாஸரினுல் வந்த ஆபத்தை நேரே வந்தே பரிஹரிக்கவேண்டுமென்னும் அவசியமில்லை. இங்கே நேரே வரவேணும் என்று திரௌபதி கருதியதாகப் பெரியவாச்சான்பிள்ளை தெளிவாக அருளிவிட்டார். அப்படியிருக்கும்போது அங்கு அரைகுலையத்தலைகுலைய ஓடிவந்த கண்ணன் இங்கு ஏன் அப்படி ஓடிவரவிலலை எனபதற்குக் காரணத்தை அனைவரும் அவசியம் சொல்லியே தீரவேண்டும். ஆசார்யர்கள் உணர்த்தியிருக்கும் வழியில் உபாயாந்தர ஸம்பந்தம் ஏற்

டட்டிருப்பதாகக் கொள்வதைத் தவிர வேறு சரியான காரணம் இங்கு எவராலும் காட்டமுடியாது.

### ஸர்வஸ்வம் ஐந்தாவது பரிச்சேதத்தின் நிரஸனம்.

67. ஸர்வஸ்வம் நாலு பரிச்சேதங்களின் நிரஸனத்தை எழுதிமுடித்து, அவற்றில் பெரும்பகுதி அச்சாகியும் முடிந்தவுடன் இன்று (25-5-63) "ஸ்ரீராமாநுஜன்" கிடைத்தது. அதில் ஸர்வஸ்வம் ஐந்து ஆறுவது பரிச்சேதங்களையும் வெளியிட்டிருக்கிறார். "உக்தி சமத்கார வைகரிகள்" என்னும் தலைப்புள்ள ஐந்தாம் பரிச்சேததில் (பாரா 86-105) பல பாராக்களில் ஸம்ஸ்க்ருதகவிதைகளிலும், தமிழ்க் கவிதைகளிலும்உக்திசமத்காரம்எனப்படும்சொல்லின்பங்கள் பல பலவும் இருப்பதை **மிகச்சுவைதோற்ற உபபாதித்துச் செல்கின்றார்.** இவற்றை எவரும் இல்லை செய்யமுடியாது. பிள்ளை லோகாசார்யருடைய பல ஸூத்ரங்களும், ஆழ்வார்களும் ஆசாரியர்களும் திவ்யமங்களவிக்ரஹமும், பாசுரங்களும், திருநாமம் முதலான உபாயாந்தரங்களும் பலங்கொடுக்கும் என்று காட்டியிருக்கும் பற்பல ஸ்ரீஸூக்திகளும் இத்தகைய உக்திசமத்காரங்களே என்றும், எம்பெருமானுடைய பலப்ரதத்வத்தை திவ்யமங்களவிக்ரஹத்தின் மீதும், பாசுரங்களின்மீதும், உபாயாந்தரங்களின்மீதும் ஏற்றிச்சொல்லும் வழக்குகளே அவை என்றும் கூறுகிறார். இதில் தான் விவாதம் ஏற்படுகிறது. திவ்யமங்களவிக்ரஹத்திற்குப் பலகரணத்வரூபமான உபாயத்வம் உண்டு என்பதைப் பரந்தரஹஸ்யம் முதலான ரஹஸ்ய க்ரந்தங்களிலே பற்பல வாக்கியங்களில் பூர்வாசார்யர்கள் யுக்திகளைக் காட்டி நிரூபித்திருக்கிறார்கள். அதேபோல் எல்லா ஆசார்யர்களும்கர்மஜ்ஞானபக்திகள், திருநாமஸங்கீர்த்தனம் முதலான உபாயாந்தரங்களுக்கும் (பலகரணத்வரூபமான) உபாயத்வம் உண்டென்று **ஆயிரக்கணக்கான ஸ்ரீஸூக்திகளில்** உபபாதித்திருக்கின்றார்கள். திவ்யப்ரபந்தப் பாசுரங்களுக்கும் இத்தகைய பலகரணத்வம் உண்டென்பதை எவரும் மறுக்கமுடியாது. இவ்வண்ணமாக, உபாயாந்தரங்களுக்கும், விக்ரஹத்திற்கும், பாசுரங்களுக்கும் **உள்ளதான** பலகரணத்வ ரூபமான உபாயத்வத்தைச் சொல்லுவதாகக் கொண்டு **ஆயிரக்கணக்கான ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை** தத்வ நிஷ்கர்ஷபரமாகக் கொள்ள இடமிருக்கும்போது அவற்றில்

**இல்லாததான** பூ₂லப்ரத₃த்வ ரூபமான உபாயத்வத்தை அவற்றில ஏறிட்டுச் சொல்லுவதாகக் கொண்டு **அவ்வாயிரக் கணக்கான ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை எதற்காக வெறும் உகதி சமத்காரங்களாகவும், ஆரோபவாதங்களாகவும்** கொள்ள வேண்டும் என்பதே நம்முடைய ஸாரமான கேள்வி. இவ்வொரு கேள்விக்கு சரியாக பதிலிறுக்க ஸர்வஸ்வகாரரால் முடியாது. இதற்கு பதிலிறுக்காமல் இவர் எத்தனை உக்திசமத்காரங்களையும், ரஸோக்திகளையும், சாடூக்திகளையும் காட்டினுலும் பயனில்லை.

*68. பாரா 105-ல் "தன்னுடைய க்ருபையே காரணமாகப் பலனளிக்கும் பகவானுக்கு ஒரு வியாஜம் வேண்டியிருந்தது என்று நூற்கொள்கை" என்று எழுதுகிருர். இதிலிருந்து க்ஷுத்ரபலன்களை அளிக்கும்போதும் உபாயாந்தரங்களோடு ப்ரபத்தியோடு வாசியற அனைத்துக்கும் வ்யாஜத்வமே உள்ளது; பலகரணத்வம் ஒன்றுக்குமில்லை என்று ஸர்வஸவகாரர் கருதுவதாகத் தெரிகிறது. அப்படியாஞல் பூர்வாசார்யர்கள் காலம் தொடங்கி இன்றளவும் நூற்றுக்கணககான நூல்களில உபாயாந்தரங்களுக்கு உள்ள உபாயத்வம் ஶரணவரணத்திற்கு இல்லையென்று போராடியிருப்பது பயனற்றதாய்விடும். தென்ஞசார்ய ஸம்பிரதாயத்திற்கு இது முக்கியமான விஷயம். எவர்க்கும் ஸாதகமோ பாதகமோ அல்லாத ரஸோக்திகளையும், உக்திசமத்காரங்களையும் தமககே பா₃த₄கமான மாமுனிகளின் வியாக்கியான சைலியையும் காட்டி ஏடுகளை நிரப்புவதை விட்டிட்டு ஸர்வஸ்வகாரர் இவ்விஷயத்தில் தம் திறமையைக் காட்டி வாசகர்களைத் திருப்தி செய்யட்டும். திருநாமமிறே என்றது ப்ரபத்தியின் நாமாந்தரமே என்கிருர். எந்த ஆசார்யராவது இப்படி எழுதியிருப்பதைக் காட்டட்டும்.*

## ஸர்வஸ்வம் ஆருவது பரிச்சேதத்தின் நிரஸனம்

*69. "ஸம்ப்ரத₃ாயவிருத்₃தே₄ாக்தி வித₄ூநநங்கள்" என்னும் தலைப்புள்ள ஆருவது பரிச்சேதத்தை ஆராய்வோம்; பாரா 106-ல் "மஹாபாரதத்தில் அவன் மானஹானி பரிஹாரத்தைக் கோரினதாகச் சொல்லப்பட்டுள்ளதேயன்றி வேறொன்றும் சொல்லப்பட்டிருக்கவில்லை." என்று எழுதுகிருர். மஹாபாரதத்தில் சரணுகதி ச்லோ*

கத்தில் 'ரக்ஷமாம்'' என்று தன்னை ரக்ஷிக்கவேணும் என்று கதறியதாகவே உள்ளது ''ரக்ஷிகையாவது விரோதி₄யைப்போக்குகையும், அபேக்ஷிதங்களைக் கொடுக்கையும்'' ''இவளுக்கு வஸ்த்ரவர்த₄னமும் சத்ருஸம்ஹாரமும் அபேக்ஷிதம்'' ''அப்படியே (கஜேந்திரனுக்கு வந்ததுபோலே) கூராராழி வெண்சங்கேந்தி வந்தருளித்தனக்கு முகங்காட்ட வேணும் என்று கருத்து'' ''நீயும் என்னைப்போலே நிலையிழந்திருக்கிருயோ'' ''நீயும் உன் ஸ்வபா₄வத்தில் நெகிழிலன்றோ என் உடை நெகிழ வேண்டுவது'' ''நான் குழலபேணுமலிருக்க, நீ குழலிருண்டு சுருண்டேறிய குஞ்சிக் கோவிந்தனுய் மயிர்பேணியிருப்பதென்'' ''உன் சோதி வாய்திறந்து உன் தாமரைக்கண்களால் நோக்காதொழிவதென்'' ''என்னுடைய ஆபத்துக்கு அவலோகநதானமன்றோ அபேக்ஷிதம்'' ''நீ கண்ணுடையவனுயிருக்க நான் கண்கலங்குவதென்'' ''வழிபறிக்கும் தசையிலே தாய் முகத்திலே விழிக்க ஆசைப்படுவாரைப்போலே * தாயாயளிக்கின்ற தண்டாமரைக் கண்ணனைக் காணவாயிற்று இவள் ஆசைப்படுகிறது'' ''மாசுச:' என்று ஒரு வார்த்தையன்றோ வேண்டுவது'' என்று பெரியவாச்சான்பிள்ளை வஸ்த்ர வர்த்த₄னம் முதலான பற்பல அபேக்ஷிதங்களையும், சத்ரு ஸம்ஹாரத்தையும் பெறவேண்டுமென்று ஒவ்வொரு பதங்களைச் சொல்லும்போது திரௌபதியே தன் நெஞ்சால் நினைத்தாள் என்று காட்டியிருக்கும்போது, அதற்கு நேர் முரணுக மானஸம்ரக்ஷணம் ஒன்றையே அவள் கோரினுள் என்று எழுதுவதற்கு ஸர்வஸ்வகாரருக்கு அதிகாரம் ஏது? பெரியவாச்சான்பிள்ளையிலும் தம்மைப் பெரியவராக நினைத்துவிட்டாரோ?

70. பாரா 107, 108-ல் திரௌபதி இருகையும் விட்டு ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ரூபமான ப்ரபத்தியைச் செய்தாள் என்கிருர். இதை எவரும் மறுக்கவில்லை. பாரா 108ல் ''த்ரௌபதிக்குப் பலன் வஸ்த்ரம்'' என்ற வாக்யத்தை எடுத்துக்கொண்டு, ''மஹாவாக்யங்களில் ஔசித்யத்திற்கு ஏற்பப்பல விபரிணுமங்கள் செய்வது ப்ரஸித்தம்'' என்று எழுதுகிருர். ஒரு விபரிணுமும் செய்யாமல் பொருள் கொள்ள ஸூத்ரமும் வியாக்யானமும் இடம் கொடுக்கும் போது, எதற்காக விபரிணுமம் செய்து ''த்ரௌபதிக்கு

நிஷ்பந்நம் வஸ்த்ரம்" என்று பொருள்கொண்டு முமுக்ஷுப் படி ஸூத்ரத்தோடு விரோதத்தை வரவழைத்துக்கொள்ள வேண்டும்? என்பது நம்முடைய கேள்வி. "த்ரௌபதிககுப் பலன் வஸ்திரம்" என்றதற்கு "அவள் கோரிய பலன் வஸ் திரம்" என்று சிலவிடங்களிலும், "அவளுக்குக்கிடைத்த பலன் வஸ்திரம்" என்று சிலவிடங்களிலும்பொருள் எழுது கிறார். எப்படிகொண்டாலும் இவருக்குவிரோதம்வருகிறது. "ப்ரபத்திக்குக் கோரியபலன் வஸ்திரம்" என்றுகொண்டால் "திருநாமத்தால் கிடைத்தபலன் வஸ்திரம்" எனக்கூறும் முமுக்ஷுப்படி ஸூத்ரத்துக்கும் ஸ்ரீவசனபூஷண ஸூத் ரத்திற்கும் விரோதமேயில்லாமையாலே, எந்த ஆசார்யரும் செல்லாதவழியில் சென்று கோவிந்த நாமத்தையும் ப்ர பத்தியையும் ஒன்றுக்கவேண்டியதில்லை. "ப்ரபத்தியால பெற்ற பலன் வஸ்திரம்" என்று கொண்டால், "திருநாமத் தால் பெற்ற பலன் வஸ்திரம்" என்று கூறும் முமுக்ஷுப் படி ஸூத்ரத்தோடு (இவர் கருத்துபபடி மேமலழுந் தோன்றும்) விரோதம் வருகையாலே. ஸர்வஸ்வம் நான் காவது பரிச்சேதத்தில் நிரூபித்துள்ளபடி மாமுனிகள் அவ்விரோதத்தை எடுத்துக் கழித்திருக்கவேண்டும். மாமுனி களோ விரோதத்தை எடுத்துக் கழிக்கவேயில்லை. ஆகை யால் ஸ்ரீவசந பூஷணஸூத்ரத்திற்கு எப்படிப் பொருள் கொண்டாலும் இவர்க்கு விரோதம் தவிரக்கவொண்ணது.

71. பாரா 109-முதல் 111 முடிய "மஹாவிச்வாஸம் நிலைத்து நிற்கிறதாவென்று பரீக்ஷிப்பதற்காகப் பரமபுரு ஷன் சில கணங்கள் தாமதிக்க" என்றும் "கோவிந்த நாமத்தில் உபாயபுத்தியைச் செய்து விட்டாள்" என்றும் நாம் ஸித்தாஞ்ஜனத்தில் எழுதியிருப்பதைககண்டு தமககுக் கண்ணீர் வெள்ளம் கோத்து நின்றதாகவும், இதைக் கண்ட பின்பும் தம் உயிர் போகாமலிருப்பதற்கு வருந்துவதாகவும் கூறிப் பலவாறு பரிஹஸிக்கிறார். சரணகதி செய்த சிறிது நேரத்திற்கெல்லாம் த்ரௌபதி திருதராஷ்ட்ரன் முதலா னரைப் பற்றியதை வியாஸரே காட்டியிருப்பதை நாம் எடுத்துக்காட்டிவிட்டோம். இதைக்கண்ட பின்பு என்ன செய்யப்போகிறாரோ தெரியவில்லை. "மஹாவிச்வாஸத்தைப் பரீக்ஷை செய்வதற்காகச் சில கணங்கள் தாமதித்தான்" என்று நாம் எழுதியிருப்பதை எடுத்துக்கொண்டு பல

கேள்விகள் கேட்டுப் பலவாறு ஆக்ஷேபிக்கிறார். சரணாகதி ச்லோகத்தைச் சொன்னபின்பு பத்தெட்டு ச்லோகங்களைச் சொல்லும் வரையில் புடைவை சுரப்பதற்குத் தாமதமாகி யிருக்கிறது என்று மஹாபாரதத்திலிருந்து விளங்குகிறது. இதை எவரும் இல்லை செய்யமுடியாது. இவர் கேட்கும் கேள்விகளை இத்தாமதத்தைச்செய்த கண்ணனைக் குறித்தும், தாமதம்செய்ததாகக் காட்டிய வ்யாஸரைக்குறித்துமே இவர் கேட்கவேண்டும். ஆர்த்தப்ரபத்தி ஸ்தலங்களில் ஆர்த்தியின் பராகாஷ்டை₂ விளைந்தபின்பே பலன் ஏற்படும் என்னும் சாஸ்திர வரம்பையொட்டி இந்தாமதத்திற்கு நாம் ஒரு காரணத்தைச் சொன்னோம். இதைவிட யுக்தமான காரணத்தை இவர் கூறினாலும் ஏற்றுக்கொள்ளத் தடையில்லை. இதில் ஒரு நிர்ப்பந்தமில்லை. ஆனால் ஒருவிஷயம் நிச்சயம். ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை அடியொற்றிப் புடைவை சுரப்பதற்கு முன் க்ஷணத்தில் உபாயபுத்தியுடன் கோவிந்தநாம ஸங்கீர்த்தனத்தை திரௌபதிக்கு ஒப்புக்கொள்ளாவிடில் 'ஆர்த்தப்பிரபத்திக்கு விரும்பிய பற்பல பலன்களை உடனே கொடுக்கவில்லை' என்னும் பெரிய குணஹானி கண்ணனுக்கு ஏற்படும்.

72. பாரா 112-ல் "உலகமுண்ட பெருவாயா" [திருவாய் 6-10-1]என்றவிடத்தின் ஈட்டில் "[பெருவாயா!] த்ரௌபதி ஶரணமென்ற உக்தியைத்தனையும் திருவுள்ளத்தே கிடந்து, ஸதஸ்ஸில் அவன் பரிப₄வித்த பரிப₄வத்தையும் பரிஹரித்து, துர்யோதநாதிகளையும் நிரஸித்து, தர்மபுத்ரன் தலையிலே முடியையும் வைத்து, இவள் குழலையும் முடிப்பித்து, பின்பும் 'ருணம் ப்ரவ்ருத்₃த₄மிவமே' என்று குறைவாளனாய் பரமபதத்துக்கு எழுந்தருளுகிறபோதும் 'நாதிஸ்வஸ்த₂மநா:' என்று திருவுள்ளத்தில் புண்ணோடேயிறே எழுந்தருளிற்று." என்று அருளியிருப்பதை நமக்கு ப₃ாத₄கமானதாய் எடுத்துக் காட்டுகிறார். இந்த ஸ்ரீஸூக்தியை அருளிய நம்பிள்ளையே திருவாய்மொழி (3-3-6) வ்யாக்யானத்தில், "த்ரௌபதி திருநாமஞ் சொல்ல கோவிந்தா என்றவாறே" என்று திரௌபதி திருநாமத்தை உபாயபுத்தியோடு சொன்னாள் என்று கூறுகையாலும், "பேர் தன் கார்யம் செய்ததித்தனை போக்கி நாம் ஒன்றும் செய்திலோம்" என்று பேர் தன் கார்யத்தைச் செய்தது என்றும் தான் ஒன்றும் செய்யவில்லை

யென்றும் கண்ணன் கலங்கியதாகக் காட்டுகையாலும், "அஸங்கதமாக இரண்டு சப்தங்களைச் சேர்த்துச்சொன்னால் விஷஹரணத்துக்கு உடலாகாநின்றதிறே சப்தசக்தியாலே; அவ்வோபாதியும் போராமையில்லையிறே திருநாமம" என்று திருநாமம் சப்தசக்தியாலே பலமளித்ததென்று அத்யாதரத்தோடு நிரூபிக்கையாலும் உபாயபுத்தியோடு உச்சரிக்கப்பட்ட திருநாமமே புடைவை சுரந்ததென்று நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். இந்த ஸ்ரீஸூக்திகளுக்கு விரோதமில்லாமல ப்ரக்ருதமான ஈட்டு (6-10-1) ஸ்ரீஸூக்திக்குப்பொருள் கொள்ளவேண்டிய பொறுப்பு அனைவர்க்குமுண்டு. அப்படிப் பொருள்கொள்ள இரண்டு வழிகள் காட்டுகிறோம். (1) இங்கு "ஶரணம் என்ற உக்தியித்தனையும்" என்றது கோவிந்த நாமத்துக்கும் உபலக்ஷணம். பல பலன்களை அளிக்கதாகையாலே ப்ரதானமான ஶரணோக்தியை யிட்டு ஓரே பலனையளித்ததாகையாலே அப்ரதா₄னமான திருநாமத்தை உபலக்ஷிக்கிறார் என்று கொள்ளவேண்டும். இத்தலையில் உள்ளதின் எளிமையைக்காட்டும் ப்ரகரணமாகையாலே இரண்டையும் சொன்னால் உபாயகு₃ருத்வம் தோற்றுமென்று, த்ரௌபதியின் மானஸப்ரபத்தியை 'ஶரணமென்னும் உக்தி' என்று கூறி அதையிட்டுத் திருநாமத்தை உபலக்ஷிக்கிறார் என்று கொள்வது முதல்வழி. (2) "ச₂த்ரிணோ க₃ச்ச₂ந்தி" என்கிற ரீதியிலே நிர்வஹிப்பது இரண்டாவது வழி. குடைபிடித்துச் செல்கின்றவர் சிலரும். அவர்களையொட்டிக் குடைபிடிககாமலே செல்கின்றவர்கள் சிலரும் போகும்போது அனைவரையும் "ச₂த்ரிணோக₃ச்சந்தி' [குடைபிடித்தவர்கள் போகின்றார்கள்] என்று கூறுவதுண்டு. அதுபோலவே இங்கும் ஶரணோக்தியின் பலன்களோடு திரௌபதிக்குக்கிடைதத திருநாமததின பலனொன்றையும் சேர்தது ஶரணோகதியின பலனாகக் கூறுவதாகவும் கொள்ளலாம். "ருதம் பிப₃ந்தௌ" [கட 1-3-1] என்று ஒரு வேதவாக்கியம் பரமாத்மஜீவாத்மாக்களிருவரையும் கர்மபலத்தை அனுபவிப்பவர்கள் என்று கூறிற்று. "கு₃ஹாம் ப்ரவிஷ்டாவாத்மாநௌ ஹி தத₃த₃ர்ஶநாத" [ப்ரஹ்மஸூ 1-2-11] என்னும் ப்ரஹ்மஸூத்ரத்தின் பாஷ்யத்தில், இவ்வாக்கியம் எப்படியொட்டும் என்று ஆசங்கித்துக்கொண்டு ச₂த்ரிந்யாயத்தாலே பொருந்தவிடலாம் என்று ஸ்ரீபாஷ்யகாரர்

*நிர்வஹித்தார். அதுபோலவே இங்கும் ஸூத்ரிந்யாயத்தாலே ஶரணாகதிக்குக் கிடைத்த பலன்களோடு அதனால் கிடைக் காத பலனான மானஸம்ரக்ஷணத்தையும் சேர்த்துக் கூறுவ தாக நிர்வஹிக்கலாம். இவ்வண்ணமாக சாஸ்திரஜ்ஞர்கள் இசைந்தமுறையிலே இரண்டுவிதமாக நிர்வஹிக்கக்கூடிய தாயுள்ளது இந்த ஸ்ரீஸூக்தி. இந்த ஸ்ரீஸூக்திக்கு ஸர் வஸ்வகாரர் கருதுவதுபோல் பொருள்கொண்டால், அவரே இசைந்துள்ளபடி பற்பல (ஆயிரக்கணக்கான) ஆசார்ய ஸ்ரீஸூக்திகள் ரஸோக்தியாகவும், சாடூக்தியாகவும், ஆரோப வாதமாகவும், உக்திசமத்காரமாகவும் ஆகின்றன.* **இவ்வொரு ஸ்ரீஸூக்தியில் ஶரணாகதியைத் திருநாமத்துக்கும் உபலக்ஷண மென்றே, சத்ரிந்யாயத்தாலோ பொருள்கொள்ளும் சிறு அஸ்வாரஸ்யத்தை ஸஹித்துக்கொள்வது சிறந்ததா. உபா யாந்தரங்களுக்கு ஸாதனத்வத்தை அருளும் ஆயிரக்கணக் கான ஆசார்ய ஸ்ரீஸூக்திகளையும், வாச்யத்தைக் காட்டிலும் வாசகத்துக்கு ப்ரபாவத்தைக் காட்டும் முமுக்ஷுப்படி ஸூத் ரங்களையும், ஈடு (3-3-6) ஸ்ரீஸூக்திகளையும், த்ரௌபதி ப்ர பத்தியினாலே உடனே பல பலன்களைப்பெற விரும்பினா ளென்றும் திருநாமம் வஸ்திரவிருத்தியை மாத்திரம் அளித்த தென்றும், ப்ரபத்திக்கு அவள் விரும்பிய மற்ற பலன்கள் நீண்டநாள் கழித்துக் கிடைத்தனவென்றும் கூறும் பாரதாதி தனிச்லோக ஸ்ரீஸூக்திகளையும் பொருளற்றவையாகவும், சாடூக்திகளாகவும், ஆரோபவாதங்களாகவும் கொள்வது சிறந்ததா என்பதை விவேகிகள் ஆராய்ந்து கொள்வது.** *முற்கூறியபடி சாஸ்திரஜ்ஞர்கள் இசைந்த இரண்டு வழி களில் நிர்வஹிக்கக்கூடிய இந்த ஈட்டு (6-10-1) ஸ்ரீஸூக் தியை வ்யாவர்த்திப்பதற்காகவே ஸம்ரக்ஷணம் 21-வது பாராவின் கடைசியில் "ஓராசார்யராவது ஓரிடத்திலாவது வஸ்திரவிருத்தியை மாத்திரம்* **தனியே எடுத்து** *சரணாகதி யின் பலனாகச்சொல்லவில்லை" என்றும், 43-வது பாராவில் நாம் செய்துள்ள முதல் ப்ரதிஜ்ஞையில்* **"வஸ்திரவிருத் தியை மாத்திரம் தனியே எடுத்து** *ஓராசார்யராவது ஒரு மூலையிலாவது இது சரணாகதியின் பலனாகக்* **கிடைத்தது** *என்று எழுதியிருப்பதாக ஸமீக்ஷணகாரர் காட்டிவிட்டா ரானால்......"* என்றும் *நாம் எழுதியிருப்பதைக் குறிக் கொள்வது.* வஸ்திரவிருத்தியையாவது, *அதன் முக்ய பேதமேயான மானஸம்ரக்ஷணத்தையாவது* **தனியே எடுத்து**

ஓராசார்யராவது ஒரு மூலேயிலாவது இது சரணுகதியின் பலனுகக கிடைத்தது என்று அருளியிருப்பதைக் காட்டி நம்மை வெற்றிகொள்ள ஸர்வஸ்வகாரர் முயலவாராக.

73. பாரா 112-ல் எடுக்கப்பட்ட ஈட்டு ஸ்ரீஸூக்தியில ஸர்வஸ்வகாரர்க்கே பா$_3$த$_4$கமுள்ளது. திரௌபதியானவள் தன் சரணுகதிககுப் பலனுகப் பல பலன்களே விரும்பினுள் எனறும், திருநாமம் கொடுதத வஸ்திரவிருததியைத் தவிர்த்த மற்ற பலன்களை எமபெருமான் நீண்டநாள் கழிந்தபின் சரணுகதி பலனுகக் கொடுத்தான் என்றும் பாரதாதி தனிச்லோகத்தில் பெரியவாச்சான்பிள்ளை உபபாதித்திருப்பதை அடியோடு புறக்கணித்து, திரௌபதி மானஸம்ரக்ஷணத்தைத்தவிர வேறு எப்பலனேயும் விரும்பவில்லை என்று எழுதிச்செலகின்ருர் ஸர்வஸ்வகாரர். இந்த ஈட்டு ஸ்ரீஸூக்தியும் ஶரணம் என்னும் உக்தி நெஞ்சிலே கிடந்ததாலேயே நீண்டநாள் கழித்துப் பல பலன்களை எம்பெருமான திரௌபதிக்கு அருளியதை நிரூபிக்கின்றது. ஆகவே இதிலிருந்தும் திரௌபதி தன் சரணுகதிக்குப் பலனுக அப்பலன்களேயெல்லாம் விரும்பியிருந்தாள் என்று விளங்குகிறது, ஆகையால் இந்த ஸ்ரீஸூக்தியும் ஸர்வஸ்வகாரர்க்குக் கண்டே$_2$க$_3$டு$_3$வேயாகும்.

74. பாரா 114-ல் "த்ரௌபதி திருநாமஞ்சொல்ல கோவிந்தா எனறவாறே" என்ற ஈட்டு (3-3-6) ஸ்ரீஸூக்தியைத் தமக்கு ஸாத$_4$கம் போலே எடுக்கிருர். 'திருநாமஞ்சொல்ல' என்றதற்கு 'உபாயபுத்தியோடு திருநாமத்தைச் சொலலுவதற்காக' என்று பொருள்கொள்ளாவிட்டால் புநருக்தி பரிஹாரம் ஏற்படவழியில்லை என்பதை உணர்வாராக. இப்ரகரணத்தின் கடைசியிலுள்ளதும், இவர் எடுச்காமல் விட்டிருப்பதுமான "அஸங்க$_3$தமாக இரண்டு சப்தங்களேச் சேர்த்துச் சொன்னல் விஷஹரணத்துக்கு உடலாகாநின்றதிறே சப்தசக்தியாலே; அவ்வோபாதியும போராமையில்லேயிறே திருநாமம்" என்னும் ஸ்ரீஸூக்தியில் விஷஹரணமந்த்ரஸ்தலத்திற்போலே திருநாமமே தன் சக்தியாலே புடைவையைச்சுரந்ததென்று அத்யாதரத்துடன் நிரூபிப்பதன் மூலம் ஸர்வஸ்வகாரரின் ரஸோக்திவாதத்தை அடியறுத்துவிட்டார் நம்பிள்ளை என்பதையும் உணர்வாராக. இவ்வளவால் ஸர்வஸ்வம் ஆறுவது பரிச்சே$_2$த$_3$மும் நிரஸிக்கப்பட்டது.

## ஸாரமான ப்ரச்னங்கள்

75. இதுவரையில் நாம் உபபாதித்து வந்திருக்கும் விஷயங்களிலிருந்து தேறுகின்றவையும், அவர் அவசியம் பதில் சொல்லித்தீரவேண்டியவையுமான ஸாரமான சில ப்ரச்னங்களை ஸர்வஸ்வகாரரை முன்னிலைப்படுத்திக் கேட்கின்றோம். அவற்றையாவது அவர் அடைவே இலக்கமிட்டு அநுவதித்து பதிலுரைக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம்.

(1) பாரதாதி தனிச்லோகத்திலும், திருவிருத்தம் (33) நம்பிள்ளையீட்டிலும், திருவாய்மொழி (6–10–1) ஈட்டிலும் திரௌபதியானவள் தன் சரணாகதிக்குப்பலனாகப் பற்பல பலன்களை உடனே பெறவேண்டுமென்று தன் நெஞ்சாலே நினைத்தாளென்றும் அவற்றை நீண்டநாள் கழித்துப் பெற்றாள் என்றும் முக்தகண்டமாக நிரூபித்திருப்பதை தேவரீர் ஏற்றுக்கொள்கிறீரா இல்லையா? ஏற்றுக்கொள்ளமாட்டேன் என்று உரைப்பீராகில், தேவரீரோடு விவாதம் செய்வதற்கே ஸ்ரீவைஷ்ணவர்கள் எவரும் முன்வரமாட்டார்கள் என்பதை உணர்வீராக. ஆகையால் 'ஏற்றுக்கொள்ளுகிறேன்' என்றே தேவரீர் சொல்லித்தீரவேண்டும்.

(2) கண்ணன் பாண்டவர்களை வனவாஸத்தில் சந்திக்க முதல்தடவை வரும்போது "நீயும் என்னை ரக்ஷிக்கவில்லை" என்று திரௌபதி கதறியமையாலும் "**ஸாஹம் கேசக்₃ரஹம் ப்ராப்தா**" என்னும் ச்லோகத்தாலும் தான் விரும்பிய பலன்களை உடனே பெறவில்லை என்னும் குறையிருந்ததென விளங்கவில்லையா? இதிலிருந்தும் திரௌபதி சரணாகதிபலனாகப் பற்பல பலன்களை உடனே பெற விரும்பியிருக்கிறாள் என்று ஸித்திக்கவில்லையா?

(3) இப்படிப் பற்பல பலன்களைப் பரமார்த்தியோடு உடனேபெறதிரௌபதி விரும்பியிருக்கையில் வஸ்திரவிருத்தியொன்றைத் தவிர மற்றவையனைத்தையும் ஏன் நெடுநாள் கழித்துப் பெற்றாள் என்பதற்கு தேவரீரால் ஏதாவதொரு காரணம் சொல்ல முடியுமா?

(4) பரமார்த்தியோடு திரௌபதியானவள் கண்ணன் நேரேவந்து பற்பல பலன்களை அளிக்கவேண்டுமென்று 'ஶங்கசக்ரகதாபாணே' முதலான பதங்களைச் சொல்லும்போது கருதியதாகத் தேறுகையில், தேவரீர் கருத்துப்படி உபாயாந்தரஸம்பந்தமும் ஏற்படாமலிருக்க கண்ணன்

அப்படி நேரே வந்து அப்பலன்களில் ஒன்றையும் அளிக்கா மையால் ப்ராஞ்ஞக்த ஸம்ரக்ஷணமாகிற பெரிய பகவத்குணவைபவத் திற்கு ஹானி வருவதை எப்படிப் பரிஹரிப்பீர்?

(5) இந்த பகவத்குண ஹானியைப் பரிஹரிப்பதற் காகவே. திரௌபதி திருநாமஞ்சொல்ல கோவிந்தா என்ற ருள் என்றும், அந்நாமமே தன் சக்தியாலே புடைவைசுரந்து விட்டதென்றும், (சாஸ்திரபரதந்திரனை) கண்ணன் அப் போது ஒன்றும் செய்யமுடியவில்லையென்றும், (த்$_3$ரௌபத$_3$ யா ஸஹிதா: என்றவிடத்தில் ப்ராயச்சித்தப்ரபத்தியனுஷ் டித்த பிறகு) நீண்டநாள் கழித்துக் கண்ணன் திரௌபதி விரும்பிய எல்லாப் பலன்களையும் கொடுத்தான் என்றும் பொருள்படும்படியான ஸ்ரீஸூக்திகளை ஆசார்யர்கள் அருளி யிருப்பதை எதற்காக ரஸோக்திகளென்றும், சாடூக்திக ளென்றும், ஆரோபவாதமென்றும் உக்திசமத்காரமென்றும் கூறி பகவத்குண ஹானியை விளைக்கவேண்டும்?

(6) த்ரௌபதிக்கு உபாயாந்தர ஸம்ஸர்க்கமாகிற பெருந்தோஷம் வாராமைக்காகப் பற்பல ஆசார்ய ஸ்ரீஸூக்தி களை ஆரோபவாதமென்று கொள்ளவேண்டுமென்று கூறு வீராகில், சில நிமிஷங்களுக்குப் பின் அந்த திரௌபதிக்கே திருதராஷ்ட்ரன் முதலான க்ஷாத்ரர்களைப் பற்றுகை யாகிற 'மிகப்பெரிய' தோஷத்தை வியாஸரே காட்டியிருப் பதை எப்படிப் பரிஹரிப்பீர்? ஆபத்துக்காலத்தில் ஏற் பட்ட உபாயாந்தர ஸம்பந்தமாகையாலே இது பெரிய தோஷமன்று என்று தானே தேவரீரும் சொல்லித்தீர வேண்டும்.

(7) அதுபோலவே பகவத்குணத்தையும், பற்பல ஆசாரயஸ்ரீஸூக்திகளையும் ஸம்ரக்ஷிப்பதற்காக திரௌபதிக் குப் பரமாபத்துக்காலத்திலே புடைவை சுரந்ததற்கு முன் க்ஷணத்தில் கோவிந்தநாமஸங்கீர்த்தனமாகிற உபாயாந்தர ஸம்பந்தத்தை ஒப்புக்கொள்வதும் பெரிய தோஷமன்று என்று கொள்ளக் குறையென்ன?

(8) திரௌபதியானவள் 'ரக்ஷமாம்' என்றவிடத்தில் எந்த துச்சாஸனதியரிடமிருந்து ரக்ஷையைக் கண்ணனிடம் விரும்பினளோ, அதை உடனே பெறுமையாலேயே அந்த துச்சாஸனதியராலே மறுபடியும் பரிபவப்பட்டு பீஷ்மாதி களை அந்த துச்சாஸனதியரிடமிருந்தே ரக்ஷிக்கவேண்டு மென்று பற்றியதற்கும் பிறகு ப்ராய்ச்சித்த ப்ரபத்தியை

அனுஷ்டித்தாள் என்று காட்டினால்தானே நெடுநாள் கழித்து ப்ரபத்தியின் மற்ற பலன்கள் ஏற்பட்டன என்று தேவரீரும் கூறமுடியும்?

(9) திரௌபதி பற்பல பலன்களை விரும்பியிருக்கும் போது பெரியவாச்சான்பிள்ளை உடனே பெற்ற பலனை புடைவை சுரந்ததை மாத்திரம் பொறுக்கியெடுத்து அதைத் திருநாமம் செய்தது என்று கூறியதற்கும் மற்ற பலன்களை ஶரணாகதி பலனாகப்பிறகு அளித்தான் என்று கூறியதற்கும் நியாமகமென்ன?

(10) பெரியவாச்சான்பிள்ளை, நம்பிள்ளை, உலகாசிரியர் முதலான எந்த ஆசார்யரும் புடைவை சுரந்ததையோ அதன் முக₂பே₄த₃மான மானஸம்ரக்ஷணத்தையோ எடுத்து விசாரிக்கும்போது அதைத் திருநாமத்தின் பலனாகவே கிடைத்ததென்று நிரூபிப்பதற்குக் கருத்தென்ன? எந்த ஆசார்யராவது வஸ்திரவிருத்தியை தனியே எடுத்து அதை சரணாகதியினால் ப்ராப்தம் என்று அருளியிருக்கிறார்களா?

(11) திருநாமமும் ப்ரபத்தியும் ஒன்றானகையாலே வஸ்திரவிருத்தியைத் திருநாமத்தால் ப்ராப்தமாகக் கூறினார்களெனில் திருநாமமும் ப்ரபத்தியும் ஒன்றென்று எந்த ஆசார்யராவது எங்கேயாவது கூறியிருக்கிறார்களா? ப்ரபத்தி பலன்களைத்திருநாமபலனாகவேறெங்காவது அருளியதுண்டா?

(12) த்ரௌபதி முக்கியமான மானஸப்ரபத்தியையே செய்திருக்கும்போது, கௌணமான வாசிகப்ரபத்தியின் அவச்யாபேக்ஷிதமல்லாததோர் பகுதியான கோவிந்தநாமம் பலனளித்ததாகக் கூறுவது பொருந்துமா?

(13) ப்ரபத்தியை ஒரு தடவையே செய்யவேண்டுமென்று சாஸ்திரவிதியிருக்கும்போது, "த்₃ரௌபத்₃யா ஸஹிதா:" என்றவிடத்திலே சத்ருநிரஸன பூர்வகமான ராஜ்யப்ராப்திக்காக தர்மபுத்ராதிகளோடு கூட திரௌபதி மறுபடியும் சரணம் புகுந்தாள் என்று கூறுவது தேவரீர்க்கு எப்படிப் பொருந்தும்?

(14) ஆர்த்தப்ரபத்திக்கு உடனே பலன்வரக்காணமையால், "கோ₃விந்தேதி" என்ற ச்லோகத்தையும் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளையும் அடியொற்றி உபாயாந்தரஸம்பந்தத்தால் த்ரௌபதீப்ரபத்தி தடைபட்டதென்று எவரும் ஒப்புக் கொண்டே தீரவேண்டும். பீஷ்மாதிகளைப் பற்றியிருப்பதும் இம்முடிவுக்கே வரச்செய்கிறது. ஆசார்யர்களோ ஏககண்ட

மாகத்ரௌபதீப்ரபத்தி பிறகு பலனளித்ததாகக கூறுகிறூர் கள். மேலெழுப்பார்க்கும்போது பொருந்தாதவையாகத் தோன்றும் இவ்விரண்டு அர்த்தங்களையும் பொருந்த விடு கைக்கு, அர்த்தாபத்தி ப்ரமாணத்தின்படி இடையே ப்ராயச் சித்தப்ரபத்தியைக் கற்பிக்கத்தானே வேண்டும்? 'த்ரௌ பத்யா ஸஹிதா:'' என்னும் ச்லோகம் த்ரௌபதி விஷயத்தில் இப்ராயச்சித்த ப்ரபத்தியைக் கற்பிக்க இடமளிக்கும்போது, அந்தச்லோகம் தர்மபுத்ராதிகளின் முக்யப்ரபத்தியைக் கூறுவதோடு த்ரௌபதியின ப்ராயச்சித்த ப்ரபத்தியையும் கூறுகிறது என்று கொண்டால குறையென்ன?

**(15)** முமுக்ஷுப்படியில் (மாமுனிகளின் வியாக்கி யானத்திற்கு விருத்தமாக) ''ப்ரபத்தியின் பெருமையைக் காட்டுவதற்காக அதன ஏகதேசமான திருநாமத்தின் பெருமையைக் காட்டுகிறூர் பிள்ளைலோகாசார்யர்'' என்று பொருள்பட எழுதுகிறீர். திருநாமத்துக்கு இங்கு கூறப் படும் பெருமை ஆரோபவாதமேயொழிய உண்மையன்று என்றும் எழுதுகிறீர். அவயவமான திருநாமத்துக்கு ஆரோபித்துக் கூறப்படும் பெருமையால அதன் அவயவி யான ப்ரபத்திககு என்ன பெருமை ஸித்திக்கும்? இப்படி ப்ரபத்திக்குப் பெருமை ஸித்திககாதவளவில் அதற்கு வாசக மான திருமந்திரத்திறகுப் பெருமை ஸித்திக்காதே. ஆகையால் தேவரீர் கூறுகிறபடி பொருள் கொண்டால் இந்த ப்ரகரணம் முழுவதும பொருந்தாப் பேச்சாகவன்றே ஆகிவிடுகிறது.

**(16)** இதைப் பரிஹரிப்பதற்காக, ''பகவான் உதவாம லிருந்தபோது ப்ரபத்தி உதவிற்று'' என்று ப்ரபத்திக்கு உள்ளபெருமையே இங்கு உரைக்கப்படுகிறது என்று கூறுவீ ராகில் ஸித்தாஞ்ஜனம் பாரா 4-ல் நிரூபித்தபடி முமுக்ஷுப் படி ஸூத்ரம் முன்னுக்குப்பின் முரணைப் பேசுவதாக ஆகிவிடுகிறதே! இதை எப்படிப் பரிஹரிப்பீர்?

**(17)** இதைப்பரிஹரிக்கவேண்டுமானல் ''ப்ரபத்திக்கு ஒருவிதமான உபாயத்வம் உண்டு'' என்றே சொல்லித்தீர வேண்டும். தென்னாசார்யஸம்பிரதாயத்திற்கு நேர் விருத்த மான இப்பரிஹாரத்தைத் திருவுள்ளம் பற்றப்போகிறீரா?

**(18)** ''த்ரௌபதிக்குப் பலம் வஸ்த்ரம்'' என்றதை உள்ளடக்கிய ஸ்ரீவசநபூஷண ஸூத்ரத்தின் முன்பின் பகுதி

சளிலிருந்தும், அதன் வ்யாக்யானத்திலிருந்தும் "த்ரௌபதீ ப்ரபத்திக்கு நிஷ்பாத்₃யம் (அல்லது உத்₃தி₃ஷ்டப₂லம்) வஸ்த்ரம்" என்று தெளிவாக விளங்கும்போது, "அப்ர பத்திக்கு நிஷ்பந்நம் (அல்லது ப்ராப்தப₂லன்) வஸ்திரம்" என்று தேவரீர் பொருள்கொள்வது நியாயமா?

**(19)** அப்படிப் பொருள்கொண்டால், இந்த ஸ்ரீவசன பூ₄ஷண ஸூத்ரத்திற்கும், முமுக்ஷுப்படி ஸூத்ரத்துக்கும், அடியேன் கருத்துப்படி நேரே விரோதமோ. தேவரீர் கருத்துப்படி மேலெழத்தோன்றும் விரோதமோ ஏற்படுகிறது: தேவரீர் ஸர்வஸ்வம் நாலாவது பரிச்சேதத்தில் நிரூபித்துள்ள படி இவ்விரோதத்தை மாமுனிகள் எடுத்துக் கழித்திருக்க வேண்டும். அப்படி மாமுனிகள் செய்யாததிலிருந்து மாமுனி கள் இரண்டு ஸூத்ரங்களுக்கும் விரோதமிருப்பதாகத் திருவுள்ளம் பற்றவேயில்லை என்று விளங்கவில்லையா?

**(20)** ப்ரச்னம் 18, 19-ல் ஏற்படும் விரோதங்களைப் பரிஹரிப்பதற்காக, '(மாமுனிகளையொட்டி) நான் த்₄ரௌ பதிக்கு நிஷ்டாத்யம் அல்லது உத்₃தி₃ஷ்டப₂லம் வஸ்த்ரம் என்றே பொருள்கொண்டு விடுகிறேன்' என்று கூறுவீ ராகில், அபோது முமுக்ஷுப்படி ஸூத்ரத்துக்கும், ஸ்ரீவசந பூஷண ஸூத்ரத்துக்கும் மேலெழத்தோன்றும் விரோதமு மில்லையாகையாலே, இல்லாத விரோதத்தைப் பரிஹரிப்ப தற்காக எதற்காக (எந்த ஆசார்யரும் வித்வானும் இது வரையில் செல்லாத வழியில் சென்று) திருநாமத்தையும் ப்ரபத்தியையும் ஒன்றென்று கொண்டு முமுக்ஷுப்படி ஸூத் ரங்களைப் பொருளற்றதாக்க வேண்டும்?

**(21)** "த்ரௌபதி திருநாமஞ்சொல்ல கோவிந்தா என்றவாறே" என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தியில் புனருக்தி பரிஹாரத்தை எப்படிச் செய்வீர்?

**(22)** "நம்பேர் தன் கார்யம் செய்ததித்தனைபோக்கி நாம் ஒன்றும் செய்திலோமிறே" என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தியில் பேரை ப்ரபத்தியென்று கொண்டால் நம் ஸம்பிரதாயப்படி முன்னுக்குப் பின் முரணானதும், விரஸமானதுமான அர்த் தமே ஸித்திக்கும்போது அதை எப்படி ரஸோக்தி என்கிறீர்? "ப்ரபத்தி தன் கார்யம் செய்ததேயொழிய எம்பெருமான் ஒன்றும் செய்யவில்லை" என்று நம் ஆசார்யர்கள் எங்கே யாவது அருளியிருப்பதைக் காட்டமுடியுமா?

**(23)** 22-ல் எடுக்கப்பட்ட ஈட்டு ஸ்ரீஸூக்தியில் பேர் தன் கார்யம் செய்தது என்று அருளியதை 'அஸங்கதமாக இரண்டு சப்தங்களைச் சேர்த்துச்சொன்னால் அது விஷஹரணத்திற்கு உடலாகாதினை றதிறே சப்தசக்தியாலே; அவ்வோபாதியும் போராமையில்லையிறே திருநாமம்" என்னும் அடுத்த வாக்யத்தில் நம்பிள்ளைதாமே அந்யபரநிவேசத்துடன் நிரூபித்திருக்கும்போது ரஸோக்திவாதம் எப்படிப் பொருந்தும்? சப்தசக்தியாலே பலனளிப்பதென்பது திருநாமஸங்கீர்த்தனமாகிற உபாயாந்தரஸ்தலத்தில்தானே ஓட்டும்? ப்ரபத்திஸ்தலத்தில ஓட்டாதே; இவ்விரோததை எப்படி பரிஹரிப்பீர்?

**(24)** ஆயிரக்கணக்கான வாக்யங்களில் திருநாமம் முதலான உபாயாந்தரங்களுக்கும், திவ்யமங்கள விக்ரஹத்திற்கும் நம் ஆசார்யர்கள் உபாயத்வத்தை ஸாதித்திருக்கிறார்கள். உபாயாந்தரங்களுக்கும், விக்ரஹத்திற்கும் உள்ளதான ப$_2$லகரணத்வதைக் கூறுகின்றன என்று கொண்டு இவ்வாக்கியங்களைப் பொருளுடையதாக்க இடமிருக்கும் போது, அவற்றில் இல்லாததான ப$_2$லப்ரத$_3$த்வத்தை இவ் வாக்யங்கள் அவற்றில ஏறிட்டுக்கூறுகின்றன என்றுரைத்து அவ்வாக்யங்களை தேவரீர் பொருளற்றதாக்குவதேன்?

76. இந்த இருபத்துநாலு கேள்விகளையும் ஒன்று விடாமல் அப்படியே அச்சிட்டு, ப்ரமாண யுக்திகளைக்காட்டி அவற்றுக்குத் திருப்திகரமாக ஸர்வஸ்வகாரர் பதிலுரைத்து விட்டாரானால் நம்முடைய கொள்கையை மாற்றிக்கொள்ள நாம் ஸித்தமாயிருக்கிறோம். உபயவாதிகளும் 'தன் பக்ஷம்' என்னும் அபிமானத்தால் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளை கௌ$_3$ணமாக்காமல், முக்$_2$யார்த்தமாக்கி ஸம்ரக்ஷிப்பதொன்றிலேயே நோக்குடையவர்களாயிருக்க வேண்டியது அவசியம். ஆகையால், 'தன் பக்ஷம்' என்னும் அபிநிவேசமில்லாமல், எந்தப்பக்ஷமானது பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கு ஒத்திருக்கின்றதோ அதை ஏற்றுக்கொள்வதே அறிவாளிகளுக்குத்தக்கது. இப்படி ஏற்றுக்கொள்வதால் கௌரவஹானி ஒன்றுமில்லை. நேர்மாறாக ப்ராமாணிகத்வமும் அதனால் ஏற்படும் விசேஷகௌரவமுமே பொலியும்.

த்ரௌபதீப்ரபத்தி ஸித்தாஞ்ஜந ஸம்ரக்ஷணத்தில்
இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# த்ரௌபதீப்ரபத்திஸித்தாஞ்ஜநஸம்ரக்ஷணம்

## மூன்றாவதான கடைசி அத்தியாயம்

77. இன்று (18—6—63) "அம்ருதலஹரீ" கிடைத்தது. அதில் ஸர்வஸ்வம் ஐந்து ஆறாவது பரிச்சேதங்களுக்கு மேலே, நாலே பக்கங்களையும், ஒன்பது பாராக்களையும் கொண்ட ஸர்வஸ்வம் ஏழாவது பரிச்சேதத்தையும் வெளியிட்டு, ஸர்வஸ்வநூலை முடித்திருக்கிறார் ஸர்வஸ்வகாரர். இப்பரிச்சேதத்தில் நம்முடைய விஷயவிசாரங்கள் ஒன்றையும் தொடவேயில்லை. நம்முடைய இருபத்துநாலு கேள்விகளை அச்சிடவும் துணியவில்லை. அவை பொருளற்ற கேள்விகள் என்று பரிஹஸிப்பதோடு க்ருதக்ருத்யராகி விட்டதாக நினைத்தார் போலும்! இப்பரிச்சேதத்தில் விரகர் நெடுஞ்சுவர் தள்ளும் கணக்கிலே நம்முடைய பக்ஷத்தைத் தள்ளிவிட்டதாக எழுதுகிறார் 116-வது பாராவில். எலியெலும்பனொருவன் மதிளைத்தள்ள நினைத்து அதிலேமோதி மொத்துண்டு விழுந்து, 'மதிளைத்தள்ளிவிட்டேன்' என்று பெருமை பேசிக்கொண்ட கணக்கிலேயே இப்பரிச்சேதம் அமைந்துள்ளது என்று நிரூபிப்போம் இனி.

78. 117, 118 பாராக்களில், ஸ்ரீவசநபூஷணத்திலும், அதன் வியாக்கியானத்திலும் உபாயநிஷ்டைக்கு உதாஹரணபூதையாக எடுக்கப்பட்டிருக்கும் திரௌபதிக்கு உபாயாந்தர ஸம்பந்தத்தைக் கூறுவது **அநுவதிக்கவும் தகாத அவத்யம்** என்று எழுதுகிறார். சரணமடைந்த சில நிமிஷங்களுக்குள்ளேயே திருதராஷ்ட்ரன் முதலானோரைப் பற்றுகையாகிற 'மிகப்பெரிய அவத்யம்' திரௌபதிக்கு நேர்ந்திருப்பதை வியாஸரே காட்டியிருக்கிறாரே அதற்கென் செய்வீர் என்று நாம் கேட்டகேள்விக்கு யாதொரு பதிலையும் கூறாமல் இவர் இப்படி எழுதுவதால் ஒரு பயனும் ஏற்படாது. "அத்தனை அளவின் றிக்கேயிருக்கச்செய்தே" என்று திரௌபதி ஸாமாந்யாதிகாரியே என்று காட்டி, "மஹாபத்தசையிலே மஹாவிச்வாஸம் பண்ணி" என்று சரணம் பற்றியபோதிலே மஹாவிச்வாஸத்தோடு லஜ்ஜையை விட்டாள் என்று மாமுனிகள் காட்டியிருப்பதில் நமக்கு எந்த விரோதமும் இல்லை. இந்த ஆசார்யஸ்ரீஸூக்திகள் சரணமடைந்தபோது த்ரௌபதிக்கு ஏற்பட்ட உபாயநிஷ்டையின் பெருமையைக் காட்டுமேயொழிய, அதற்குப்பின் அவள் பீஷ்மாதிகளைப்

பற்றியது முதலானவைகளை இல்லை செய்யமாட்டா. அடுத் தடுத்து வந்த மஹாபதுக்களாலே அறிவுகலங்கி அவள் உபாயாந்தரங்களைப் பற்றியதற்கும் ப்ராயச்சித்தம் செய்து விட்டாள் என்று நாம நிரூபித்திருக்கிறோம். ஆகையால் உபாயநிஷ்டைக்கு ஏறபட்ட இச்சிறு குறைகளும் நீங்கி விட்டன. ஆகையால ஸ்ரீவசநபூஷண தத்வ்யாச்யானங்கள் நமக்குச் சிறிதும் விரோதிக்கமாட்டா.

79. உண்மையில் இவர்க்கே அவை விரோதிக்கின்றன. திரௌபதி ரஜஸ்வலையாயிருந்தமையால் கண்ணபிரான் நேரில எழுந்தருளவில்லை என்று பொருள்பட பாரா 118ல் கூறி, ஒரு விரஸக்கதையையும் எழுதுகிறார். "த்₃ரௌபதி ஸ்நாதையாயன்றே ப்ரபத்தி பண்ணிற்று" என்னும் ஸ்ரீவசந பூ₄ஷணஸூத்ரத்தில ப்ரபத்தி செய்வதற்கு ரஜஸ்வலா வஸ்தை₂ தடையன்று என்று காட்டப்பட்டது. அதிலேயே ப்ரபத்திக்குப் பலநியமமில்லை என்றும் காட்டப்பட்டது. ஆகையால், கண்ணன் நேரே எழுந்தருளிப் பலபலன்களையும் உடனே அளிக்கவேண்டும் என்று எண்ணி திரௌபதி சரணமடைந்தது உடனே பலிக்காமைக்கு, ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை அடியொற்றி உபாயாந்தர ஸம்பந்தத்தைக் கொள்வதைததவிர வேறுகாரணம் எதுவும் எவராலும் கூற முடியாது. ரஜஸ்வலையாகையாலே கண்ணன் நேரே வர வேண்டுமென்று விரும்பியிருக்க ஔசித்யலேசமுமில்லை என்றும், நேரே வந்திருந்தானாகில் கண்ணன் அசடனாக வேண்டிவரும் என்றும் இவர் எழுதுவதே, நேரே வர வேண்டுமென்று விரும்பினாள் என்று பலகால் காட்டும் தனிச்லோக ஸ்ரீஸூக்திகளோடும் ப்ரபத்திக்கு ப்ரகாரநியதி யில்லை, பல நியமமில்லை என்று காட்டும் ஸ்ரீவசநபூஷண தத்வ்யாக்யான ஸ்ரீஸூக்திகளோடும் விரோதிக்கும்.

80. பாரா 120 முதல் 123 முடிய, திவ்யப்ரபந்த வ்யாக்யானங்களில் சப்தஸமபிவ்யாஹாரபலத்தாலே சில ரஸோக்திகளையும், அதிசயோக்திகளையும் வ்யாக்யாதாக்கள் வ்யாக்யானங்களிலே அருளிச்செய்திருப்பதைக்காட்டி இவை போலே த்ரௌபதீ சரணாகதி ச்லோகத்தில் பெரியவாச்சான் பிள்ளை அருளிய பொருள்களில் பலவும் ரஸோக்திகளே என்று கூறுகிறார். இது சிறிதும் பொருந்தாது. திருவாய் மொழியில், "ஆருமதயானை அடர்த்தவன் தன்னை சேறூர்வயல தென்குருகூர்ச்சடகோபன்" என்ற பாசுரத்தில், "குவலயா

பீடம் அழிந்தவுடன் திருநகரியில் வயல்கள் பீடையொழிந்து ஸம்ருத்திபெற்றன" என்று வியாக்கியானம் செய்திருப்பது ரஸோக்தியையாலும். 'பகவத்பாகவதவிரோதிகள் ஒழிந்தால் நாடெல்லாம் வாழும்' என்னும் ரஸமான அர்த்தம் அதிலிருந்து ஸித்திக்கிறது. இதுபோலவே, "கடியனாய்க் கஞ்சனைக்கொன்ற பிரான் தன்னைக் கொடிமதிள் தென்குருகூர்ச்சடகோபன்" என்ற பாசுரத்தின் வ்யாக்யானங்களிலும் 'கம்ஸவிஜயத்துக்குக் கொடிகட்டிற்று திருநகரியாய்த்து' என்றருளியது ரஸோக்தியையாலும். 'பகவத்பாகவத விரோதி ஒழிந்ததை பகவத் ஸம்பந்தமுள்ள தேசமெல்லாம் கொண்டாடும்' என்னும் ரஸமான அர்த்தம் அதிலிருந்து ஸித்திக்கும். 'மீன் நோக்கு நீள் வயல் சூழ்" என்னும் பாசுரத்தில், "கடல் வற்றினால், கடலில் மீன்கள் வித்துவக்கோட்டு வயல்களைப் புகலிடமாக நினைத்திருக்கும்" என்று அதிசயோக்தியாக வியாக்கியானம் செய்ததும் வித்துவக்கோட்டு வயல்களின் ஜலஸம்ருத்தியாகிற தத்துவத்தை உணர்த்தவந்ததாகும். சரணாகதி ச்லோகத்திலே திரௌபதி கண்ணனை நேரேவந்து பலபலன்களையும் தரவேண்டுமென்று விரும்பினாள் என்று பெரியவாச்சான்பிள்ளை அருளியிருப்பதை ஒரு காரணமுமில்லாமல் இவர் கூறுவதுபோல் ரஸோக்தியாகவும், அதிசயோக்தியாகவும் கொண்டால் ஒரு ரஸமான அர்த்தமும் ஸித்திக்காது. ஒரு தத்துவமும் வெளிப்படாது. பெரியவாச்சான்பிள்ளை திரௌபதி விரும்பாத பலன்களையெல்லாம் அவள் விரும்பியதாக ஏறிட்டுச்சொன்னார் என்னும் அவத்யமே ஏற்படும். திருவிருத்த வ்யாக்யானத்தில் அவலோகநதானத்தை திரௌபதி உடனேபெற விரும்பியதாகக்காட்டும் நம்பிள்ளைக்கும். "(சங்கசக்ரக$_3$தாபாணே) என்கையில் வளையோபாதியோ உன்கையில் ஆயுதமும்? என் பரிப$_4$வத்தைப் போக்குதல் உன் திருவாழியைப் போக்குதல் செய்ய வேணும்" என்று திரௌபதி சத்ருஸம்ஹாரத்தை உடனே பெறவேண்டுமென்று விரும்பினாள் என்று தனித்வயத்தில் அருளியிருக்கும் பிள்ளைலோகாசார்யருக்கும் இந்த அவத்யம் ஏற்படும். இவற்றை ரஸோக்தியென்று சிறுவரும் கூற மாட்டார்கள். பேராபத்துக்காலத்திலே திரௌபதி கதறியதின் கருத்தை விவரிக்கும்போது எந்த ஆசார்யரும் ரஸோக்தியையும், அதிசயோக்தியையும் எழுதமாட்டார். ஒரு வ்யவஸ்தையில்லாமல் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை ரஸோக்தி

*களாகக் கொள்வதென்று தொடங்கினுல் ஸகலவ்யாக்யான ஸூக்திகளும் ரஸோக்திகளாகிப் பொருளற்றவையாகிவிடும். புடைவை சுரந்து மானம் ஸம்ரக்ஷிக்கப்பட்டுவிட்டாலும், எத்தனையோ விதமான அவமானங்களைச் செய்யவல்லவர்கள் துச்சாஸனுதியர் என்பதை திரௌபதி அறியாதவளல்லள். அதனுலேயே அவள் "ஶங்க₂சக்ரக₃த₃ாபாணே" என்றுகதறி முதன்முதலில் சத்ருஸம்ஹாரம் நடைபெறவேண்டுமென்று கூக்குரலிட்டாள். ஆசார்யர்கள் இக்கருத்தை எடுத்துக் காட்டிய பின்பும் இதை ரஸோக்தியென்று கழிப்பது அடுக்காது.* **தனிச்லோகம் முதலானவற்றில் பலபலன்களை திரௌபதி விரும்பியிருப்பதாகப் பெரியவாச்சான்பிள்ளை முதலானுர் அருளியிருப்பதில் [இவர் எடுத்திருக்கும் பாசுர வ்யாக்யானங்களில் காண்பது போலே] ஒரு பொருந்தாமையும் இல்லாமல் பல பொருத்தங்கள் இருக்கும்போது, அவற்றை எதற்காக ரஸோக்திகளாகவும், அதிசயோக்திகளாகவும் கொள்ளவேண்டும் என்னும் ஒரு கேள்விக்குக்கூட இவரால் நேர்மையுடன் பதிலிறுக்கமுடியாது.**

*81. உண்மையில், 'ஆருமதயானை' [திருவாய் 9-4-11] "கடியனுய்க்கஞ்சனை" [திருவாய் 9-6-11] "மீன் நோக்கும் நீள் வயல்" [பெருமாள் திரு 5-3] என்னும் பாசுரங்களின் வியாக்கியானங்களிலும் ஆழ்வார்கள் கருதாதது ஒன்றையும் ஆசார்யர்கள் எழுதிவைக்கவில்லை. முற்கூறியபடி ஒவ்வொரு ரஸமான அர்த்தங்கள் ஸித்திப்பதற்காக ரஸோக்தியாகவும் அதிசயோக்தியாகவும் ஆழ்வார்கள் அருளியவற்றையே வ்யாக்யாதாக்கள் வெளிப்படுத்திஞர்கள் என்பது தெளிவு. இவ்வண்ணமே த்ரௌபதீ சரணுகதிச்லோகத்திலும் த்ரௌபதி கருதியவற்றையே வ்யாக்யாதாக்கள் வெளிப்படுத்தியிருக்கிருர்கள் என்பது வெளிப்படை. ஆழ்வார்களின் அப்பாசுரங்களைப்போலே, பரமாபத்துக்காலத்திலே பரமார்த்தியுடன் கதறியிருக்கும் திரௌபதியின் சரணுகதிச்லோகத்தை ரஸோக்தியாகவோ அதிசயோக்தியாகவோ எவரும் கூறமாட்டார்கள். இவற்றிலிருந்து, திரௌபதி பலபலன்களை உண்மையிலேயே விரும்பினுள் என்றும், அவற்றையேசரணுகதிச்லோகத்தின் ஒவ்வொரு பதத்தின் வியாக்கியானத்திலும் ஆசார்யர்கள் வெளியிட்டார்கள் என்றும் கல்வெட்டாக ஸித்திக்கிறது.*

82. பரமார்த்தியோடு கதறுகின்ற விஷயத்தில், திரௌபதீ சரணுகதிச்லோகத்திற்கு ஒருபுடை ஒப்பாகச் சொல்லலாயிருப்பது திருவாய்மொழியில் "மாயம் செய்யேல்" [திருவாய் 10-10-2] என்று தொடங்கித் திருவாணையிடும் பாசுரமேயாகும். அந்தப் பாசுரத்தின் வியாக்கியானத்தில், "சரணம்புக்க என்னை வஞ்சியாதேகொள்!" "(என்னைக் கூவிக்கொள்ளாய்வந்து) ஆனபின்பு, என்னை ஈண்டென வந்து அணுகப்பாராய்; ஶாஸ்த்ரங்களாலே அறிவிக்குமளவு போராது; குணுவிஷ்காரமாத்ரத்தாலே போராது; ஸாக்ஷாத் கரிக்குமளவு போராது; உன்னைக்கிட்டி அனுபவிக்கும்படி பண்ணவேணும். (அந்தோ) தன்னையொழியச் செல்லாமையைத் தானே விளைத்துக் கூப்பிட வந்து முகங்காட்டாதொழிவதே!" என்று நம்பிள்ளை அருளியிருப்பதை ரஸோக்தியென்றோ, அதிசயோக்தியென்றோ எவராவது கூறுவார்களோ? இது போலவே, திரௌபதீசரணுகதிச்லோகத்தில் பதங்களின் பூ₄ாவவர்ணனம் செய்திருக்குமிடங்களையும் ரஸோக்தியென்றோ, அதிசயோக்தியென்றோ எவரும் கூறமுடியாது.

83. நம்முடைய இருபத்துநாலு கேள்விகளையும் அச்சிடக்கூடத்துணிவில்லாமல், "ஏரண்டோ₃பி த்₃ருமாயதே" என்னும்படியான ஏரண்ட பண்டிதர் ஒருவர், "அச்வினிக்குப் பிறகு பரணியும், பரணிக்குப் பிறகு க்ருத்திகையும் எதனுல் ஏற்பட்டது? ஒரு சதுர்த்தசிக்குப் பிறகு அமாவாஸ்யையும், மற்றொரு சதுர்த்தசிக்குப் பிறகு பௌர்ணமாஸியும் எதனுல் ஏற்பட்டது?" என்று கேட்ட ரீதியிலே நம்முடைய கேள்விகள் அமைந்திருப்பதாகக் கூறிப் பரிஹஸிக்கிறுர். நம் கேள்விகளை அச்சிட்டுவிட்டால், "ப்₃ரஹ்ம த₃ண்ட₃ப்ரகாஶாநாம் வித்₃யுத் ஸத₃ருஶவர்ச்சஸாம் ஸ்மரந் ராக₄வபா₃ணுநாம்" என்கிற ராமபாணங்கள்போலே அவை இவருடைய பக்ஷத்தைத்தாக்குவதைத் தம்முடைய பத்திரிகைகளின் வாசகர்களும் உணர்ந்துவிடுவார்கள் என்று கருதியே அவற்றை அச்சிடவும் துணிவின்றிப் பரிஹஸிக்கிறுர் போலும்!

84. உண்மையில் ரஸோக்தி வித்வான் ஒருவரையே இங்கு நினைக்கத்தகும். ஓர் ஊரில் ஒரு வித்வானிருந்தார். ஓராசார்யஸ்ரீஸூக்தியின் பொருளையும் உள்ளபடி அறியாத அவர், எவராவது ஓராசார்யஸ்ரீஸூக்தியின் பொருளைத்

தம்மைக் கேட்டுவிட்டால், 'இவையெல்லாம் ரஸோக்திகள்; இவற்றுக்குப் பொருள்கிடையாது; என்னைத்தொந்தரவு செய்யாதீர்கள் என்று கூறிவந்தார். இதனாலேயே ரஸோக்தி வித்வான் என்னும் பெயரையும் அவர் பெற்றார். உண்மையில் ஜ்ஞாதாவும் விவேகியுமான ஸர்வஸ்வகாரர், அந்த ரஸோக்தி வித்வானை அநுகரித்து, தம் பக்ஷத்திற்குப் பொருந்தாத தத்வநிஷ்கர்ஷமே வடிவெடுத்த ஆயிரக்கணக்கான ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை ரஸோக்தியென்றும், சாடூக்தியென்றும், அதிசயோக்தியென்றும், ஆரோபவாதமென்றும், உக்திசமத்காரமென்றும் தள்ளமுற்படுவது ஸ்ரீவைஷ்ணவவுலகின் தௌர்ப்பாக்கியமேயாகும்.

85. நூறாண்டுகாலமாக த்ரௌபதீ ப்ரபத்தி விஷயமாக ஏற்பட்ட விவாதங்களை எம்பெருமான் அல்பஜ்ஞனான அடியேனைக் கருவியாகக்கொண்டு முடித்துவைத்து விட்டான். மஹாபாரத ஸந்தர்ப்பங்களை மூலமாகக்கொண்ட மூன்று வகைப்பட்ட ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை அடிப்படையாகக் கொண்டது இவ்விவாதம். (1) த்ரௌபதியானவள் சரணாகதிச்லோகத்தைச் சொல்லும்போது கண்ணன் உடனே நேரே வந்து பற்பல பலன்களை அளிக்கவேண்டுமென்று விரும்பினாள் என்று தனிச்லோகம், தனித்வயம், திருவிருத்த வ்யாக்யானம் முதலானவற்றிலுள்ள பல ஆசார்யஸ்ரீஸூக்திகள் காட்டுகின்றன. (2) அப்படி உடனே பெறவிரும்பிய பலன்களை உடனே பெறவில்லையென்றும், நீண்ட நாள் கழித்தே இந்த சரணாகதியின் பலனைப் பெற்றாள் என்றும் தனிச்லோகம், ஸ்ரீவசநபூஷண ஸூத்ரம் (22), அதன் வ்யாக்யானம், ஈடு (6-10-1) முதலானவை காட்டுகின்றன. (3) உடனே கிடைத்த ஒரே பலனை வஸ்திரவிருத்தி திருநாமத்தின் பலனாகவே கிடைத்தென்றும், எம்பெருமான் (பூ₂லகரணமாய் நின்று) அதை அருளவில்லையென்றும் முமுக்ஷுப்படி ஸூத்ரங்கள், அவற்றின் வ்யாக்யானம், ஈடு (3-3-6) ஸ்ரீஸூக்திகள், தனிச்லோக ஸ்ரீஸூக்தி முதலானவை காட்டுகின்றன. இப்படி மூன்று வகைப்பட்ட இந்த ஸ்ரீஸூக்திகளில் ஒன்றையும் அஸ்வரஸமாக்காமல் நிர்வஹிக்க விரும்புகிறவர்கள் மூன்று உயிர்நிலையான விஷயங்களுக்குக் காரணம் காட்டவேண்டும்:–(1) ப்ரபத்தி அப்போதைக்குப் பலனளிக்காமல் தடைபட்டதற்குக் காரணத்தைக் காட்டியாகவேண்டும். (2) வஸ்திரவிருத்தியைத் திருநாமமே

செய்ததென்றும், எம்பெருமான் செய்யவில்லையென்றும் ஆசார்யர்கள் அருளியிருப்பதற்குக் காரணத்தைக் காட்டியாகவேண்டும். (3) த்ரௌபதியின் இந்த சரணாகதியே நீண்டநாள் கழித்துப் பலிக்கதற்கும் காரணத்தைக் காட்டியாகவேண்டும். ஸ்ரீமத்பரமஹம்ஸ எம்பார் ஜீயர் ஸ்வாமி இவற்றில் முதலாவது விஷயத்திற்குப் புருஷகாரபுரஸ்ஸரணமில்லாமையைக் காரணமாகக் காட்டினார். இரண்டாவது விஷயத்திற்கு உபாயபுத்தியற்ற கோவிந்த நாமத்தை உச்சரித்ததைக் காரணமாகக் காட்டினார். மூன்றுவது விஷயத்திற்குக் காரணம் காட்டவேயில்லை. "த்வாரகாநிலயாச்யுத" என்ற பதத்தின் வ்யாக்யானத்தில் "அபலைகளுக்கு முகங்கொடுத்த விடமன்றோ....ஆச்ரிதையான ஒருத்தியை உபேக்ஷித்தால் அபிமதர்களான பலர் முகம் உனக்குப்போகவேண்டாவோ" என்று பல்லாயிரம் பெருந்தேவிமாரையும் திரௌபதி புருஷகாரமாகப் பற்றினாள் என்று பெரியவாச்சான்பிள்ளை காட்டியிருப்பதோடு எம்பார் ஜீயர் ஸ்வாமியின் பக்ஷம் விரோதிக்கிறது. கண்ணன் ருக்மிணிப் பிராட்டியின் போகமயக்குக்களிலே அழுந்தி நினைவிழந்தமையாலே திரௌபதியின் கூக்குரல் அவன் செவியில் படவில்லை என்று அந்த ஸ்வாமி எழுதியிருப்பதற்கு ஒரு ஆதாரமுமில்லை; பொய்ச்சூது நடந்தபோது தான் ஸால்வயுத்தத்தில் ஈடுபட்டிருந்ததாகக் கண்ணன் கூறியதாகக் காட்டும் மஹாபாரதம் வனபர்வம் பதின்மூன்றுமத்தியாயம் தொடங்கியுள்ள வசனங்களோடும் இது விரோதிக்கிறது. திரௌபதிக்கு உபாயாந்தர ஸம்பந்தம் ஏற்பட இடமேயில்லையென்று அவர் வாதம் செய்வது பாரதத்தில் பீஷ்மாதிகளை அவள் பற்றியிருப்பதாகக் காட்டியிருப்பதோடும் விரோதிக்கிறது. மேலும், உபாயபுத்தியற்ற கோவிந்தநாமத்திற்குப்பலனாக வஸ்திரத்தையளித்தான் என்று கொள்ளும்போது, எம்பெருமான் வஸ்திரவிருத்தியைச் செய்யவில்லை என்று கூறும் ஆசார்ய ஸ்ரீஸூக்திகள் அமுக்கியமாகின்றன. இக்காரணங்களால் எம்பார் ஜீயர் ஸ்வாமியின் பக்ஷம் ஏற்கத்தகாததாகிறது. ஸர்வஸ்வகாரரின் பக்ஷத்தில் உயிர்நிலையான இம்மூன்று விஷயங்களுக்கும் காரணம் காட்டப்படாததோடன்றியில் ஆயிரக்கணக்கான ஆசார்யஸ்ரீஸூக்திகள் அஸ்வரஸமாகின்றனவாகையால் அவருடைய பக்ஷமும் ஏற்கத்தகாததென்பதை விரிவாக நிரூபித்தோம். அண்ணவப்பங்கார்

ஸ்வாமி நிர்வாஹத்தை அடியொற்றிய அடியேனுடைய நிர்வாஹத்தில, சரணகதியனுஷ்டித்த சிலகணங்களுக்குப் பின் கோவிந்த நாமத்தில த்ரௌபதிக்கு உபாயபுத்தி ஏற்பட்டதாக ஒப்புக்கொள்ளப்படுவதால், முதலிரண்டு விஷயங்களுக்கும் இது ஒரே காரணமாயமைகின்றது. "த்₃ரௌபத்₃யா ஸஹிதா" என்ற ச்லோகத்தில் லக்ஷ்மீ தந்த்ரவசனத்தின்படி ப்ராயச்சித்த ப்ரபத்தியனுஷ்டித்த தாகக் காட்டுகையால் மூன்றுவது விஷயத்திற்கும் காரணம் காட்டபபட்டதாகிறது. இப்பக்ஷம் ஒன்றிலேயே எல்லா மஹாபாரத ஸந்தர்பபங்களுககும் எல்லா ஆசார்யஸ்ரீஸூக்தி களுக்கும் ஸ்வாரஸ்யம் ஏறபடுகிறது. ஒன்றுக்கும் அஸ்வா ரஸ்யலேசமும் இலலை. வேறு எந்தப் பக்ஷததிலும் இவை யெல்லாவற்றுக்கும் ஸ்வாரஸ்யம் ஏற்பட வழியேயிலலை. எவரையும் வெற்றிகொள்வதற்காக நாம் ஸித்தாஞ் ஜனத்தையும் ஸம்ரக்ஷணத்தையும எழுதவில்லை. ஆசார்ய ஸ்ரீஸூக்திகளை ஸம்ரக்ஷிக்கவே இவற்றை எழுதினோம். இவற்றின் வெற்றி ஆசார்யஸ்ரீஸூக்திகளின் வெற்றியே யொழிய அடியேனின் வெற்றியன்று.

86. இத்தகைய விவாதங்களில் அவர்ஜநீயமாக நேர்ந் திருக்கக்கூடிய அபசாரங்களை க்ஷமிததருளவேண்டுமென்று ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியைப் பிரார்த்தித்துக்கொண்டு, ஸ்வாமி எம்பெருமானார் வேதார்த்தஸங்க்ரஹத்தின் கடைசியிலே இட்டிருக்கும் சுலோகத்தின் சாயையிலே ஒரு சுலோகத்தை யிட்டு இந்நூலை முடிததுக்கொள்கினறேன்.

सारासारविवेकज्ञाः गरीयांसो विमत्सराः।
प्रमाणतन्त्राः सन्तीति कृतेयं कृतिरादरात्॥

ஸாராஸாரவிவேகஜ்ஞா: க₃ரீயாம்ஸோ விமத்ஸரா:।
ப்ரமாணதந்த்ரா: ஸந்தீதி க்ருதேயம் க்ருதிராத₃ராத்॥

[ஸாராஸாரவிபாகம் அறிந்தவர்களும், மாத்ஸர்யமற்றவர் களும், ப்ரமாண பரதந்திராகளுமான பெரியோர்கள் இக் காலத்திலும் இருக்கிறார்கள் என்னும் கருத்தாலேயே ஆதரத தோடு இந்நூல் இயற்றப்பட்டது.]

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்திராதிபனுன் ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி தாஸன் இயற்றிய த்ரௌபதீ ப்ரபத்தி ஸித்தாஞ்ஜந ஸமரக்ஷணம் நிறைவு பெற்றது.

# சதகோடி பஞ்ஜநம்

1 இன்று (20-8-63) 'அஞ்சந பஞ்ஜந சதகோடியும் த்ரௌபதீ ஸம்ரக்ஷணமும்' என்னும் தூஷணச்சுவடி கிடைத்தது. நேர்மையாகத் தம்மால் பதில் எழுதமுடியாமையாலே 26-6-63ல் தம் கடிதத்தில் குறிப்பிடப்பெற்ற இருவர் பெயரிலும் இந்நூலை எழுதி வெளியிட்டு, வாய்க்கு வந்தபடியெல்லாம் அடியேனை தூஷித்து வெற்றிபெற நினைக்கிறார் ஸர்வஸ்வகாரர். இந்நூல் மதுரையில் அச்சாகிவரும்போதே பார்த்த நம் அன்பர் ஒருவர் "மதுரையில் H. S. D. பிரெஸ்ஸில் P. B. A. ஸ்வாமி பிறர் பெயரில் ஒரு நூலை எழுதிக் கேவல தூஷணபரிஹாஸங்களையும் விதண்டா வாதங்களையும் இட்டு நிரப்பி அச்சிட்டு வருகிறார். இவற்றுக்கு தேவரீர் பதிலே எழுதவேண்டாம்" என்று நமக்கு எழுதியிருந்தார். உண்மையில் பதில் எழுதவே தகுதியில்லாதது இந்த தூஷணச் சுவடி. ஆயினும், இதைக்கண்டு சிலர் மயங்கக்கூடும் என்று சுருக்கமாக பதிலுரைக்கிறோம்.

2. இந்நூலில் முதல் 26 பாராக்களில் த்ரௌபதீ ப்ரபத்திக்கு எவ்வித ஸம்பந்தமுமில்லாத சில தூஷணங்கள் அடியேன் பேரிலும், அடியேனுடைய தனிச்லோக விவரணத்தின்பேரிலும் எழுதப்பட்டுள்ளன. இவற்றுக்கு நாம பதில் எழுதப்புக்கால் விவாதம் பஹுமுகமாக விரிவடையும். ஸம்ரக்ஷணம் 9, 10 பாராக்களில் அடியேனால் வெளியிடப்பெற்ற ப்ரதிஜ்ஞைகளுக்கும் பங்கம் ஏற்படும். ஆகையால் இவற்றை நாம் த்ருணீகரித்திருப்போம். இவ் விஷயங்களில் இவர் ஜயபேரிகை கொட்டிக்கொள்வதைப் பற்றி நமக்கு யாதொரு ஆக்ஷேபமுமில்லை. உபாயாந்தரங்களுக்குப் பலகரணத்வமில்லையென்றும், உள்ளதாகச்சொல்லுவது வெறும் ஆரோபவாதமேயென்றும் இவர் எழுதியிருப்பது மிகப்பொருநதாது என்னும் நம் நிரூபணத்திற்கும் மற்றும் த்ரௌபதீப்ரபத்தி விஷயமாக இவர் எழுதியிருககும் ஒவ்வொரு வாதமும் ஒரு சிறிதும் பொருந்தாது என்று விளக்கியிருக்கும் நம் நிரூபணங்களுக்கும் யாதொரு பதிலையும் எழுதாமல் இவர் நம்மை எவ்வளவு தூஷித்தாலும், இவருக்கு அதனால் எப்பயனும் ஏற்படாது. இவருடைய நூல்களில் பல அபத்தங்கள் இருப்பது நம்மால் நிரூபிக்கப்பட்டுள்ளது; மர்மப்ரகாசம் முதலான நூல்களில் மற்ற வித்வான்களும் நிரூபித்திருக்கிறார்கள். நிற்க.

3. 'த்ரௌபதீ ஸம்ரக்ஷணம்' என்னும் தலைப்பில் த்ரௌபதீ ப்ரபத்தியைப்பற்றி இவர் எழுதியிருப்பதும் விதண்டாவாதமயமாயிருக்கிறது. ஸித்தாஞ்ஜந ஸம்ரக்ஷணத்தில் நாம் பல கேள்விகளைக் கேட்டு, அவற்றை அப்படியே அச்சிட்டு அவற்றுக்கு பதிலுரைக்குமாறு பிரார்த்தித்திருந்தோம். இந்நூலில், அக்கேள்வி

களை அச்சிடத்துணிவில்லாமல், வெறும் இலக்கங்களையிட்டுக் குறித்து "முன் பதிலிலேயே நிரூபித்தாய்விட்டது" "ஏற்கெனவே பதில் கூறப்பட்டது" "முன்னமே நிரூபிக்கப்பட்டவையே" "பூர்வமே நிரூபிக்கப்பட்டுவிட்டது" "15 to 24 இக்கேள்விகள் எல்லாவற்றிற்கும் மிகவிரிவான பதிலை எழுதியாய்விட்டது" என்னும் ரீதியிலே பதில் எழுதியிருக்கிறார். இதிலிருந்தே இவருடைய வாதத்தின் தன்மை எத்தகையது என்பதை நடுநிலையாளர்கள் நிர்ணயித்துக்கொள்ளலாம்.

4. ஸித்தாஞ்ஜந ஸமரக்ஷணங்களில் நாம் எழுதாதவற்றை எழுதியதாக வைத்து இந்நூலில் அவற்றுக்கு விரிவாக பதில் எழுத முற்படுகிறார். (1) நம்முடைய நிர்வாஹத்தில் முமுக்ஷுப்படிக்கும் ஸ்ரீவசநபூஷணத்துக்கும் எவ்வித விரோதமும் இல்லையென்றும், இவருடைய பக்ஷத்திலேயே அவற்றுக்கு விரோதம் ஏற்படுகிறதென்றும் நாம் நிரூபித்திருக்கிறோம். அப்படியிருக்கும்போது இந்நூலில் பாரா 18 முதலானவற்றில் ஸ்ரீவசநபூஷணத்துக்கும் முமுக்ஷுப்படிக்கும் விரோதம் இருப்பதாக நாம் எழுதுவதாகப் பல முறை எழுதி, அதன்மேல் விதண்டாவாதங்களை விரிவாக வெளியிட்டிருக்கிறார். (2) த்ரௌபதீ சரணாகதியானது செய்யப்பட்டபோது யாதொரு குறைவுமற்றது என்றும், அந்த சரணாகதி ச்லோகத்தைச் சொல்லும்போது திருநாமத்தில் திரௌபதி உபாய புத்தியை வைக்கவில்லையென்றும், சரணாகதியனுஷ்டித்த சில க்ஷணங்களுக்குப் பின்பே "பாஹி கோவிந்த" என்றவிடத்தில் கோவிந்த நாமத்தில் உபாயபுத்திவைத்தாள் என்றும் நாம் ஆசார்ய ஸ்ரீஸூக்திகளையும் மஹாபாரதச்லோகங்களையும் ஆதாரமாகக்காட்டி நிரூபித்திருக்கிறோம். அப்படியிருக்கும்போது இந்நூலில் பாரா 57 முதலானவற்றில், சரணாகதிச்லோகத்தைச் சொல்லும் போதே திரௌபதி திருநாமத்தில் உபாயபுத்தியைச் செய்துவிட்டதாக நாம் கூறுவதாகக் கூறிப் பல விதண்டாவாதங்களைச் செய்கிறார். (3) 'த்ரௌபத்யா ஸஹிதா:" என்றவிடத்தில் திரௌபதிசெய்தது அப்ரதானமான ப்ராயச்சித்தப்ரபத்தியேயென்றும், அதனால் ஸபையில் செய்த முதல்சரணாகதிக்கு ஏற்பட்டிருந்த தடை நீங்கி அதுபலித்தது என்றும் நிரூபித்திருக்கிறோம் நாம். அப்படியிருக்கும் போது இந்நூலில் பாரா 11 முதலானவற்றில் 'திரௌபதி செய்த இரண்டாவது பிரபத்திதான் புஷ்கலமானது; ஸபையில் பண்ணின பிரபத்தி விபலமாய் விட்டது' என்று நாம் கூறுவதாக எழுதிக் குயுக்திவாதங்களைச் செய்கிறார். (4) திரௌபதி மாநஸவாசிக காயிகரூபமான மூன்று விதமான ப்ரபத்தியையும் செய்திருந்த போதிலும், மானஸமே முக்கியமென்றும், திருநாமஸங்கீர்த்தனம் அந்த மானஸப்ரபத்திக்கு அவயவமாகமுடியாதென்றும், முக்கிய

ப்ரபத்தியைச் செய்திருக்கும்போது கௌணப்ரபத்தியின் அவச்யா பேக்ஷிதமல்லாத ஓரவயவம் பலனளித்ததாகக் கூறுவது ஒட்டா தென்றும் நிரூபித்திருக்கிறோம் நாம். அப்படியிருக்கும்போது பாரா 14 முதலானவற்றில் திரௌபதி வாசிககாயிகப்ரபத்திகளைச் செய்யவேயில்லையென்று நாம் கூறுவதாக எழுதி துர்வாதங்களைச் செய்கிறார். இவ்வண்ணமாக நாம் எழுதியிருக்கும் விஷயங்களையே மாறுபடுத்தி எடுக்கும் இவர் செய்யும வாதங்கள் எத்தகையவை யாயிருக்கும் என்பதை மத்₄யஸ்த₂ர்கள் அறிந்துகொள்ளலாம்.

5. பிறர் பெயரில் நூல்களை வெளியிடவேண்டாமென்றும், வேண்டியவர்களிடமிருந்து அபிப்பிராயபத்திரிகைகளை வெளியிட வேண்டாமென்றும் தூஷணபரிஹாஸங்களில் இழியலாகாது என்றும் நாம் பிரார்த்தித்திருந்தும், நேர்மையான வழிகளில் வெற்றி காண முடியாமையாலே பிறர்பெயரில் நூல்களை வெளியிட்டும், கடிதங்களை வெளியிட்டும், தூஷணபரிஹாஸங்களை வெளியிட்டும் வெற்றிகாண முயல்கின்றார். இது நேர்மையானவர்கள் செய்யக் கூடிய செயலன்று. இவர் எவ்வளவு தூஷணங்களை நம்மைக் குறித்துச் செய்தாலும், நாம் பதிலுக்கு இவரைப்போலே தூஷணங் களைச் செய்யமாட்டோம். பிறர் பெயரில் நூல்களையும் தூஷணக் கடிதங்களையும் வெளியிடமாட்டோம். "க்ரோயோ வர்ஷத₄ராபி₄ர் ஹந்யமாநா ந விவ்யது₂:" என்னும் நிலையிலேயே நிற்போம். சரீர பாதத்தளவும் இவர் நம்மை தூஷித்துக்கொண்டே பொழுது போக்கட்டும். பரம ஸாத்விகரான ஸ்ரீ உ. வே. காரப்பங்காடு ஸ்வாமியை "வேங்கடார்யசதகம்" முதலானவற்றில் கேட்பார் செவிசுடும் கீழ்மைவசவுகளாலே வைத இவர், நமமை எவ்வளவும தூஷிக்கவல்லவர் என்பது நமக்குத் தெரியும். இவர் எவ்வளவு தூஷணங்களைச் செய்தாலும் இவர்பக்கல் பொறையும், க்ருபையும், சிரிப்பும், உகப்பும், உபகாரஸ்ம்ருதியும் காட்டி நிற்போம்.

6. பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளை ஸம்ரக்ஷிப்பதற்காகவே நாம் இவ்விவாதத்தில் இழிந்தோம். எதிர்த்தலையிலுள்ளவர்கள் மேலும் மேலும் பூர்வாசார்யாபசாரங்களைச் செய்வதிலேயே ஊன்றிநிற்கிறார்கள். இந்நிலையில், நாம் மேலும் ஏதாவது எழுதினால் அவ்வபசாரங்கள் வளருவதற்கே ஹேதுவாகும். இதற்கு நாம் காரணமாக விரும்பவில்லை. ஆகையால் இத்துடன் இவ்விவாதத்தை முடித்துக் கொள்கின்றோம். இனி, த்ரௌபதீப்ரபத்தி விஷயமாக எவர் எது எழுதினாலும் நம்மால் கணிசிக்கப்படமாட்டாது என்பதை உறுதியாகக் கொள்வது.

சதகோடி பஞ்ஜநம் ஸமாப்தம்.

## 'வேங்கடார்ய சதகம்' 'சதகோடி' முதலானவற்றை எழுதியவர்கள் கணந்தோறும் அநுஸந்திக்கவேண்டிய ஸ்ரீவசநபூஷண ஸூத்ரங்கள்.

190. நாமரூபங்களையுடையராய் பாகவத விரோதம் பண்ணிப் போருமவர்கள் த₃க்₃த₄படம் போலே.

191. மடிப்புடைவை வெந்தால் உண்டையும் பாவும் ஒத்துக் கிடக்கும்; காற்றடித்தவாறே பறந்துபோம்.

192. ''ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத்தொழில்கள் எல்லாம் பாகவதாபசாரம் பொறாமை'' என்று ஜீயர் அருளிச் செய்வர்.

193. அவமானக்ரியா''

194. பாக₃வதாபசாரந்தான் அநேகவித₄ம்.

195. அதிலே ஒன்று அவர்கள் பக்கல் ஜந்மநிரூபணம்.

196. இதுதான் அர்ச்சாவதாரத்தில் உபாத₃ாந ஸ்ம்ருதியிலுங் காட்டில் க்ரூரம்.

197 அத்தை மாத்ருயோநி பரீக்ஷையோடு ஒக்கும் என்று சாஸ்த்ரம் சொல்லும்.

198. த்ரிசங்குவைப்போலே கர்மசண்டாளனாய் மார்விலிட்ட யஜ்ஞோபவீதந்தானே வாராய்விடும்.

199. ஜாதிசண்டாளனுக்குக் காலாந்தரத்திலே பாக₃வதனாகைக்கு யோக்₃யதையுண்டு; அதுவுமில்லை இவனுக்கு.

200. ஆரூட₄பதிதனாகையாலே.

201. இதுதனக்கு அதிகாரி நியமமில்லை

202. '' தமர்களில் தலைவராய சாதியந்தணர்களேலும் '' என்கையாலே,

203 இவ்விடத்திலே வைநதேய வ்ருத்தாந்தத்தையும், பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்த வார்த்தையையும் ஸ்மரிப்பது

204 ஜ்ஞாநாநுஷ்டாநங்களையொழிந்தாலும் பேற்றுக்கு அவர்கள் பக்கல் ஸம்பந்தமேயமையுமாப்போலே, அவையுண்டானாலும் இழவுக்கு அவர்கள் பக்கல் அபசாரமே போரும்.

205 இதில் ஜந்மவ்ருத்தாதி₃ நியமமில்லை.

206 இவ்வர்த்தம் கைசிக வ்ருத்தாந்தத்திலும், உபரிசரவஸு வ்ருத்தாந்தத்திலும் காணலாம்.